# தர்ம தரிசனம்

பி. வி. ஆர்.







கலைமகள் காரியாலயம்
சென்னை—4.

## பொருளடக்கம்





# முன்னுரை

எட்டு வருஷங்களுக்கு முன்—மங்களூர் மெயில் பொம்மிடி ஸ்டேஷனில் நின்றுகொண்டிருந்தது. மலைக் காற்றில் உடம்பின் ரத்தமே உறைந்துவிடுமோ என்ற கலக்கத்தோடு உட்கார்ந்திருந்தேன். நடுநிசியையும் குளிரின் கொடூரத்தையும் லட்சியம் செய்யாமல் ஓர் உருவம் விளக்குக் கம்பத்தில் சாய்ந்து உட்கார்ந்திருப்பதைக் கண்டேன். 'இந்த ஸ்டேஷனில், காட்டுப் பிரதேசத்தில் இங்கே எதற்காக இவள் உட்கார்ந்திருக்கிறாள்? அதுவும் இந்த வயதில்?' கேள்விகள் தொடர்ந்தன. காலம் காலமாக நின்றுகொண்டிருக்கும் மலைகளும், அழிந்து, தோன்றி, அழியும் காடுகளும் கண்முன் தோன்றின. சிந்தனை தொடர்ந்தது. கிழவி ரெயிலடியிலிருந்து புறப்பட்டாள்; நடந்தாள்; எதையோ தேடிக்கொண்டு போனாள்.

எதை?—அதைத்தான் தர்மதரிசனத்தில் காட்டியுள்ளேன்.

கதைக்குரிய விஷயத்தைத் தேடிக்கொண்டு போனால், நமக்கு முன்னால் ஓடும் நிழலைப்போல் பிடிபடாமல் ஓடிவிடுகிறது. ஆனால் கதைகளைப்பற்றியும், அவற்றிற்கு வேண்டிய விஷயங்களைப்பற்றியும் எண்ணாமல் இருக்கையில் திடீரென்று, நாமே ஆச்சரியப்படும் வகையில் பாத்தி

ரங்களும் அவர்களுடைய உணர்ச்சிகளும் உள்ளத்தில் மோதுகின்றன. நல்ல மண், சிறந்த குயவனிடம் கிடைத்து விட்டால் என்ன ஆகிறது? அவனுடைய மனோதர்மத் திற்கு ஏற்றபடி, கண்ணைக் கவரும் பாண்டமாக மாறு கிறது. கலைப் பித்துக்கொண்ட குயவன், இன்னும் வர்ணப் பூச்சு, சித்திர வேலைப்பாடு என்று இறங்கிவிடுகிறான்.

எழுத்தாளன், ஒரு கலைப் பித்துக்கொண்ட குயவன் என்று நான் சொல்லுவேன். உலகத்து மண் எப்படி அவனுக்கு அத்தியாவசியமோ அப்படித்தான், உலகத்து ஆண்களும் பெண்களும் ஜீவராசிகளும் எழுத்தாளர் களுக்குத் தேவை. கோடானுகோடி மாந்தர்களிடையே இரு முகங்களே ஒன்றாக இல்லாதபோது, இரு உள்ளங்கள் எப்படி இருக்க முடியும்? ஒவ்வொரு உள்ளமும் ஒவ் வொரு கதை. எழுத்தாளர்கள், உள்ளங்களைப் பொறுக்கி எடுக்கிறார்கள். தங்கள் மனோதர்மத்துக்கும் கற்பனைக் கும் ஒட்டியபடி, உள்ளத்தைத் தீட்டிக் கதையாகச் சொல்லுகிறார்கள்.

* * *

என் கதைகளைப்பற்றி நானே சொல்லிக்கொள்ளத் தேவையில்லை. அச்சு ரூபத்தில் வந்தபின் அவை எனக்கு மட்டுமா சொந்தம்? உங்களுக்குந்தான். ஆனால் இரண் டொரு பொதுப்படையான விஷயங்களைச் சொல்லாமல் இருக்கவும் முடியாது என்னால்.

சில நெருங்கிய எழுத்தாள நண்பர்கள் என்னிடம், 'உன் கதைகளில் பெரும்பாலும் சோகரசம் நிறைந்திருக் கிறதே!' என்கிறார்கள். சிலர், 'சம்பவங்களே போதாது... மன உணர்ச்சிகளைத்தான் அதிகம் எழுதுகிறாய்!' என்கிறார்கள்.

முதலில் சொன்னதை என்ருல் ஒப்புக்கொள்ள முடியவில்லை. முப்பட்டைக் கண்ணுடியில் சூரியனின் கதிர், ஏழு வர்ணங்களாகத் தெரிகிறது. ஒரு வர்ணத்தைத் தனியாக ஒரு சுவரில் வீசிக் காட்டினுல், அது அழுத்த மாகப் பிரகாசிக்கிறது. அதுபோலவே, சில கதைகளில் சோகம் அழுத்தமாகப் பிரதிபலிக்கலாம்.

அடுத்தபடியாக, சம்பவங்கள்; கதைகளுக்குச் சம்ப வங்கள் தேவைதாம்.

ஆனுல் தேவையின் எல்லையை யார் நிர்ணயித்திருக் கிருர்கள்? ஒரு சிறு சம்பவத்தை எடுத்துக்கொள்ளுங்கள். ஓர் அற்ப விஷயத்தில், ஒரு போர்ட்டருடனே, ரிக்ஷாக் காரனுடனே வாக்குவாதம் நடந்துவிடுகிறது. அவன் தன் னுடைய தினசரி வாழ்க்கை ஆசாரத்தில் ஏதோ பேசிவிடு கிருன். பொறுக்க முடிவதில்லை, அந்தஸ்துப் படைத்தவர் களால். அவனுடைய சில வார்த்தைகள் நெஞ்சை அறுக் கின்றன. மனச் சமாதானம் கிடைப்பதில்லை. இந்த ஒரு சிறு சம்பவத்தை நிலைக்களனுகக் கொண்டு, ஒரு சிறுகதை எழுத முடியாதா? சம்பவம், ஒரு முகம்பார்க்கும் கண்ணுடி. அதிலிருந்து தோன்றும் பலவித உணர்ச்சிகள்தாம் முக்கி யம். வாழ்க்கைச் சம்பவம் கொத்தாக, சம்பவச் சங்கிலி யாக இருப்பதில்லை. ஆனுல் கரும்பின் கணுக்களைப்போல, உணர்ச்சிக் கணுக்களாக இருக்கிறது. காதல், அன்பு, கோபம், பொருமை எல்லாமே எல்லாரிடமும் தோன்று கின்றன; மறைகின்றன. அவை தோன்றவும் மறையவும் அடிப்படையாக இருப்பது ஏதாவது ஒரு சம்பவம். கதை களில் சம்பவங்களுக்கு முக்கியத்துவம் அவ்வளவுதான். இது என்னுடைய கருத்து.

இந்தத் தொகுதியில் வரும் கதைகள் எல்லாம் ஏற்கனவே பல பத்திரிகைகளில் பிரசுரமானவை. மலையில்

பிறக்கும் நதியின் வெள்ளம் சமுத்திரத்தில் கலந்துவிடுகிறது. பின்னால் வருவது அதே வெள்ளம் அல்ல; அது போன்ற நீரே. அதேபோல் பத்திரிகைகள் காலம் என்னும் கடலில் சங்கமம் ஆகிவிடுகின்றன. ஆனால் நதிக்கு இரு மருங்கிலும் இருக்கின்றனவே கரைகள்; அவை கூடியமட்டும் நிரந்தரமாகவே நிற்கின்றன. புஸ்தகங்கள் கரைகளைப்போல், கதைகளில் சக்தியில்லாவிட்டால், சக்தியற்ற கரைகள்போல உடையலாம். இருந்தால் மலைகள்போல் காலத்தை எதிர்த்தும் நிற்கலாம். என் கதைகள் எப்படி என்று நீங்களும் காலமுந்தான் பதில் சொல்லவேண்டும்.

சாதாரணமாக முன்னுரையை யாரும் படிப்பதில்லை என்பது என்னுடைய கருத்து. சிலர் முன்னுரையை மட்டும் படிக்கிறார்கள். 'இந்த முன்னுரையே விறு விறுப்பாக இல்லையே; கதை எப்படியிருக்கும்' என்று பயந்து, சிலர் கதைகளைப் படிக்காமல் இருந்துவிடப் போகிறீர்கள். என் சக்திக்கு உட்பட்டவரையில் கதைகளை எழுதியிருக்கிறேன். உங்கள் அன்பும் அபிமானமும் இருந்தாலே எனக்கு எழுத்துச் சக்தி ஓங்கிவிடும். படியுங்கள்.

கடைசியாக—'கலைமகள்,' 'ஆ ன ந் த வி க ட ன்' 'சுதேசமித்திரன்', 'குமுதம்' முதலான பத்திரிகைகளுக்கு என் நன்றி. மேற்கண்ட பத்திரிகைகளில் வெளியான கதைகளை, புத்தக ரூபத்தில் பிரசுரிக்க அவர்கள் அனுமதி யளித்ததற்கு நான் என்றென்றும் கடமைப்பட்டவன் ஆவேன்.

பலாத்தோப்பு,<br>மைலாப்பூர்<br>25—10—'56.

பி. வி. ஆர்.

# தர்ம தரிசனம்

விந்தியப் பிரதேசத்திலே அந்த இடம் ஒரு புண்ணிய க்ஷேத்திரம். ஆட்டிவைக்கும் பரம்பொருளுக்கு உருவத்தைக் கொடுத்துக் கோவில் ஒன்றை நிர்மாணித்திருந்தார்கள் அங்கே. ஜீவன்முக்தி அடைய, ஜன்மம் சாபல்யம் பெற, ஒரு முறை தரிசித்தால் போதும் என்ற நம்பிக்கை எல்லாப் பக்தர்களிடமும் இருந்தது.

அந்தக் கிழவிக்கும் அப்படியேதான்.

முதுமையின் முத்திரைகளைத் தாங்கிய அவள், கையில் இருந்த மடிசஞ்சியுடன், தள்ளாடிக்கொண்டே ரெயிலை விட்டு நள்ளிரவில் பல பிரயாணிகளுடன் அந்த ஸ்டேஷனில் இறங்கினுள். இறங்கின மற்றவர்களெல்லாம் பக்கத்து ஊரை நோக்கி நடந்தார்கள். கிழவி அங்கேயே இரவைக் கழிப்பது என்று தீர்மானித்தாள்.

கடும் குளிர், மலைச்சாரலில் இருந்த அந்த இடத்தை ஆக்கிரமித்துக்கொண்டிருந்தது. குளிரின் கடுமை, கிழவியைப் பிளாட்பாரத்திலிருந்து, ஸ்டேஷனில் இருந்த ஒரு சிறிய அறையை நோக்கித் தள்ளியது.

அறையின் வாசலில் இருந்த ஒரு போர்ட்டர் பீடியின் புகையில் மயங்கிக் கிடந்தான். கிழவியைக் கண்டதும் அதிகாரத் தொனியில், "ஏய், எங்கே டிக்கட்?" என்று வினவினுன். கேள்வியின் கடுமையும் குளிரின் கொடுமையும் சேர்ந்து கிழவியை நடுங்கச் செய்தன. அவள் மௌனம் சாதித்தாள்.

மௌனம் போர்ட்டரின் அதிகாரத்தை வளர்த்தியது. டிக்கட் இல்லாமல் வரும் பிச்சைக்கார வர்க்கத்தையே அவன் அலச ஆரம்பித்தான். கிழங்களை எடுத்துக்கொண்டு போகாத யமனைத் தூற்றத் தொடங்கினன்.

எல்லாவற்றிற்கும் கிழவி மௌனமே சாதித்தாள். பசுவைப் பார்த்துக் குரைக்கும் நாயைப்போல், கொஞ்சம் கொஞ்சமாக ஏசலின் உஷ்ணம் குறையத் தொடங்கியது. எதிர்ப்பு இல்லாமலேயே தோல்வி அடைந்த போர்ட்டர், கிழவியிடமிருந்து ஒன்றும் எதிர்பார்க்க முடியாது என்று எண்ணியோ என்னவோ, மீண்டும் பீடியின் இன்பத்தை அநுபவிக்கத் தொடங்கினன்.

கூனிக் குறுகிக் காலத்தின் கைங்கரியத்தால் சுருங்கிப்போன கிழவியின் உடல், குளிரினல் வெடவெடத்துப் பனிக்கு ஈடு கொடுக்க முடியாமல் தவித்தது. அவள் நாக்கு மட்டும் எதையோ அடிக்கடி உச்சரித்துக் கொண்டே இருந்தது.

'நாளைக்குத் தரிசனம் கிடைத்துவிட்டால் பிறகு ஒன்றுக்கும் கவலையில்லை!' என்று அவள் எண்ணிக் கொண்டாள். 'ஆனல் தரிசனம் கிடைக்க வேணுமே!' என்ற ஏக்கமும் கூட எழுந்தது.

அறுபடாமல் சங்கிலிபோல் தொடர்ந்த அவளுடைய பக்தி மயமான சிந்தனையைத் தடுத்தது, திடீரென்று தொடங்கிய மழைச்சாரல். ஏற்கனவே, ஒற்றைத் துணிக்குள் நடுங்கிக்கொண் டிருந்த கிழவி இன்னும் நடுங்கினள். ஆனல் அவளை யாரும் லட்சியம் செய்யவில்லை.

அவள் மெள்ளக் கண்களை உயர்த்திப் பார்த்தாள். போர்ட்டர் இருந்த அறை காலியாகக் கிடந்தது. மெள்ள எழுந்து அவன்முன் சென்று, "அப்பா!" என்று கெஞ்சும் குரலில் அழைத்தாள்.

காது கேட்காதவன்போல் எங்கேயோ பார்த்துக் கொண்டிருந்த அவன் மீண்டும் கிழவியின் குரலைக் கேட்டு, "என்ன வேண்டும்?" என்று எரிந்து விழுந்தான்.

"இந்த உள்ளே ஒரு மூலையிலே ஒண்டிக்கொள்ளு கிறேனே!"

"டிக்கட் இல்லாமல் வந்தது போதாதோ? இங்கே வேறே வந்து தங்குகிருயா? இங்கே பிரயாணிகள் யாரும் தங்கக்கூடாது."

"மழை அதிகமாகிக்கொண்டு வருகிறதே!"

"ரெயிலிலிருந்து இறங்கினதும் ஊருக்குப் போகிறது தானே?" எங்கேயோ பார்த்துக்கொண்டு அவன் பேசினுன்.

"ஊரிலே எனக்கு யாரும் இல்லையே! தரிசனத்துக் காக வந்தேன். கொஞ்சம் இடம் தா அப்பா."

"சீ! பிராணனை வாங்காமல் போ!"

இதைச் சொல்லி முடிப்பதற்கும் ஸ்டேஷன் சிப்பந்தி ஒருவன் அவனை அழைப்பதற்கும் சரியாக இருந்தது. அறையைப் பூட்டிக்கொண்டு அவன் போனுன்.

பழைய இடத்திற்கே வந்த கிழவி மடிசஞ்சியி லிருந்து ஒரு கந்தலை எடுத்துத் தலையில் போட்டுக்கொண் டாள்.

'உம்! நாளைக்குத் தரிசனம் ஆய்விட்டதென்ருல் அப் புறம் ஒரு கஷ்டமும் இல்லை. இதெல்லாம் 'அவன்' ஆட்டி வைக்கிறதுதானே? மழையிலேயும் குளிரிலேயும் சிக்க வைத்து...'

அவள் பெருமூச்செறிந்தாள்.

ஒற்றைத் துணியை இழுத்துப் போர்த்துக்கொண்டு சுவரோடு சுவராக ஒண்டினபடி கண்களைச் சற்று மூடின கிழவியை எதிர்த் திசையிலிருந்து வந்த ரெயில் எழுப்பி யது, ஒரு குடும்பத்தை இறக்கிவிடவே அது நின்ருற் போல், அக் குடும்பம் இறங்கியானதும் அது புறப்பட்டது.

குடும்பத்தின் தலைவர்-ஒரு பெரியவர்-மனைவி மக்களு டன், வேலைக்காரனுடன் நேரே ஸ்டேஷன் மாஸ்டரைப்

பார்க்கப் போனார். அவருடன் ஏதோ இரண்டொரு வார்த்தைகள் பேசினார்.

அடுத்த நிமிஷம் பழைய போர்ட்டர், கையில் ஒரு ஹரிக்கேன் விளக்குடன் முன்னே வர, குடும்பம் பின்னே தொடர்ந்தது. பூட்டியிருந்த அறையைத் திறந்து, பெஞ்சியின்மேல் விளக்கையும் வைத்துவிட்டு அவன் திரும்பிப் போனான், கையில் ஒரு வெள்ளிக் காசுடன்.

குடும்பத்தின் பணியாள் படுக்கைகளை விரித்துப் போட்டுக்கொண் டிருந்தான். ஒரு பெரிய 'பிளாஸ்கி'ல் இருந்த காபியைக் குழந்தைகளும் பெரியவர்களும் ருசி பார்த்துக்கொண் டிருந்தார்கள்.

மழைச்சாரல் அதிகமாயிற்று. வெடவெடவென்று நடுங்கிக்கொண் டிருந்த கிழவியின் கிழட்டுத் தேகம் அந்த அறைக்குள் ஒரு மூலையை விரும்பிற்று. மெள்ள எழுந்து, மடிசஞ்சியுடன் அறை வாயிலுக்கு வந்தாள் அவள். அவளைப் பார்த்தார்கள், உள்ளே இருந்தவர்கள். ஆனால் கவனிக்கவில்லை.

"அம்மா!" என்று இழுத்துவிட்டுத் தயங்கினாள் அவள், மேலே தொடர முடியாமல்.

அவளுடைய கோலத்தைக் கண்டு குடும்பத்தின் தலைவிக்குப் பிரதிநிதியாகப் பேசினான் வேலைக்காரன்.

"யார், நீ?"

"உள்ளே கொஞ்சம் இடம்........" அவள் மீண்டும் தயங்கினாள். குளிரால் விறைத்துப் போயிருந்த தேகம் தள்ளாடியது.

"இடமா?...... இங்கே இடம்?"

"வெளியே உடம்பு நனைந்து நடுங்குகிறதே. இங்கே ஒரு மூலையிலே ஒண்டிக்கொள்கிறேனே."

"இங்கே இருக்கிறவர்களுக்குப் படுக்கவே இடம் போதாது. உனக்கு ஏது?"

கிழவி விடவில்லை. சிறிது நேர மௌனத்திற்குப் பிறகு மீண்டும் மெள்ளக் குரலைக் கிளப்பினுள்.

"ஏய், இடம் இல்லையென்ருல் பேசாமல் போ. இங்கே நாங்கள் எல்லாம் தூங்க வேணும்" என்று குடும்பத்தின் முதல் பிள்ளை கடுமையாகக் கூறிய பிறகுதான் அவள் பின்வாங்கினுள். வேலைக்காரன் காட்ட முடியாத அதிகாரத்தை அவன் காட்டினுன்.

'தெய்வமே, உடம்பு நனைந்து நனைந்து வெலவெலக்கிறதே!' என்று தனக்குள் சொல்லிக்கொண்டே, அவள் பழைய இடத்திற்கே வந்து உட்கார்ந்துகொண்டாள். தளர்ந்து போயிருந்த கைகள் இரண்டும் மார்பை இறுகப் பிடித்துக்கொள்ள, அவள் சிந்தித்தாள்.

'அந்த உள் கிடைத்திருந்தால் குளிருக்கு அடக்கமாக இருந்திருக்கும். உம், அதுதான் கிடைக்கவில்லையே.'

அது கிடைக்காவிட்டாலும் போகிறது. நாளைக்குத் தரிசனம் கிடைத்தால் போதும். கிடைக்காமல் என்ன? இந்த உள்ளுத்தான் இவர்கள் தரவேணும். தரிசனம் 'அவன்' அல்லவா தரவேணும்? கஷ்டப்படுத்திக் கஷ்டப் படுத்திக் கடைசியிலேதானே அவனுக்கு மனசு இரங்கும்?

பொழுது போகவில்லை. அவள் ஆயிரமாயிரம் நாமங்களை உச்சரித்த வண்ணம் பொழுதைப் போக்கினுள்.

* * *

**பெ**ரிதும் பிரசித்தி பெற்ற அந்தச் சிறிய ஆலயம், ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து ஆறு மைல் தூரத்தில் இருந்தது. சுற்றிலும் மலைகளும் காடுகளும். கோவிலுக்கருகே ஊர் ஒன்றும் இல்லை. நான்கு மைல் தூரத்தில் இருந்த கோவில் அர்ச்சகர், ஒரு நாளில் ஒரு தடவை, அதுவும் காலையில் மட்டும் வந்து கோவிலைத் திறப்பார். அவருடைய வருகைக்காகக் காத்துக்கொண் டிருப்பார்

கள், எங்கெங்கிருந்தோ வந்த நூற்றுக்கணக்கான பக்தர்கள்.

ஒரு மணி நேரந்தான் தெய்வம் தரிசனம் கொடுக்கும்; அதுவும் அர்ச்சகரின் துணையால். அந்த ஒரு மணி நேரத்தில் ஏழைகளுக்குத் தரிசனம் கிடைப்பது துர்லபம். பணம் கொடுத்தால் தரிசனம் எளிது. மூர்த்தியைக் கிட்ட இருந்து பார்க்கலாம். காரிலே வரும் செல்வர்களுடைய அர்ச்சனைகளும் அபிஷேகங்களும் முடிந்து, நேரம் இருந்து, அர்ச்சகருக்கும் மனம் இருந்தால் தர்ம தரிசனம் வழங்கப்படும்! அதுவும் பத்து நிமிஷந்தான். பக்தி வெள்ளத்திற்கு அணை கட்டப்பட் டிருந்தது அங்கே.

அர்ச்சகர் அளிக்கும் அந்த அபூர்வமான பத்து நிமிஷத்தில் நூற்றுக்கணக்கான ஏழை ஜனங்கள் முண்டியடித்துக்கொண்டு உள்ளே பாய்வார்கள். வெளி மண்டபத்தில் இருந்தபடிதான் முக்கால்வாசிப் பேரும் பார்த்து விட்டுப் போவார்கள். தேகத்திலே வலு உள்ள பக்தர்கள்தாம் மூர்த்தியை அருகில் இருந்து தரிசிப்பார்கள். அவர்களால்தான் முடிந்தது.

முதல் நாள், கிழவி கோவிலை அடைவதற்கும், அர்ச்சகர் கோவிலைப் பூட்டிப் பூட்டை இழுத்துப் பார்த்துக் கொண்டிருப்பதற்கும் சரியாக இருந்தது. திருப்தியும் அதிருப்தியும் மனச் சாந்தியும் மனத்தாங்கலும் கொண்ட பலவகைப் பக்தர்களும் திரும்பிக்கொண் டிருந்தார்கள்.

மெள்ள ஒருவனை அணுகி, "இனிமேல் கோவிலை எப்போது திறப்பார்கள்?" என்று வினவினாள் கிழவி ஆர்வத்துடன்.

"இனிமேல் நாளைக்குக் காலையில்தான்" என்று பதிலளித்துக்கொண்டே அவன் சென்றான்.

உள்ளப் பசி ஆறாமல் ஏமாற்றத்துடன் இருந்த கிழவி, கோர வயிற்றுப் பசியுடன் கோவில் வாசலில் இருந்த ஒரு திண்டின்மேல் உட்கார்ந்தாள்.

"அ...ப்......பா! அசதி தள்ளுகிறதே!" என்று அவள் முணுமுணுத்தாள்.

'கொஞ்ச நேரம் முன்னே வந்திருந்தாலாவது ஸ்வாமி தரிசனம் கிடைத்திருக்கும். அர்ச்சகர் கிட்டேயிருந்து ஏதாவது சாப்பிடுவதற்கும் வாங்கிக்கொள்ளலாம்...இப்போது என்ன பண்ணுகிறது......?'

வயிற்றைக் கிள்ளிய பசி, 'அர்ச்சகர் இருக்கிற ஊருக்குப் போயேன்' என்றது. பசியால் ஏற்பட்ட அசதியோ, 'முடியாது, முடியாது. வயிறுவது தாங்கும். உடம்பு தாங்காது' என்று பதில் அளித்தது.

கொட்டாவி விட்டுக்கொண்டே, மெள்ளக் கோவில் வாசலின்மேல் கண்களைச் செலுத்தினாள்; 'இது திறந்திருந்தால் அவனைப் பார்க்கலாம்' என்று எண்ணிக் கொண்டாள்.

ஓர் ஆள் உயரங்கூட இல்லாத குறுகிய வாயிலின் கீழ்ப்பக்கத்திலே சுழன்ற அவளுடைய கண்கள் திடீரென்று பிரகாசித்தன. சக்தியைத் திரட்டிக்கொண்டு எழுந்து அங்கே கிடந்த ஒரு தேங்காய் மூடியையும் இரண்டு பழங்களையும் எடுத்துக்கொண்டு வந்தாள் திண்டிற்கு.

'பாவம்! யாரோ மறந்து வைத்துவிட்டுப் போய்விட்டார்கள். அவர்கள் கேட்க வருகிறார்களா பார்க்கலாம்' என்று எண்ணியபடி அவற்றை மடிசஞ்சியில் வைத்தாள்.

தலைக்கு நேராக வெயில் அடிப்பதைக் கண்ட அவள், அருகில் இருந்த அருவியின் கரைக்குச் சென்று ஒரு மரத்தடியில் படுத்துக்கொண்டாள், மடிசஞ்சியைத் தலையணையாகக் கொண்டு.

எல்லாவற்றையும் மறந்து உறங்கினவள், கஷ்டப்பட்டுக் கண் விழித்தபோது கதிரவன் மேற்கே மறைந்து கொண்டிருந்தான். ஆள் அரவமே இல்லாத இடத்தில்,

பலவிதப் பட்சி ஜாலங்கள், இன்பமாகப் பாடிய வண்ணம் மரங்களை நாடிக்கொண் டிருந்தன.

ஆனுல் கிழவியின் வயிறு அலறி இரைந்தது.

அருவியில் இருந்த தண்ணீரால் முகத்தையும் கை கால்களையும் அலம்பிக்கொண்டு மடிசஞ்சியை அவிழ்த்தாள். மெதுவாகப் பழங்களைப் புசித்தாள். தேங்காயை ஒரு கல்லின் மேல் வைத்து நெத்தி, ஒரு துண்டுத் தேங்காயையும் ருசி பார்த்தாள். அடுத்த நிமிஷம், 'உ...ம்...ம். முற்றின காய் பித்தம்' என்று தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டு அதை மடிசஞ்சயிலே வைத்தாள்.

'இன்றைக்கு இப்படிப் போயாச்சு. நாளைக்கு என்ன ஆகிறதோ!' என்று எண்ணிக்கொண்டே, கோயில் வாசலில் வந்து படுத்த கிழவிக்குத் தூக்கம் வரவில்லை.

'மத்தியான்னம் பூராத் தூங்கியாச்சு. இனிமேல் எங்கே தூக்கம் வரப் போகிறது?'

'நடுக்காட்டிலே தனியாக இருக்கிறேமே' என்ற பயம் திடீரென்று அவளையும் அறியாமல் தோன்றியது.

'இங்கே யாரும் மனுஷர் இல்லையே. பக்கத்து ஊருக்கே போய் இருக்கலாம்...'

'ஆனுல் இங்கே என்ன பயம்?' என்று தன்னையே கேட்டுக்கொண்டாள்.

'மனுஷர்கள் பயத்தை எப்படித் தெளிவிப்பார்கள்? 'அவனை' நினைத்தால் எல்லாப் பயமும் பறந்து போய் விடும்.'

பல விதச் சிந்தனைகள், நேரம் ஆக ஆக அவளுடைய மனத்திலிருந்து மறைந்து மறைந்து, கடைசியில் உள்ளம் ஒன்றையும் உள்ளே விடாமல் ஓய்வு பெற்றது.

மறு நாள் காலையில் வந்த அர்ச்சகர், நாலைந்து அர்ச்சனை அபிஷேகங்களை அவசர அவசரமாக முடித்துவிட்டு,

வீட்டுக்குப் போகப் பறந்தார். கூட்டம் ஏராளமாக இருந்தது. எல்லோருக்கும் முன்னால் தரிசனத்தைப் பெறவேண்டும் என்று முன்னால் வந்து காத்துக் கிடந்த கிழவி, எல்லோருக்கும் பின்னால் நின்றுகொண் டிருந் தாள். வயசிலே குறைந்தவர்கள், வலுவிலே நிறைந்த வர்கள் அவளுக்கு முன்னால் நின்றுகொண் டிருந்தனர்.

கூட்டம் முன்னேறியது. ஒவ்வொரு நிமிஷமும் ஒவ் வொரு யுகமாகக் கழிந்தது கிழவிக்கு. ஒவ்வோர் அடி தூரமும் ஒவ்வொரு மைலாக அவளுக்குத் தோன்றியது. அவளுடைய மனத் துடிப்பையும் ஆர்வத்தின் வேகத்தை யும் அறியாத கூட்டம் உள்ளே மேலும் போக முடியாமல் நின்றது.

அன்று கடைசியில் கிழவி வெளி மண்டபத்தில் கால் வைக்கும்போது, மூர்த்தி பள்ளிகொண் டிருந்த இல்லத்தின் வாயிலைப் பூட்டிக்கொண் டிருந்தார் அர்ச்சகர்.

'இன்றைக்கும் இப்படியா ஆகவேணும்? ஏங்கின தற்கெல்லாம் இதுதானா பலன்? எப்பொழுதுதான் உனக்கு மனசு இரங்கப் போகிறதோ?' அவள் மெள்ள அருவியை நோக்கி நடந்தாள்.

குளிர்ந்த காற்று வீசின அந்த இடத்திலேயே பகல் முழுதும் உட்கார்ந்து உட்கார்ந்து பொழுதைக் கழித் தாள். வயிற்றுப் பாட்டைத் தீர்க்க, காட்டுக் கனிகளும் கிழங்குகளும் அருவியின் தெளிந்த நீரும் முன்வந்தன.

சாயங்காலத்துக்கு மேல்தான் கிழவியின் ரத்தம் சூடேறத் தொடங்கியது. இரண்டு நாளாகக் கடுமையாக அடித்த குளிரின் தாக்குதல், அவள் உடலில் வேலை செய்யத் தொடங்கியது; அதைக் கொஞ்சங் கொஞ்ச மாக உணர்ந்தாள். வயிறு, சக்தி அளிக்கும் நிலைக்கு, உணவைப் பெறவில்லை. அருவியின் குளிர்ந்த நீர் வேறு உடம்பைப் பாதித்தது.

'உடம்பு கொதிக்கிறதே; தலையைச் சுற்றுகிறதே! இப்போது என்ன செய்கிறது?' என்று ஏங்கினாள்.

மூன்றும் பிறை, வானத்தில் வேகமாகப் பிரயாணமாகிக் கொண்டிருந்தது.

'இன்றைக்கு ராத்திரியை எப்படிக் கழிக்கிறது? நாளைக்காவது கிடைக்கவேணுமே தரிசனம். அதுவரையில் உடம்பு சரியாக இருக்கவேணுமே!'

எண்ணச் சுழல்கள் முடிவதற்குள் கண்கள் மூடி விட்டன.

காலையில் ஜுரம் சிறிது தணிந்திருந்தது. இருந்தாலும் அசதி அவளை விடவில்லை. எல்லையில்லாத பக்தியின் சக்தியால், முழுப்பலத்துடன் அவள் உள் மண்டபத்துக்கு வந்து திடீரென்று நின்றுவிட்டாள். அதற்கு மேல் அவளால் நகரக்கூட முடியவில்லை.

'இன்றைக்குச் சுவாமியைப் பார்த்திருக்கலாம், அசதி மட்டும் இல்லாதிருந்தால்...' என்று முணுமுணுத்துக்கொண்டே அவள் தன்னுடைய இடத்திற்கு வந்து உட்கார்ந்தாள். தனக்குத் தரிசனமே கிடைக்காதோ என்ற சந்தேகமும் உண்டாகியது. 'இன்றைக்கு இல்லை. ஒருவேளை நாளைக்குக் கிடைக்கும்' என்ற திருப்தியும் கூடவே எழுந்தது.

நான்காம் நாள் அவளால் எழுந்திருக்கவே முடியவில்லை. ஐந்தாம் நாள் யாரோ அவளை எடுத்து ஒரு மரத்தின் அடியில் கிடத்தினார்கள்.

தேகத்தில் அசதி அதிகமாகியது. ரத்தம் உறைந்து, நரம்புகள் தளர்ச்சி அடைந்து, கண்கள் இருண்டு, செய்வதொன்றும் அறியாமல் அவள் படுத்துவிட்டாள். அவளுடைய நம்பிக்கை மட்டும் மாறவில்லை. பல காலமாக அவள் அந்த மூர்த்தியைப்பற்றிக் கேட்டிருக்கிறாள். அவருடைய திவ்ய ரூபத்தின் மகிமையை எவ்வளவோ தடவை கேட்டுக் கேட்டு அவளுடைய ஆவல் தீவிரம் அடைந்திருக்கிறது. அவள் கற்பனை செய்து, கனவு கண்டு, அகக் கண்களால் அந்த மூர்த்தியைக் கண்டு கண்டு பரவசம் அடைந்தாள். இந்த ஊனக்

கண்ணால் ஒரு முறையாவது பார்த்துவிட வேண்டும் என்று துடியாகத் துடித்தாள்.

ஆறுவது நாள் காலையில் மெள்ளக் கண் விழித்தாள். அன்று ஏதோ விசேஷம்; எல்லா நாளையும்விட அதிகமாகப் பக்தர்கள் கூடியிருந்தார்கள். வழக்கத்திற்கு மாறாகக் கொஞ்ச நேரம் அதிகமாகவே கோவில் திறந்திருந்தது. அந்த அதிகப்படி நேரம் அர்ச்சகருக்குப் பிரயோசனமாயிற்று. பணம் படைத்தவர்களை அதிகமாக உள்ளே விட்டார். கடவுளின் உருவத்தைக் காண அவர்கள் கொடுத்த காணிக்கை அவருக்கு உத்ஸாகத்தை அளித்தது. ஆனால் எப்போதும்போல் தர்மதரிசனம் பத்து நிமிஷங்களுக்குத்தான். ஏழைகளுக்கு அன்று ஒரு விசேஷமும் இல்லை.

சாதாரணக் கூட்டத்திலேயே புக முடியாத கிழவி அந்தப் பெரிய பக்தர்கள் கூட்டத்தைக் கண்டு மலைத்துப் போய், இருந்த இடத்திலேயே உட்கார்ந்துவிட்டாள்.

அன்று அவள் உள்ளே செல்ல முயற்சியே செய்யவில்லை. தேகநிலை அப்படி இருந்தது. எல்லோரையும் வெளியே அனுப்பிவிட்டு அர்ச்சகர் மெள்ளக் கோவிலைப் பூட்டிவிட்டு வந்தார்.

"ஸ்வாமி......!" என்று தொண்டையின் ஆழத்திலிருந்து கிளம்பின தீன ஸ்வரத்தில் கூப்பிட்டாள் கிழவி.

"என்ன வேணும்?"

"அஞ்சாறு நாளாய் இங்கேயே இருக்கிறேன், தரிசனத்துக்கு. தள்ளாத வயசிலே உள்ளே போக முடியவில்லை. நீங்கள் மனசு இரங்கி..." அதற்குமேல் அவளால் பேச முடியவில்லை.

"நான் இப்போது என்ன பண்ணுகிறது? கோவிலைப் பூட்டியாச்சு. நாளைக்குப் பார்க்கலாம்" என்று அலட்சியமாகக் கூறிக்கொண்டே அவர் சென்றார். வார்த்தைகள் முழுதும் அவள் காதில் விழுவதற்குள் அவர் கொஞ்ச தூரம் போய்விட்டார்.

அன்றிரவு அசதியுடன் படுத்தாள் கிழவி. மூச்சு லேசாக வந்துகொண்டிருந்தது. பகவானின் நாமங்கள் மட்டும் தவறாமல் உதடுகளினிடையே சஞ்சாரம் செய்து கொண்டிருந்தன.

நள்ளிரவில் எங்கோ தூரத்திலிருந்து ஒருவன் விரைந்து வருவது தெரிந்தது. காலடிச் சத்தமும், அவன் கையில் இருந்த ஒரு தீப்பந்தத்தின் ஒளியும் வரவர அதிக மாகிக்கொண்டே வந்தன.

கோவில் வாசலை அடைந்த அவன், கிழவியின் உருவத்தைக் கண்டு முதலில் திடுக்கிட்டான். அடுத்த கணம் தைரியத்துடன், "யார் அது?" என்று கேட்டுக் கொண்டே தீவட்டியை அவளுடைய முகத்துக்கு எதிரே பிடித்தான்.

உறக்கமின்றி அரை உணர்வுடன் இருந்த கிழவிக்குக் கண்கள் கூசின. யாரோ வழிப்போக்கன் ஒருவன் வந்திருக்கிறான் என்று எண்ணி அவள் அப்படியே இருந்து விட்டாள்; எழுந்திருக்க முயலவும் இல்லை; கேட்ட கேள்விக்குப் பதில் பேசவும் இல்லை.

ஆனால் வந்தவன், பந்தத்தை ஒரு மூலையில் சாய்த்து விட்டு அவளைத் தன் முரட்டுக் கையால் தட்டி எழுப்பினான்.

"ஐயோ அப்பா!" என்று முனகினாள்.

"நீ யார்?" என்று வினவினான் அவன்.

"..................."

"ஏய், நீ யார்? எங்கேயிருந்து வருகிறாய்?"

"நானா? நானா? நான் இந்தத் தெய்வத்தைத் தரிசிக்க வந்தேன்......" அவள் தொண்டை அடைத்தது. குரல் கம்மியது.

"ஏன் இங்கேயே இருக்கிறாய்?"

"இன்னும் தரிசனம் கிடைக்கவில்லை. போக்கிடம் வேறு இல்லை. ஆறு நாளாக இங்கேயேதான் இருக்கிறேன்." அசதி பேச்சைத் துண்டித்தது.

அவன் அவளுடைய நிலையைக் கண்டான்; உள்ளத்தின் ஆழத்தில் புதைந்திருந்த உணர்ச்சிகளின் பிரதிபலிப்பாக வந்த வார்த்தைகளைக் கேட்டான். அவன் மனம் இரங்கியது. முதலில் இருந்த ஆத்திரம் குறைந்தது.

"சரி, என்கூட வா. உனக்கு ஸ்வாமியைத்தானே பார்க்கவேணும்? நான் காட்டுகிறேன், எழுந்திரு." அவன் அலட்சியமாக மூச்சுவிடாமல் பேசினன்.

கிழவி அசந்து போய்விட்டாள். கண்களை அகல விரித்து, வந்தவன் யார் என்று பார்த்தாள். அவன் கோவில் வாசல் பூட்டைத் திறப்பதில் ஈடுபடத் தொடங்கினன்.

கோவிலைத் திறந்த பின்பும் அங்கேயே உட்கார்ந்திருந்த கிழவியை மீண்டும், "சீக்கிரம் எழுந்திரு" என்று துரிதப்படுத்தினன்.

ஆனல் கிழவியால் எழுந்திருக்க முடியவில்லை. அவனே வந்து கைகொடுத்து உள்ளே அழைத்துப்போய், கர்ப்பக்கிருகத்தின் முன்னே நிறுத்தினன்.

'இவன் யார்? இப்போது எதற்காக எங்கே இருந்து வந்திருக்கிருன்? ஒருவேளை தெய்வமே இவன் ரூபத்திலே வந்திருக்கிறதோ? இல்லாவிட்டால் இந்த அர்த்தராத்திரியிலே யார்தான் வந்திருக்க முடியும்?' சிந்தனைகள் கர்ப்பக்கிருகம் திறந்தவுடன் முடிந்தன. அவனை விட்டுவிட்டு 'அவனை' நினைக்கத் தொடங்கினள்.

கர்ப்பக் கிருகத்தின் வாயில் முழுவதும் திறந்திருந்தது. ஆனல் அவன் மட்டும் வெளியே வரவில்லை. உள்ளே ஒரு நந்தா விளக்கின் பிரகாசத்தில் கிழவி விக்கிரகத்தைப் பார்த்தாள். என்ன அற்புதமான மூர்த்தி! அவள் உடம்பு புல்லரித்தது. அவள் கண்களுக்கு அது ஜகஜ்ஜோதியாகத் திகழ்ந்தது!

வெளியே வந்த அவன் மீண்டும் தீவட்டியுடன் உள்ளே போனான். இப்பொழுது கர்ப்பக்கிருகத்துக்குள் பிரகாசம் அதிகமாக இருந்தது. விக்கிரகத்தின் உருவம் கிழவியின் கண்களுக்கு அன்பின் உருவமாக, ஞானத்தின் உருவமாகத் தோன்றியது.

பார்த்துப் பரவசமடைந்து சிறிது நேரம் தன்னை மறந்திருந்தாள் கிழவி. சற்றே அவள் கவனம் அந்த மனிதன்மேல் பாய்ந்தது. அவனுடைய கைகள் விக்கிரகத்தின் நகைகளைக் கழற்றிக்கொண் டிருந்தன. உண்டியல் பாத்திரம் வேறு திறந்திருந்தது.

சந்தேகம் தோன்றின கணமே, கிழவிக்குத் தெளிவும் உண்டாகிவிட்டது.

"ஐயோ......பாவி!" என்று அவள் கத்தினாள், தன்னையும் அறியாமல்.

"ஏய்! என்ன அங்கே கத்துகிறாய்?" என்று சொல்லிக்கொண்டே அவன் தன் வேலையைக் கவனித்தான்.

"தெய்வத்தைத் தீட்டாக்குகிறாயேடா, நகையையெல்லாம் கழற்றுகிறாயேடா, சண்டாளா!"

கையில் இருந்ததையெல்லாம் அங்கேயே போட்டு விட்டுத் திடுதிடுவென்று வந்த அவன் அவளுடைய கைகளைக் கரகரவென்று பிடித்து, "சனியன், இங்கே கத்துகிறாயா? போ வெளியே" என்று வாசல் பக்கம் இழுத்துக்கொண்டு போனான்.

ஆவேசத்துடன் சக்தியைத் திரட்டிக்கொண்டு அவள் திமிறினாள். ஆனால் முரட்டுக் கைகளுக்கு அவளால் ஈடுகொடுக்க முடியவில்லை. உள் மண்டபத்திலேயே விழுந்து விட்டாள்.

கருங்கல் தரையில் விழுந்த அவளை லட்சியம் செய்யாமல் அவன் நகைகளையும் உண்டியிலிருந்து எடுத்த பொருளையும் எடுத்துக்கொண்டு வெளியேறினான்.

உணர்வு இழந்துகொண் டிருந்த கிழவி மெல்லக் கண்களை ஏறிட்டுப் பார்க்க முயன்றாள். கர்ப்பக்கிருகத்தில் நந்தாவிளக்கின் பிரகாசம் மட்டும் மங்கலாக அவளுக்குத் தோன்றியது. தேகத்திலிருந்த எல்லா நரம்புகளிடமிருந்தும் சக்தியைத் திரட்டிக்கொண்டு, ஒரே விநாடியில் எழுந்து, ஆபரண அலங்கார மில்லாமல் விளங்கும் விக்கிரகத்தை அவள் நன்றாகப் பார்த்தாள்.

அடுத்த கணம், அவளிடமிருந்த சக்தி பிரிந்து, அந்தச் சடலத்தைக் கீழே தள்ளிவிட்டுப் புறப்பட்டது. சக்தி பிறகு மீளவே இல்லை.

# வையாபுரியின் உயிர்

மலை அடிவாரத்தில் வளைந்து வளைந்து புதர்களுக்கிடையே பாம்புபோல் நீண்டுகொண்டிருந்த ஒற்றை அடிப்பாதை வழியாக, வையாபுரி ஏதோ சிந்தனையில் ஆழ்ந்த வண்ணம் சென்றுகொண்டிருந்தான்.

“சீ, என்ன வேலை, மலையிலேயும் காட்டிலேயும்? முப்பது ரூபாய் சம்பளத்திற்கு முதுகை ஒடிக்கிறார்கள்!” அவன் இளம் மனம், முற்றின உள்ளத்தைப்போல் அலுத்துக்கொண்டது.

வறண்ட உள்ளத்தோடு அவன் நடந்தான். எங்கேயோ பார்த்துக்கொண்டே.

அந்த வளைவைத் தாண்டிப் புதர்களுக்கிடையில் மறைந்திருப்பான். “இந்தா அப்பா, தம்பி!” என்று திடீரென்று கிளம்பின குரல் அவனை ஒரு கணம் தூக்கி வாரிப்போட்டது. ஒலி வந்த திசையை நோக்கினான். குரலைக் கேட்டுத் திடுக்கிட்ட வையாபுரி, உருவத்தைக் கண்டதும் பயந்தே போய்விட்டான்.

“இந்தா அப்பா. தம்பி, உன்னைத்தான்; இங்கே வா!”

மறுக்கத் தைரியமும் இல்லாமல், செல்ல மனமும் இல்லாமல் அவன் அந்த உருவத்தை நோக்கித் தயங்கித் தயங்கி நடந்தான்.

கருகருவென்ற முகிலை ஒத்த நிறத்தோடு, ஆஜானு பாகுவாக, தன் வலது கையிலே உயிரற்ற ஒரு காட்டுப் புறாவுடன் அவன் நின்றுகொண் டிருந்தான். நாட்டிலே வையாபுரி அவ்வளவு உயரமான மனிதனைப் பார்த்ததே இல்லை. முன் பின் பார்த்திராத நடை உடை பாவனைகள். காய்ந்துபோன மரப்பட்டை அவனுடைய இடையைச் சுற்றியிருந்தது. மார்பு வரையில் வளர்ந்திருந்த தாடியை அவன் இடது கை உருவிக்கொண் டிருந்தது. முரட்டுத் தேகமான போதிலும், முகத்திலே விவரிக்க இயலாத சாந்தமும், கண்களிலே தீட்சண்ணியமும் நிறைந்திருந் தன. பார்த்தால் வயசானவனைப்போல் இருந்தாலும் முதுமையின் முத்திரைகள் முகத்தில் காணப்படவில்லை.

அந்தக் காட்டு மனிதனை, நடுங்கும் உள்ளத்தோடு நெருங்கினன் வையாபுரி.

"தம்பி!"

"......"

"என்னப்பா, நீ ஊமையா?"

கேள்வி, கனிவு நிறைந்த குரலில் வந்ததால், தைரியத் துடன் வையாபுரி, "இல்லை" என்று தலையை ஆட்டினன்.

"பின் ஏன் வாயைத் திறக்க மாட்டேன் என்கிருய்? நான் உன்னை ஒன்றும் செய்துவிட மாட்டேன். நீ யார்? இங்கே என்ன செய்துகொண் டிருக்கிருய்?"

'அந்தக் கேள்வியை நான் அல்லவா உன்னிடம் கேட்க வேண்டும்?' என்று நினைத்த வையாபுரி சமாளித்துக் கொண்டே, "காட்டிலாகாவிலே 'ஆர்டர்லி'யாக இருக் கிறேன்" என்முன்.

"இதற்கு முன்னலே இங்கே என்னைப் பார்த்திருக் கிருயா?"

"இல்லை. அதுதான் பயந்து போய்விட்டேன்."

"பார்த்திருக்கவும் முடியாது. நான் வர வர வெளி உலகத்தையே பார்க்க வருகிறதில்லை. அதிருக்கட்டும். இப்போது உன்னால் எனக்கு ஒரு காரியம் ஆகவேண்டுமே" என்று சொல்லிக்கொண்டே கையில் இருந்த செத்த புறுவையும், வையாபுரியையும் மாறி மாறிப் பார்த்தான்.

வையாபுரி பயத்துடன் கண்களை உருட்டினான். அந்த மனிதனை முதல் முதலாகப் பார்த்ததிலிருந்து, அவன் ஏறிட்டுப் பார்த்தவன் அல்ல. கால் கட்டைவிரலால் நிலத்தை நெருடிய வண்ணம், பயம் கலந்த நிதானத் துடன்தான் பதில் அளித்துக்கொண் டிருந்தான்.

இப்போது அவனால் கேள்விக்குப் பதில் அளிக்க முடியவில்லை. போயும் போயும் தன்னால் அந்தக் காட்டு மனுஷனுக்கு என்ன காரியம் ஆகிவிடப் போகிறது என்று நினைத்தான்.

"என்ன தம்பி, நான் கேட்கிறதற்குப் பதில் சொல் லாமல் பூமியை நெருடிக்கொண்டு நிற்கிறாயே!"

"என்னால் என்ன காரியம்......?" கொஞ்சம் கிளம்பிய தைரியத்தையும் பயம் மறைத்து, வார்த்தைகளைத் துண் டித்தது.

"இதோ பார்: பயப்படாமல் கேள். இந்தப் புறு செத்துப் போய்விட்டது. ஆனால் சாவதற்கு முன்னே அது தன் குஞ்சுக்கெல்லாம் கூட்டைச் சரியாகக் கட்டா மல் போய்விட்டது. இன்றைக்கு ராத்திரி, பாம்போ பருந்தோ இதனுடைய குடும்பத்தையே விழுங்கி, ஏப்பம் விட்டுவிடும். அதனாலே......"

"எனக்குக் குஞ்சுகளுக்குக் கூடு கட்டத் தெரியாதே!!' வையாபுரிக்கு வேறு என்ன சொல்வது என்று தெரிய வில்லை.

"அட பாவமே! உன்னைக் கூடு கட்டச் சொல்ல வில்லை. என்னோடு என் குகைக்கு வா! யாராவது பார்ப் பதற்கு முன்னாலே எல்லாவற்றையும் விவரமாகச் சொல் கிறேன். பயப்படாமல் வா..."

மறுத்தால் என்ன செய்வானோ என்ற பயத்தாலோ, அவன் அளித்த உறுதி மொழியால் ஏற்பட்ட தைரியத்தாலோ, வையாபுரி அவனைப் பின் தொடர்ந்து அவன் சென்ற குகையையும் அடைந்தான்.

"இப்படி உட்கார்" என்று சொல்லிவிட்டு, "இன்றைக்கு ராத்திரிக்குள்ளே அந்தக் கூட்டைச் சரியாகக் கட்டாமற் போனால், நாளைக்கு அந்தக் குஞ்சுகளின் கதி என்ன ஆகுமோ? அதனாலே..."

"அதனாலே?"

"அதனாலே, இந்தச் செத்த புறா இப்போது, பறந்து கூட்டைச் சரியாகக் கட்டவேண்டும்..."

வையாபுரி வாயைப் பிளந்தான்.

"என்ன தம்பி, அதிசயப்படுகிறாய்? இப்போது நீ இந்தப் புறாவுக்குள்ளே புகுந்து பறக்கப் போகிறாய்!"

"ஐயையோ!"

"பயப்படாதே."

"என்னாலே முடியாது. நீயே அதற்குள்ளே புகுந்து பறக்கிறதுதானே?"

"என்னாலே அது முடியாது. மனித தேகத்திலேதான் என் உயிர் செல்லும்... ஆனால் உன்னால் முடியும். என் சக்தியால்..."

"ஐயோ! நீ சொல்கிறது ஒன்றும் புரியவில்லையே! என்னாலே புறாவுக்குள்ளே போக முடியாது."

"நீயாகப் போகாவிட்டால், நானாக உன்னைப் போகச் சொல்வேன்." குரலிலே கடுமையும் அதிகாரமும் ஒலித்தன.

"ஹா!"

"ஆமாம். இப்போதே உன்னைக் கொன்றுவிடுவேன். அப்புறம் நிரந்தரமாகப் புரு உயிரோடு இருக்கும். நான் சொல்கிறபடி கேட்டால் அரைமணி நேரத்துக்கு அப்புறம் பழையபடி ஆகிவிடலாம்."

"ஆனால், கூடு கட்டத் தெரியாதே!"

"இப்போது தெரியாது. புருவாக ஆகிவிட்டால் நீயே எல்லாம் தெரிந்துகொள்வாய்..." என்று கூறிவிட்டு, "உன் உடலை நீ இங்கே திரும்பும் வரையில் நான் பார்த்துக் கொள்வேன். தயாரா?" என்று கேட்டான் அந்த அசுர மனிதன்.

வையாபுரி கண்களை இறுக மூடிக்கொண்டான். உள்ளத்திலே நிறைந்து பொங்கிக்கொண் டிருந்த பயம் அவனுடைய உடலை வேர்க்கச் செய்தது. திடீரென்று தேகத்திலே மின்சாரம் பாய்வதுபோன்ற உணர்ச்சி! ரத்தக் குழாய்களிலுள்ள உதிரமெல்லாம் உறைந்து போய் விட்டது போன்ற பிரமை! யாரோ பயங்கர மனிதன் ஒருவன் குரல்வளையைப் பிடித்து நெறிப்பதுபோன்ற காட்சி! 'ஐயோ!' என்று அலற வேண்டும்போல் இருந்தது. ஆனால் அதற்குள் உடல் சாய்ந்தது.

அடுத்த கணம், புரு பறந்துகொண் டிருந்தது, கன வேகமாக, வானவெளியில்!

* * *

அரை மணி நேரத்துக்குப் பிறகு குகையை வந்து அடைந்த புருவைப் பார்த்து அந்த மனிதன், "அப்போது அப்படிப் பயந்தாயே!" என்று சொல்லிச் சிரித்தான்.

அடுத்த நிமிஷம் புரு மீண்டும் செத்து விழுந்தது.

தூங்கி எழுந்திருப்பவன்போல வையாபுரி எழுந்து உட்கார்ந்தான்.

"அப்பாடா!" என்ற பெருமூச்சு அவனிடமிருந்து கிளம்பியது.

"உன்னால் ஆகவேண்டிய காரியம் ஆகிவிட்டது. இனி நீ போகலாம்" என்றான், அந்தக் காட்டு மனிதன்.

"நான் போய்விடுகிறேன். அதற்கு முன்னாலே இந்த வித்தையை எனக்குக் கற்றுக்கொடுத்துவிடு" என்று வேண்டினான் வையாபுரி.

"நீ செய்த உதவிக்குச் சொல்லித்தரலாம். ஆனால்..."

"ஆனால் என்ன?"

"ஆனால் நீ ஒரு நாட்டு மனிதன்; சுயநலக்காரர் கும்பலைச் சேர்ந்தவன். உன் சொந்த இன்பத்துக்காக இந்த வித்தையை உபயோகித்துக்கொள்வாய்."

"இல்லை; நான் அதுமாதிரி செய்ய மாட்டேன். இப்போது, நான் அந்தப் புறுவுக்காகத்தானே செய்தேன்? அது மாதிரி பிறர் உதவிக்காகப் பயன்படுத்திக்கொள்ளுகிறேன்."

"நீ அந்த மாதிரி செய்ய வேண்டுமென்று நான் கட்டாயப்படுத்தவில்லை. யார் தேகத்தினுள்ளேயும் நீ ஒரு தடவை செல்லலாம். பிறகு உன் உடலுக்கே திரும்பலாம். ஆனால் பிறரை வஞ்சிக்கவோ சுயநலத்தைக் கருதிப் பிறரைக் கெடுக்கவோ முயலக் கூடாது."

"சரி."

"சத்தியம் செய்து கொடு. உன் உடலின் மேலே ஆணை வை. நீ வேறு கூட்டுக்குள் புகுந்தால், நீ எங்கிருந்தாலும் உன் கூட்டை இங்கே கொண்டுவந்து நீ வரும் வரைக்கும் பார்த்துக்கொள்ளுவேன்."

காட்டு மனிதன் விரும்பியவாறு ஆணை அளித்துவிட்டு, அவன் ரகசியமாகக் கற்றுக்கொடுத்த வித்தையையும் பெற்றுக்கொண்டு வெற்றி முரசுடன் திரும்பும் வீரனைப்போல் திரும்பினான் வையாபுரி. முப்பது ரூபாய் சம்பளம் இப்போது அவனுக்குக் காலடியிலே கிடக்கும் மண்ணைப்போல் இருந்தது. 'ரேஞ்சர்' விசுவநாதனையும், 'பாரஸ்ட் ஆபீஸர்' பரமேசுவரன் நாயரையும், மற்ற மனிதர்களையும் அவன் மனம் திருணமாக மதித்தது.

யாருக்கும் கிட்டாத, கிடைத்தற்கரிய பொக்கிஷம் தனக்குக் கிடைத்துவிட்டது என்ற பெருமிதத்தோடு அவன் நடந்தான்.

*　　*　　*

மறுநாள் காலையில் எழுந்திருந்ததும் எழுந்திருக்காததுமாக வையாபுரியின் காதுகளில், 'அரும்பாக்கம் மலை அடிவாரத்திலே, கன்டிராக்டர் கந்தசாமிப்பிள்ளை, விஷம் தீண்டப்பட்டு, விழுந்து கிடக்கிருர்' என்ற எதிர்பாராத பயங்கரச் செய்தி விழுந்தது.

'போகிருன் கஞ்சன்! செத்தாச்சோ இல்லையோ! இருந்தாலும் யாருக்கும் ஓர் உபயோகமும் இல்லை; செத்தாலும் நஷ்டம் இல்லை!' என்று எரிச்சலுடன் எண்ணியவன், 'கன்டிராக்டருடைய சொத்து என்னவாகும்?' என்பதை நினைத்துப் பார்த்தான்.

"யாருக்கும் இல்லாமல் தாயாதிகள் அடித்துக் கொண்டு போய்விடுவார்களே பத்து லட்சம் ரூபாயையும்!"

திடீரென அவன் உள்ளத்திலே புதிய யோசனை உதயமாகியது.

அடுத்த அரைமணி நேரத்தில் அவன் அரும்பாக்கத்தில் இருந்தான்.

நாலைந்து பேர் கந்தசாமியைச் சுற்றி நின்றுகொண்டிருந்தனர். "உயிர் போய்விட்டது" என்ருன் ஒருவன்.

வையாபுரி உடலை நெருங்கினுன். நாசித் துவாரங்களில் கை வைத்துப் பார்த்தான். உள்ளம் சந்தோஷத்தால் துள்ளிக் குதித்தது.

"யார் உயிர் போய்விட்டதென்று சொன்னது? இன்னும் ஒரு மணி நேரத்திலே, கன்டிராக்டர் எழுந்துவிடுவார்" என்று சொல்லிக்கொண்டே, வையாபுரி பக்கத்திலே இருந்த ஏதோ ஒரு காட்டுச் செடியின் வேரைப் பிடுங்கிக் கடிவாயில் வைத்தான்.

"கடிகாரம் நின்றுவிட்டது. விசை கொடுத்தால் மீண்டும் ஓடும். நான் அதைக் கொடுத்துவிடுகிறேன்." சிந்தனை, விஷத்தைப்போல் விரைவாக ஏறியது வையாபுரி யின் உள்ளத்தில்.

அடுத்த நிமிஷம் அவர்களைப் பார்த்து, "பிள்ளையவர் கள் இந்த வேரிலேயே பிழைத்துக்கொள்வார். இருந்தா லும், ஆற்றங்கரைக்குப் பக்கத்திலேயிருந்து, இன்னொரு வேர் கொண்டுவந்து விடுகிறேன். இது இல்லாவிட்டா லும் அதிலே பிழைத்துக்கொள்வார். நீங்கள் பார்த்துக் கொள்ளுங்கள்" என்று சொல்லிக்கொண்டே ஓடினான் வையாபுரி.

வையாபுரியின் வரவுக்காகக் காத்திருந்தார்கள் அவர்கள். போனவனைக் காணவில்லை, நீண்ட நேரம் ஆகியும்.

திடீரென்று கீழே விழுந்து கிடந்த சடலத்தில் சலனம் உண்டாவதைக் கண்ட ஒருவன், "டேய், இங்கே பாரடா!" என்றான்.

அடுத்த நிமிஷம், கந்தசாமிப்பிள்ளை எழுந்து உட் கார்ந்துகொண்டார். கலங்கியிருந்த கண்களைக் கசக்கிக் கொண்டே, எல்லாரையும் ஒருமுறை அவர் பார்த்தார்.

கந்தசாமிப்பிள்ளையை அவர்கள் அவருடைய எஸ் டேட்டுக்கு அழைத்துச் சென்றார்கள், வையாபுரியையும் மறந்துவிட்டு.

ஒரு நாள் ஆயிற்று; இரண்டு நாட்கள் ஆயின. நாட் கள் வாரமாகி, வாரங்கள் சேர்ந்து இரண்டு மாதங்களும் சென்றுவிட்டன. காட்டிலுள்ள எல்லோரும் கன்டிராக் டர் கந்தசாமிப்பிள்ளையைத் தவிர வையாபுரியைப் பற்றியே பரிதபித்துக்கொண் டிருந்தார்கள். "பாவம்! கன்டிராக்டர் உயிரைக் காப்பாற்ற அவன் ஓடினான். அவன் உயிரே போய்விட்டதுபோல் இருக்கிறது!" என்று சொல்லிய வண்ணம் பலர் வந்தனர் கந்தசாமிப்பிள்ளை யிடம்.

"நாம் என்ன செய்ய முடியும்! எனக்கு உங்களையெல்லாம்விட மனசுக்குக் கஷ்டமாகத்தான் இருக்கிறது. நானும் ஆளை அனுப்பிப் பார்த்தாயிற்று; அகப்படவில்லை. உயிர் போனாலும் உடலாவது கிடைக்கக் கூடாதா? அதுவும் கிடைக்கவில்லை" என்று கதறிவிட்டு அவர், "பாவம், ஏதாவது புலி கிலி அடித்துப் போட்டிருக்கும்" என்றார்.

"அவனுடைய குடும்பத்துக்காவது ஏதாவது செய்ய வேண்டும் பிள்ளையவர்களே!" என்றார் ஒருவர்.

"செய்யவேண்டும்; செய்யாமல் இருப்பேனா, அந்தத் தியாகிக்கு? ஆனால் ஒரு தங்கச்சியைத் தவிர வேறே யாருமே கிடையாதாமே வையாபுரிக்கு?" என்று நிறுத்தினார் கன்டிராக்டர்.

* * *

**மா**தங்கள் சென்றன.

கொஞ்ச நாட்களாக அதிசயிக்கத்தக்க செய்திகள் 'கந்தன்' எஸ்டேட்டிலிருந்து கிளம்பிக்கொண் டிருந்தன.

'கந்தன்' எஸ்டேட் முதலாளி, கஞ்சன் கந்தசாமிப் பிள்ளை, தமது முப்பதாவது பிறந்த நாளை வெகு விமரிசையாகக் கொண்டாடினார். காட்டிலே பெரிய, முன் பின் நடந்திராத அளவுக்கு வனபோஜனம் ஒன்று நடந்தது.

அவருடைய குணம் திடீரென்று மாறினதைக் கண்ட ஜனங்கள் எல்லோரும் அயர்ந்து போனார்கள். செல்லாக் காலணாக் காசிலும், தம்பிடி பெறுமானம் உலோகம் இருக்கிறது என்று இரும்புப் பெட்டியில் வைத்து இழுத்துப் பூட்டும் கந்தசாமி தயாநிதியாகி, கருணை சமுத்திரமாக மாறிவிட்டார் என்றால் யார்தாம் மூக்கின்மேல் விரல்வைத்துச் சிலையாக நிற்கமாட்டார்கள்?

"எல்லாம் அந்தப் பாம்புக் கடிக்கு அப்புறம் மாறின மாற்றம் இது" என்றார்கள் சிலர்.

மேலும் சில மாதங்கள் சென்றன. கன்டிராக்டர், தமது எஸ்டேட்டை விற்றுவிட்டுப் பட்டணத்துக்குக் குடி போகப் போகிறார் என்ற செய்தி வந்தது.

"என்ன, சேதியைக் கேட்டேன், வாஸ்தவமா?" என்று வினவிக்கொண்டே அவருடைய நண்பர் ஒருவர் வந்தார்.

"ஆமாம். காட்டு வாழ்வு போதுமென்று ஆகிவிட்டது. பட்டணத்திலே இருந்து, வியாபாரம் செய்யலாமென்று நினைத்துக்கொண் டிருக்கிறேன்."

* * *

எஸ்டேட்டை விற்றுவிட்டுப் பத்து லட்சம் ரூபாய் ரொக்கத்துடன், கந்தசாமி, பட்டணத்தை அடைந்து ஒரு வருஷமாயிற்று.

பட்டணத்தில் எழில் வாய்ந்த நவ நாகரிக பங்களாவில் புது வாழ்க்கை. செல்வத்தைக் கொழிக்கும் வியாபாரம். அமெரிக்கப் பருத்தி வியாபாரத்தில் வந்த பணத்தை அவருடைய குமாஸ்தாக்களினால் எண்ண முடியவில்லை.

பணத்தின் சுகத்தை அநுபவித்தார். இளம் பெண்ணைப் பார்த்துக் கல்யாணம் செய்துகொண்டார். ஆனால் மனைவி விஷயத்தில் மட்டும் அவர் கொடுத்து வைக்கவில்லை. கணவனின் அன்பையும் சொத்தையும் அநுபவிக்கக் கொடுத்து வைக்காமல் அவள் இரண்டே வருஷங்களில் காலமானாள்.

வியாபாரத்தில் லாபம், நாளுக்கு நாள் மணிக்கு மணி, நிமிஷத்துக்கு நிமிஷம் ரசக் குழாயில் ஏறும் ரசத்தைப் போல் ஏறிக்கொண்டே போயிற்று.

பெரிய மனிதரான கந்தசாமிப் பிள்ளை மற்றப் பெரிய மனிதர்களுடன் உறவாடினார்.

பற்பல வியாபாரச் சங்கங்களுக்குத் தலைமை வகித்தார். பெரிய பெரிய கூட்டங்களில், படித்தவர் எழுதிக் கொடுத்த உரைகளை வாசித்தார். மந்திரிகளுடன் விருந்துண்டார். அவர் மேயராக வேண்டும் என்று சிலர் வற்

புறுத்தினர். பெருமையாக மறுத்துவிட்டார்கள் பிள்ளையவர்கள்.

*   *   *

**யோ**க சக்கரம் சுழன்றுகொண் டிருந்தது. வாயு வேகத்தில் பறந்துகொண் டிருந்த நாட்கள் ஆமை வேகத்தில் நடப்பதுபோலத் தோன்றின, கந்தசாமி பிள்ளைக்கு.

'சீ, வீண் பிரமை!' என்று தம்மைத் தாமே தேற்றிக்கொண்டு, 'கஜம் இருபத்தேழு ரூபாய்' என்று வாங்கின சில்க் ஷர்ட்டைக் கழற்றி, சலவைக் கற்சுவரில் பொருத்தப்பட் டிருந்த வெள்ளிக் கோட் ஸ்டாண்டில் மாட்டினுர் அவர்.

ஆனுல் பிரமை பிரமையோடு நிற்கவில்லை.

அதி ஆகாரத்தினுல் அஜீர்ணம் ஏற்பட்டு மந்தம் உண்டாவதுபோல் வியாபாரத்திலும் மந்தம் ஏற்படத் தொடங்கியது. கொஞ்சம் கொஞ்சமாக லாபம் குறையத் தொடங்கிக் கடைசியில் அது மறைந்து, இருந்த இடம் தெரியாமல் போய், நஷ்டத்திற்கு இடம் கொடுத்தது. பங்கு மார்க்கெட்டுகளில் முதல் சரியத் தொடங்கியது. தங்க மார்க்கெட்டில் போட்டிருந்த பணம் தங்காமல் புகைந்தது. அமெரிக்கப் பருத்தியில் போட்டிருந்த பணம் பஞ்சுபோலப் பறந்தது அமெரிக்காவை நோக்கி.

*   *   *

**ஒ**ரு மாதத்துக்குள் முக்கால் சொத்தை இழந்த கந்தசாமிப் பிள்ளை, அன்று பெருமூச்சு விட்டுக் கொண்டே தம் அறையில் உட்கார்ந்திருந்தார்.

"என்ன சௌக்கியமா?" என்று திடீரென்று கிளம்பின குரல் அவரைத் திடுக்கிடச் செய்தது. "யார்?" என்று திரும்பிப் பார்த்த கந்தசாமிப் பிள்ளை வாசற்படியில் நின்ற உருவத்தைக் கண்டதும், "ஆ! நீ யார்?" என்று அலறி வினவினுர்.

"என்ன அலறுகிறீர்கள், கந்தசாமிப் பிள்ளைவாள்! நான் யாரென்று கேட்கிறீர்களே? நான் யாரென்று இன்னும் தெரியவில்லையா?"

கந்தசாமியின் தேகம் நடுங்கிப் பதறி வேர்த்தது. ஒவ்வொரு ரோமமும் சிலிர்த்து விறைத்து நின்றது.

"உங்களுக்கு என்னைத் தெரியுமோ, தெரியாதோ? எனக்கு உங்களை நன்ருகத் தெரியும். நான்தான் வையாபுரி. அரும்பாக்கத்திலே காட்டிலே ஓர் ஆர்டர்லியாக..."

கந்தசாமிப்பிள்ளை கண்களை இறுக மூடிக்கொண்டார். பற்பல விதமான பயங்கள் பற்பல உருவங்கள் எடுத்து அவரை வதைத்தன. அவர் சமாளித்துக் கொண்டே, கண்ணைத் திறந்து பார்த்தபோதும் அவன் நின்றுகொண் டிருந்தான், சிரித்துக்கொண்டே.

பிறகு, "சரி, பிள்ளைவாள், நான் வருகிறேன். இப்போது உங்களால் பேச முடியாதுபோல் இருக்கிறது. பரவாயில்லை. மனசு சரியாக இல்லைபோல் இருக்கிறது. எது எப்படிப் போனாலும் இந்த வையாபுரியை மறந்து விடாதீர்கள்" என்று சொல்லிக்கொண்டே, வந்தவர் கிளம்பினர்.

அன்று இரவு முழுவதும் கந்தசாமிப்பிள்ளை தூங்கவில்லை.

* * *

ஒரு மாதம் ஆயிற்று. கோர்ட்டிலிருந்து, ஜப்தியும் வாரன்டும் வரும் நிலையை எய்திவிட்டது, கந்தசாமியின் பொருளாதாரம். கடன்காரர்கள் நாலு புறங்களிலிருந்தும் அவரைத் தாக்கினர்கள். அவரால் தாங்க முடியவில்லை. அவர், தாம் கருதியிருந்த காரியத்தை முடிப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யலானர்.

அன்று, 'பிரபல வியாபாரியின் திடீர் மறைவு' என்று கொட்டை எழுத்துக்களில் வந்த தினசரிச் செய்தியைக் கண்ட பட்டணமே ஆச்சரியத்தில் ஆழ்ந்தது. எஞ்சி

யிருந்த ஒரு லட்ச ரூபாயுடன் அவர் இரவோடு இரவாக ஓடிவிட்டதாகப் போட்டிருந்தது.

* * *

கந்தசாமிப் பிள்ளை, காட்டை அடைகையில் கதிரவன் உதித்து ஒரு நாழிகை ஆகியிருக்கும். மேல் துண்டில் கட்டப்பட்டிருந்த பொருளை ஒரு பெரிய மரப் பொந்தினுள் வைத்துவிட்டு, குகையை நோக்கி நடந்தார் அவர். குகைவாயிலை அடைந்தபோது, உள்ளேயிருந்து நெருப்புப் புகை சுருள் சுருளாக வெளி வந்துகொண்டிருந்தது.

'அவன் சமைத்துச் சாப்பிடுகிறான்போல் இருக்கிறது!' என்று எண்ணிக்கொண்டே அவர் உள்ளே நடந்தார்.

குகை வாயிலுக்கு அருகிலேயே அமர்ந்திருந்த அந்தக் காட்டு மனிதன், அவரைப் பார்த்து, "ஓ! பட்டண வாசம் முடிந்தாயிற்றா?" என்றான்.

"ஆமாம், முடிந்துவிட்டது; உனக்கு எப்படித் தெரியும்?"

"உனக்கு என்ன என்ன நடந்தது, நீ என்ன என்ன செய்தாய் என்றெல்லாம் எனக்குத் தெரியும்?' என்று ஏளனமாகக் கூறிச் சிரித்தான் அவன்.

பிறகு அவன் உள்ளே முன்னால் நடக்க, கந்தசாமிப் பிள்ளை பின்னால் நடந்தார். நெஞ்சம் அவரையும் அறியாமல், திக் திக்கென்று அடித்துக்கொண்டிருந்தது.

உள்ளேயிருந்து அடர்த்தியாக வந்துகொண்டிருந்த புகை அவருடைய கண்களைக் கரித்தது. அதோடு வந்த துர்நாற்றம் வேறு, வயிற்றைக் குமட்டியது.

"என்ன எரித்துக்கொண்டிருக்கிறாய்?"

காட்டு மனிதன் மௌனம் சாதித்தான்.

கந்தசாமிப்பிள்ளை மீண்டும் வினவினர்.

''நான் சொல்லித் தெரிந்துகொள்வானேன்? நீயாகப் பார்த்துக்கொள்'' என்று கூறிக்கொண்டே, புகை கிளம்பிய இடத்தை நோக்கி நடந்தான் அவன்.

பாதி வெந்துகொண்டிருந்த அந்த நீண்ட உருவத்தைக் கண்டதும் அவர், ''ஏது, மனித உடலாக இருக்கிறதே!'' என்றார்.

''ஆமாம், இன்னும் பார். முகத்தைப் பார். அது இன்னும் வேக ஆரம்பிக்கவில்லை.''

அடுத்த கணம், ''ஆ!''; என்ற இரைச்சல் குகை முழுதும் கேட்டு எதிரொலி செய்தது.

''ஏன் இரைகிறாய்?''

''இதை...இதை, வையாபுரியின் தேகத்தை ஏன் எரிக்கிறாய்?'' தொண்டை அடைத்துக்கொண்டது, பிள்ளையவர்களுக்கு.

''ஏனா? உடலை அழிக்கத்தான்.'' காட்டு மனிதன் சிரித்தான்.

''உயிர் இருக்கும்போது......''

''இனிமேல் வையாபுரியின் உயிர் தவிக்கட்டும் என்று தான் வையாபுரியின் உடலை அழிக்கிறேன்.''

''நீ வாக்குத் தவறி நடந்துகொண்டு விட்டாய்! வையாபுரியின் தேகத்தைக் காப்பதாகச் சொல்லி......''

''நிறுத்து! நீ மட்டும் ஆணையைக் காப்பாற்றி விட்டாயோ?''

''வையாபுரி போய்விட்டால்?'' என்று முனகினர் கந்தசாமிப்பிள்ளை.

''கந்தசாமியாகவே இரு, இனிமேல்.''

''ஐயோ!''

"ஏன், சுகமாக இருந்தபோது அவனை அடையாளங் கூட உன்னால் கண்டுபிடிக்க முடியவில்லையே!"

"ஐயோ, என்னைக் குத்தாதே!"

"குத்தாதே என்று சொல்கிறாய்? எத்தனை கடன்காரர் களைக் குத்திவிட்டு இங்கே ஒளிய ஓடி வந்திருக்கிறாய்? ஆமாம், ஓடிவருகிறபோது 'ஏ தா வ து' கொண்டு வந்தாயா?"

"ஆ, என்ன?"

"என்னவா, பணம்...பணம் ஏதாவது திருடிக் கொண்டு வந்தாயா? சீக்கிரம் சொல், தீர்த்துவிடுவேன்; இல்லாவிட்டால்!"

"ஆமாம், கொண்டு வந்தேன்!"

"அதை அப்படியே இங்கே கொண்டுவா."

பொந்திலே மறைக்கப்பட் டிருந்த லட்சம் ரூபாய், காட்டு மனிதன் கைக்கு மாறின இரண்டாவது நிமிஷத் தில், வையாபுரியை எரித்துக்கொண் டிருந்த அக்கினி யோடு ஐக்கியமாகியது.

"ஐயோ!" என்று அலறினார் பிள்ளை.

"ஏய் இங்கே நின்று கத்தாதே. இங்கேயிருந்து ஓடி விடு, என் கண் காணாமல். இந்தக் காட்டுப் பக்கத் திலே இனிமேல் உன்னைக் கண்டால், கிழித்துப் போட்டு விடுவேன்" என்று கத்திக்கொண்டே அந்த மனிதன் தன் பற்களைக் கடித்தான்.

ஆறு மாதங்களுக்குப் பிறகு ஒரு நாள், ஒரு தினசரி யில், **'பிரபல வியாபாரி கந்தசாமிக்கு மூன்று வருஷக் கடுங் காவல்'** என்ற செய்தியை எல்லாரும் ஆர்வத்துடன் படித் தனர்.

வையாபுரியின் உடலையே நினைத்து நினைத்து ஏங்கிக் கொண்டிருந்த கந்தசாமியின் உயிர் கம்பிகளுக்கிடையே ஊசலாடிக்கொண் டிருந்தது.

# வாழ்வின் உதயம்

அறையினுள் அவன் பிரவேசித்தபோது, அவள் கால்களை மடக்கி, உடம்பை வளைத்துத் தலையணையின் மீது கையை வைத்து, ஓடி ஆடின ஆயாசம் தீரத் தூங்கும் பச்சிளங் குழந்தையைப்போல் அயர்ந்திருந்தாள். ஜன்னல் வழியாக நழுவிக்கொண்டிருந்த சந்திரனின் கதிர்கள் அவள் முகத்தில் நிலவு வீசின. அவளை அந்நிலையில் பார்த்தபோது அப்பொழுதுதான் பறித்த தாமரை மலர் கசங்கிக் கருகிப்போன கோலந்தான் அவனுள் தோன்றியது. அவளை எழுப்பாமல் மேஜையின்மேல் இருந்த நீரைப் பருகிவிட்டு, அவளருகில் படுத்துக்கொண்டான்.

"எப்படி இருந்த முகம் எப்படி ஆகிவிட்டது?" இந்த எண்ணந்தான் அவனிடம் எழுந்தது.

வெளியே நிலவு. படுக்கை அறை விளக்கு, சிவப்பு நட்சத்திரத்தைப்போல் எரிந்துகொண்டிருந்தது. நிலவையும் விளக்கையும் மாறி மாறிப் பார்த்துக்கொண்டிருக்கையில், நாகத்தின் கை திடீரென்று அவனுடைய விலாவில் பட்டது.

விலாவில் பட்ட கை விலாவிலேயே தங்கியது. அதன் ஸ்பரிசம் அவன் உள்ளத்தை நிறைத்தது, உணர்ச்சிகளினுல்; அவன் மனக் கண்ணினின்றும் பொங்கி வழிந்த நீரில் மூழ்கித் தூய்மை அடைந்த உணர்ச்சிகள்! எதை நினைக்கக்கூடாது என்று தீர்மானமாக நினைத்தானே அந்த நினைவுதான் தோன்றித் தோன்றி அவனைக் கலக்கியது.

அவளுடைய கையை மீண்டும் பார்த்தான். கை வளையல்களில் ஒன்று, விலாவில் இரண்டு எலும்புக ளிடையே செருகிக் கொண்டாற்போன்ற உணர்ச்சி. அது அவனுக்குக் குளு குளுப்பாக இருந்தது.

அவனுக்குத் தூக்கம் வரவில்லை.

இன்னொரு தடவை அவளுடைய கையைப் பார்க்க வேண்டும் என்று தோன்றிற்று. பார்த்தபோது துக்கமா சந்தோஷமா? அவனுக்கே தெரியவில்லை.

"சந்தன மரத்தில் செதுக்கினாற்போல் இருந்த கை எப்படி ஆகிவிட்டது!"

நினைவுகள்! பரந்த குளத்தில் தூற்றல் கிளப்பி விடும் குமிழ்களைப்போன்ற நினைவுகள் ஆயிரமாயிரம் கிளம்பின. அவற்றை மறக்க அவன் சுற்றுமுற்றும் பார்த்தான். அர்த்தமில்லாத பார்வை என்றுதான் அவ னுக்குப் பட்டது. நாகத்தைப் பார்த்தான். உடனே தன்னையே—தன் உடம்பையே—பார்த்துக்கொண்டான். அவன் பார்க்காத அவன் முகமும் அவன் முன்னேயே நின்றது.

அப்போது அம்மாவின் ஞாபகம் வந்துவிட்டது. "கண்ணு, உனக்கும் கல்யாணமாகுமாடா? நீ ஒருத்தி கழுத்தில் தாலி கட்டுகிறதை நான் கண்குளிரப் பார்த்து விட்டுச் சாவேனுடா!"

"அம்மா, நீ வேதனைப்பட்டு என்ன பிரயோசனம்? எனக்கு இந்த உலகத்தில் ஒரு பெண் இல்லாமலா இருக் கப் போகிறாள்? அப்படியே இல்லையென்றாலும் என் னம்மா முழுகிவிட்டது? எத்தனையோ பேர் வேணு மென்றே பிரம்மசாரிகளாக இருக்கிறார்கள். நானும் அப்படி இருக்க வேண்டுமென்றால் இருந்துகொள் கிறேன்." அம்மாவின் நொந்த மனத்திற்கு மருந்தாக அவன் சொன்னான். ஆனால் அவனுடைய வேதனை அவ னுக்குத்தானே தெரியும்?

'எனக்குக் கல்யாணம் ஆகுமா? ஆனால் அவள் எப்படி இருப்பாள்?' எப்படி இருக்க வேண்டும் என்ற கேள்வி எழுந்தபோது, 'லட்சணமாக, நன்றாக இருக்க வேண்டும். நான்கு பேர் பார்த்துப் பொறாமைப் படும்படியாக இருக்க வேண்டும்' என்று தோன்றிற்று.

'சீ! இந்த ஆசைக்கு எங்கே உருவம் உண்டாகப் போகிறது? குருட்டு முடவனுக்குக்கூடக் கொம்புத் தேன் கிடைக்க வழி உண்டு. எனக்கு என்றுமே இல்லை.'

அவனுடைய அம்மா இறந்து போனாள். அப்போது அவனுக்கு வயது இருபத்தெட்டு. 'நான் சாவதற்குள்ளே என் நாட்டுப்பெண்ணைப் பார்க்க வேண்டுமென்று ஆசைப்பட்டேன். இனிமேல் அடுத்த ஜன்மத்தில்தான்' என்றாள் அவள்.

'பாவம் அம்மா!' என்று அவன் நினைத்தான். 'ஒரு நாள் தன் பிள்ளையும் மனைவியும் இது மாதிரி குடித்தனம் நடத்துவார்கள் என்று அவள் என்றைக்காவது சந்தோஷமாக எண்ணியிருப்பாளா?'

அவனுக்கும் கல்யாணமாயிற்று. ஏழு யுகங்களில், ஏழு கடல்களைத் தாண்டி, ஏழு வனங்களைக் கடந்து, ஏழு சூரியன்களின் கொடுமையில் வதங்கின பிறகு என்றென்றும் விரும்பிய, கிடைக்காதது கிடைத்தால் எப்படி இருக்குமோ, அப்படி இருந்தது அவனுக்குக் கல்யாணத்தின்போது. அந்தக் கல்யாணத்திற்கு என்னவெல்லாம் பாடுபட்டான் அவன்?

அவனுக்குச் சொத்து உண்டு; சுதந்தரம் உண்டு. மாதச் சம்பளம் தேவைக்கு அதிகமாக உண்டு. இருந்தாலும் நேர் வழியில் அவனுக்குப் பெண் வராது. கல்யாணத் தரகன் ஒருவனைக் குடைந்து எடுத்தான்.

"கண்ணன், நீங்கள் நினைக்கிறபடி பெண் கிடைப்பது சுலபம் அல்ல. பெண்ணைப் பெற்றவன் கண்மூடியாக இருந்து, குளம் குட்டையில் தூக்கி எறிய மாட்டான். நானுந்தான் பார்க்கிறேன் எட்டு மாசமாக!"

அவன் தரகனை விடவில்லை. தரகன் அவனைக் கடைசியில் புன்சிரிப்புடன் ஒரு நாள் பார்த்தான். "பார்த்துப் பேசிவிட்டேன். நீங்கள் வந்து பெண்ணைத்தான் பார்க்க வேண்டும்."

"எனக்குக் கல்யாணந்தான் ஆகவேண்டும். பெண்ணைப் பார்க்க வேண்டாம். எனக்கு எந்தப் பெண்ணுமே உயர்வுதான் இப்போது!"

"சுவாமி, உங்களுக்குப் பார்க்க வேண்டாமென்றால் தொலைகிறது. அந்தப் பெண்ணுக்கு உங்களைப் பார்க்க வேண்டுமாமே!" என்றான் அவன்.

அவன் ஒரு நிமிஷம் யோசித்தான்.

நாலே முக்கால் அடி உயரம்; நல்ல கறுப்பு; அட்டை போன்ற உதடுகள்; முகத்தில் வைசூரியின் வெற்றி முத்திரைகள்; குறுகிய நெற்றி; உருண்டையான மண்டை; பருமனான தேகம்.

கண்ணாடியைப் பார்க்காமலே தன் முகம் அவன்முன் தோன்றியது.

ஒரு பெண் - அதுவும் அவனுடைய நிழலில் இருக்கத் திட்டமிடும் பெண் - அவனைப் பார்த்தால் என்ன முடிவு செய்வாள்?

"முடியாது. என்னால் பெண்ணைப் பார்க்க வர முடியாது" என்று சொன்னான் கடைசியில் தரகனிடம்.

"அப்போது என்னைக் குற்றம் சொல்லாதீர்கள், கண்ணன்! யார் கண்ணை யார் நம்புவது? அந்தப் பெண்ணுக்கு அபூர்வமாக உங்களைப் பிடித்துவிட்டால்?"

கண்ணன் மீண்டும் யோசித்தான். தன்னை ஒரு தரம் பார்த்தவர்கள் என்ன நினைக்கிறார்கள் என்று அவனுக்குத் தெரியும். நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது பேர்கள் நகைக்கிறார்கள்; இரண்டொரு முட்டாள்கள் அவன் காதுபடக் கேலி செய்கிறார்கள். ஆனால் நூற்றில் ஒருவனோ ஒருத்தியோ அவனைப் பரிதாபமாகப் பார்க்

கிறுர்கள். மற்றவர்கள் மகிழும்போதுகூட அவனுக்கு வேதனை இல்லை. அந்த ஒருவனே ஒருத்தியோ பரிதவிக்கும்போதுதான் அவனுடைய இருதயம் வெடித்தது.

இந்தப் பெண் - தனக்குப் பார்த்த பெண் - தன்னைக் கண்டு பரிதவிப்பாளா என்று அவன் யோசித்தான். இருப்பாளா என்ற சபலம், இருக்கமாட்டாளா என்ற ஏக்கம், இருந்தாலும் இருப்பாள் என்ற சந்தேகம் கலந்த தைரியம் அவனை உந்த, அவன் பெண்ணைப் போய்ப் பார்த்தான். பெண் அவனைப் பார்த்தாள். கல்யாணம் நடக்கவில்லை. கல்யாணம் மட்டும் நடந்திருந்தால், அவர்கள் தாம் ஊரிலேயே சரியான ஜோடி என்று ஊர் முழுவதும் சொல்லியிருக்கும்.

அவன் மன அடிவானத்தில் நம்பிக்கை மறைந்துவிட்டது என்று எண்ணின சமயத்தில்தான், நம்பிக்கையின் வெற்றி உதித்தது. ‘மஞ்சள் காகிதத்தை’ப் பொருளாதார உலகத்தில் கொடுத்த ஒருவரின் பெண் அவனிடமிருந்து மஞ்சட் கயிற்றை வாங்கிக்கொண்டாள். அவன் கல்யாணத்தை, அவனிடமிருந்து கிடைத்த பொருளைக் கொண்டே, பெண்ணைப் பெற்றவர் நடத்தினுர்.

மணையில் நாகத்தை முதல்முதலாக அவன் பார்த்தான். ஒரு காலத்தில் மனத்தில் சிருஷ்டித்த அழகான பெண்ணுக்கும் நாகத்துக்கும் எல்லையில்லாத வித்தியாசம். நாகம் மாதிரி ஒரு பெண்ணை அவன் நினைக்கவே பயப்பட்டான். அந்தப் பயம் இல்லாவிட்டால், நாகத்தைப்போன்ற ஒருத்திதான் என்றென்றைக்கும் அவன் மனத்தில் நந்தா விளக்கைப்போல் இருப்பாள்.

ஊற்றில் பொங்கும் நீரைப்போல் அவன் மனம் பொங்கியது. அவள் கழுத்தில் இருந்த மாலை அவன் கண்களுக்குத் தெரியவில்லை. மாலைக்கு மேலே இருந்த முகந்தான் தெரிந்தது.

அவளும் அவனுமாக ரெயிலில் வந்தார்கள், தங்களுடைய வீட்டிற்கு. அவள் என்ன நினைக்கிறுள் தன்னைப்பற்றி என்பதை அவன் எண்ணிப் பார்க்கவே

இல்லை. அவனுடைய தீராத் தாகம் தீர்ந்துவிட்டது. அந்த இன்பத்தில் அவன் மனம் அவளைச் சுற்றியே அலைந்தது.

'என்ன அழகு அவள்! குன்றுகளிடையே பனிமலை! காடுகளின் நடுவே தாமரைக் குளம்! வைரக் குவியலினிடையே நீலம்!' அவளுடைய ஒற்றை நாடியான, பூசினுற்போல் இருந்த சரீரத்தை அவளறியாமல் அடிக்கடி பார்த்தான். அவள் முகத்தில் களை சொட்டியது. எலுமிச்சம்பழ நிறம்; சந்தனக்கட்டை போன்ற கைகால்கள்.

கண்களைப் பார்த்தான். சேற்றில் அமுங்கி நிற்கும் இரு கற்களைப்போலக் கண்மணிகள் அசையாமல் நின்றன. அவற்றின் மேலே ஒரு திரை - நீர்த்திரை.

அப்போதுதான் அவனுக்குச் 'சுருக்'கென்றது.

'ஏன் சங்கடப்படுகிருள்? அப்பாவையும் அம்மாவையும் விட்டு விட்டுப் போகிறேமே என்ற கவலையா? சேசே! இருக்காது. அந்த நினைவானல் சந்தோஷமாக அல்லவா இருக்க வேண்டும்?'

கவலையுடன் ரெயிலினுள் கண்களைச் சுழற்றினன். எவ்வளவோ பேர்கள் அவளையும் அவனையும் மாறி மாறிப் பார்த்துக்கொண் டிருந்தார்கள். நாகத்தைக் கண்ட போது அவர்கள் முகத்தில் பிரதிபலித்த உணர்ச்சிகளை அவன் படித்தான். அவர்கள் முகத்திலே தோன்றின ஆச்சரியத்தை இரக்கம் போர்வைபோல் மறைத்தது. ஒவ்வொரு பார்வையிலும், 'சே, இம்மாதிரி பிறந்து வளர்ந்து கடைசியில் இவனையா அடைந்தாய்! இதற்கு என்ன பாவம் பண்ணினுயோ!' என்ற எழுத்துக்கள் எழுதியிருந்தன. கல்யாணத்தின்போது வந்திருந்த பத்துப் பேர்களின் முகங்களில் ஒரு முகத்தில்கூட ஈ ஆடாதது அப்போதுதான் நினைவுக்கு வந்தது.

குடித்தனம் ஆம்பித்துவிட்டது.

அவன் உலகத்தையும் ஊரையும் மறந்தான். நாகந்தான் ஊர், உலகம், எல்லாம்.

"நாகம், நான் ஆபீஸுக்குப் போகிறேனே; தனியாக இருக்கப் பயமில்லையே?"

"இல்லை."

"எப்படிப் பொழுது போகும்?"

"உட்கார்ந்து உட்கார்ந்து..."

"புத்தகங்கள் படிப்பதில் உனக்கு ஆசை உண்டா?"

"உண்டு..."

"அப்படியானால் வாங்கிக்கொண்டு வரட்டுமா?"

"உங்கள் இஷ்டம்."

"என்ன புத்தகம் வேண்டும்?"

"உங்கள் இஷ்டப்படி..."

"சரி, சாயங்காலம் வரும்போது வேறு என்ன வாங்கிவர வேண்டும்?"

"எனக்குத் தெரியாது..."

"பூ?"

"உங்கள் இஷ்டம்...!"

அவன் திருப்தியில்லாமல் காரியாலயத்துக்குப் போனான். திரும்பி வந்தான்.

"நாகம், நீ ஏன் சரியாகப் பேசுவதில்லை?"

"யார் சொன்னது?"

"எதைக் கேட்டாலும் இரண்டொரு வார்த்தைகளில் பதிலை அடக்கிவிடுகிறாயே?"

"......"

"உனக்கு என்னைப் பிடிக்கவில்லை என்று தெரிகிறது."

"எப்படி?" கேள்வியின் கடுமை அவனைத் தகித்தது. அவன் மௌனமானான்.

அவள் மீண்டும் பேசினாள்: "நீங்கள் அதுமாதிரி நினைத்திருந்தால் அது தப்பு. உடனே ஒழித்துவிடுங்கள் அந்த எண்ணத்தை. இன்றைக்கு நமக்குக் கல்யாண மாகிப் பதினைந்து நாள் ஆகின்றன. ஆண்கள் எதையும் சீக்கிரத்தில் பிடித்துவிடுவார்கள், அவசரத்தில் பிடித் ததை அவசரத்தோடேயே நழுவவிடுவார்கள். எதிலும் அவர்கள் மனம் ஒன்றாது; ஒட்டாது. பெண்கள் நிதான மாகத்தான் எதையும் பார்ப்பார்கள். மனம் நிதான மாகத்தான் ஒன்றிக் கலக்கும். அதில்தான் அவர்க ளுடைய சக்தி அதிகமாகிறது."

"நீ என்ன சொல்லுகிறாய்?"

"அவசரப்பட்டுக்கொண்டு எதையும் உளறாதீர்கள்" என்கிறேன்.

"நாகம், இன்றையிலிருந்து சபாவிலே சங்கீத விழா. பத்து நாள் நல்ல நல்ல கச்சேரிகள்! அறுபது ரூபாய் கொடுத்துச் 'சீசன் டிச்கட்டு' வாங்கிவிட்டேன், இரண்டு பேருக்கும்."

"எனக்குச் சங்கீதம் என்றால் ரொம்பப் பிடிக்கும்" என்றாள் அவள். உதடுகளில் புன்னகை அரும்பியது.

"அப்படியானால் கட்டாயம் நீ வரவேண்டும்."

அன்று போகும்போது, "இன்றைக்கு நீ கிளிப் பச்சையை உடுத்துக்கொள்வாய் என்று நினைத்தேன்" என்று கண்ணன் சொன்னான்.

"மாற்றிக் கட்டிக்கொண்டு வரட்டுமா?"

"வேண்டாம், வேண்டாம். நேரமாகி விட்டது. வா, வா!"

போகும்போது அவள் கேட்டாள்: "ஏன், இந்தப் புடைவை பிடிக்கவில்லையா?"

"அதன் நிறம் தூக்கி அடித்துக் கண்களைக் கூசச் செய்கிறது. கிளிப்பச்சையில் கண்களுக்குக் குளுமை உண்டாகிறது."

"போதுமே!" அவள் சுருக்கமாக முடித்தாள்.

இரண்டு நாட்கள் கச்சேரிகளுக்குப் போனாள் கண்ணனுடன். "இன்றைக்கு நான் வரவில்லை" என்றாள் மூன்றாம் நாள்.

"ஏன்?"

"எனக்குப் பிடிக்கவில்லை."

"ஏன்?"

"காரணத்தைக் கேட்காதீர்கள்."

"சொல்லமாட்டாயா?"

"மாட்டேன். இனிமேல் தூண்டிக் கேட்காதீர்கள்" என்று சொல்லிவிட்டு; "சபாவில் வருகிற மனிதர்களும் அவர்களும்..." என்று ஏதோ முணுமுணுத்தாள்.

கண்ணன் மட்டும் கச்சேரிக்குப் போனான். மனம் அதில் செல்லவில்லை. பாதியில் எழுந்து நேரே கடற் கரைக்குப் போனான். அவன் மனத்தில் ஆயிரம் எண்ணங் கள் எழுந்தன. முதல் நாளும் இரண்டாம் நாளும் கச்சேரிக்குப் போனபோது எவ்வளவோ பேர் கண்ணனை யும் நாகத்தையும் சுவாரஸ்யத்துடன் பார்த்தது நினை வுக்கு வந்தது. அவர்கள் காதுபட ஒருவன் சொன்னது இன்னமும் காதுகளில் ஒலித்தது.

"என்னடா, பார்த்தாயா? ஜோடி என்றால் இது தான் ஜோடி! எருமையின் முதுகிலே மான் உட்கார்ந் திருக்கிறது!"

அதிலிருந்து தொடங்கிய நினைவு, மற்றவர்கள் சிரித்த சிரிப்பையும், பேசின பேச்சையும் நாகத்தைப் பார்த்த பார்வையையும் பற்றிச் சென்றது.

கடற்கரையிலிருந்து எழுந்தபோது அவன் நினைத்தான் : 'அவள் என்னுடன் வராததற்குக் காரணம் நான்தான். நான் தனக்கு ஏற்றவன் அல்ல என்று அவள் நினைக்கிருள். நான்கு பேர் பார்த்துச் சிரிக்கும்போது என்னுல் அவள் அவமானம் அடைகிருள். உலகத்திற்கு நான்தான் அவள் புருஷன் என்று தெரிவதை அவள் விரும்பவில்லை.'

அவள் அதற்குப் பிறகு அவனுடன் வெளியே சென்றதில்லை.

"நாகம், பீச்சுக்குப் போகலாமா?"

"நான் வரவில்லை."

"சினிமாவுக்கு?"

"ஊ ஹூம்."

"ஏன்?"

"காரணத்தைக் கேட்காதீர்கள்!"

இன்னெரு நாள்.

"என் நண்பன் ஒருவனுக்குக் கல்யாணம். அவசியம் வரவேண்டுமென்று அழைத்திருக்கிருன்."

"அவசியம் போய் வாருங்கள்."

"நீ?"

"நான் இல்லை. ஏன் என்றெல்லாம் கேட்காதீர்கள்!"

அவனுடைய வெறுப்பு அணு அணுவாக வளர்ந்து கொண்டு வந்தது. தன்னுடன் வெளியே வருவதை அவமானமாக, பெரும் துக்கமாக, பெரும் பாரமாக அவள் கருதுகிருள் என்று அவன் நினைத்தான்.

வீட்டில் அவள், ஒரு குறை சொல்லும்படிக்கு வைத்துக்கொள்ளவில்லை. சதா புன்சிரிப்புடன் நடமாடி வந்தாள். அவன் கொடுத்த புத்தகங்களையெல்லாம் விடாமல்

படித்தாள். ஒரொரு சமயத்தில் தனக்குத் தெரிந்த சில பாட்டுகளைப் பாடினுள். ஆனுல் கண்ணனுல் நாகத்தைப் புரிந்துகொள்ள முடியவில்லை.

அவன் நினைவுகள் எல்லாம் அவளுடன் சேர்ந்து சென்ற தினங்களிலேயே சென்றன. பல பேர் நாகத்தைப் பார்த்துப் பெருமூச்சு விட்டிருக்கிறுர்கள்; பரிதவித் திருக்கிறுர்கள். நாகம், அவனுல் மற்றவர்களின் உள்ளங்களைத் தொட்டிருக் கிறுள்; அநுதாபத்தைப் பெற்றிருக்கிறுள். அவன் அவள் கூட இல்லாவிட்டால் அவளுடைய அழகைத்தான் எல்லா ரும் ரசிப்பார்கள். இப்போது அழகை மட்டும் ரசிக்காமல் அவளைக் கனிவுடன் நினைக்கிறுர்கள். அவனுல் அவள் இரக்கத்துக்குப் பாத்திரமாகிறுள்.

இதைக் கண்ணனுல் பொறுக்க முடியவில்லை. நாள் செல்லச் செல்ல அவள்மீது அவனையும் அறியாமல் கோப மும் வெறுப்பும் வளர்ந்து வந்தன. ஒரு காலத்தில் கண்ணுக்கு லட்சணமுள்ள, நான்கு பேர் பார்த்துப் பொருமைப்படும்படியான பெண்டாட்டி வாய்க்க வேண்டு மென்று ஆசைப்பட்டான். தெய்வம் அவனுடைய ஆசையை நிறைவேற்றியபோது, அவனுல் அதைச் சரியாக அநுபவிக்க இயலவில்லை. கல்யாணமான புதிதில் எத் தனைக்கு எத்தனை அவன் அவள் அழகில் மயங்கினுனே, அத்தனைக்கு அத்தனை அவள் முகம் இப்போது கசந்தது.

ஓரோரு சமயத்தில், அவன் மனத்தளத்தின் அடியி னின்றும் மிருகத்தனமான எண்ணங்கள்கூடத் தோன்றின. 'என்னுல் திடீரென்று மன்மதனைப்போல ஆக முடியாது. ஆனுல் அவள் திடீரென்று மாறலாம். மாறி எனக்கு ஏற்றவளாக ஆகிவிட்டால்?' இம்மாதிரியெல்லாம் எண் ணுவது மகா பாவம் என்று அவனே நினைத்துக் கொண்டான்.

ஒரு நாள் அவனுடைய நண்பர்கள் சிலர் அவன் வீட்டிற்கு வந்தார்கள். கல்யாணமான பிறகு அவர்கள் வருவது அதுதான் முதல் தடவை. எல்லோருமாக உட் கார்ந்திருக்கையில், கண்களின் கருமணிகள் ஜொலிக்க, உதடுகளில் தேனைப்போல் புன்னகை அரும்ப, அவள் காபி

யும் கையுமாக வந்தாள். அவளைப் பார்த்ததும் நண்பர்களின் முகங்கள் மாறின. ஏன்? அவளும் மாறிவிட்டாள். திரும்பியபோது அவள் அவனுடைய நண்பர்களின் இரக்கத்தைச் சுமந்து சென்றாள். அந்தச் சுமை அவனை நெருக்கியது.

"என் நண்பர்கள் வந்தபோது நீ ஏன் திடீரென்று மாறிப்போனாய்?"

"இல்லையே!"

"இல்லையாவது? நான்தான் பார்த்தேனே."

"உங்கள் கண்கள் பொய் சொல்லுகின்றன" என்று அவள் லேசாகச் சிரித்தாள்.

"மனத்தில் உள்ளதை என்னிடம் சொல்லேன்!"

"ஒன்றும் இல்லையே சொல்ல!"

"இருக்கிறது. எனக்குத் தெரியும்."

"என்ன இருக்கிறதாம்?"

"'அழகும் லட்சணமும் இல்லாத மனுஷஜன்மத்துக்கு இப்படி வாழ்க்கைப்பட்டோமே!' என்று இருக்கிறது."

"உம். அப்புறம்?"

"'அவன் மேலும் பேசவில்லை. கோபம் தொண்டையை அடைத்தது.

* * *

**வி**லாவில் இருந்த கை இப்போது நீங்கிவிட்டது. நாகம் அயர்ந்து நித்திரையில் ஆழ்ந்திருந்தாள். கண்ணன் நினைவுப் பந்தலின் கீழே புரண்டுகொண்டிருந்தான்.

நிலவில், ஆணியில் மாட்டியிருந்த சட்டை காற்றில் லேசாக ஆடுவது தெரிந்தது. சட்டைகூட நினைவைக் கிளறிற்று!

அந்தத் துணியை வாங்கிய அன்று.

"போயும் போயும் இதைப் போய் எடுத்தீர்களே ?"

"ஏன், என்னவாம் இதுக்கு ?"

"இது உங்களுக்கு நன்றாகவே இருக்காது !"

"இல்லாவிட்டால் போகிறது. இதைத்தான் இனி மேல் போட்டுக்கொள்ளப் போகிறேன்."

"நான் மட்டும் என்றைக்கும் கிளிப் பச்சையை உடுத்துக்கொள்ள வேண்டும்" என்று சொல்லிவிட்டு அவள் 'களுக்'கென்று சிரித்தாள். அந்தச் சிரிப்பு அவனை உயிரோடு எரித்தது.

"சீ, மூடு வாயை!"

அவள் அவனுடன் சரியாகத்தான் பழகினாள். ஆனால் அவன் அவளை விட்டுப் போய்க்கொண்டே இருந்தான்.

"நீ மகா அழகி என்று உன் தலை நிற்கமாட்டேன் என்கிறது!"

"இதை எப்போது கண்டுபிடித்தீர்கள்? கண்ணாடியைப் பார்த்தபோது எனக்குத் தெரியவில்லை. நாலு பேர் பார்த்துச் சொல்லவில்லை. ஒருவேளை நீங்கள் சொல்வதும் சரியாக இருக்கலாம்."

"உனக்கு வாய் வேறு துடுக்கு!"

"இந்த அழகை வைத்துக்கொண்டு ஊமையாக வேறு இருந்தால் எப்படி உங்களோடு வாழ்வது?"

"சரி, சரி, போதும்; போ!"

அவள் கன்னக் குமிழ் சிரிக்கப் பேசினபோதும், உதடுகளைப் பற்களால் கடித்துக் கண்களைச் சிமிட்டினபோதும் அவனுக்குக் கோபந்தான் வந்தது.

"இந்த அழகு!" என்று அவன் பயங்கரமாக முணு முணுத்தான். அழகான மலர்களை ஏந்திய விஷக் கொடி யாகப் பட்டாள் அவள்.

'என் அவலட்சணத்தைக் கருவியாக வைத்துக் கொண்டுதான் என்னை எதிர்த்துப் பேசுகிறாள். நான் அவளுக்கு ஏற்றவன் அல்லதான். அதனால் நான் அவளு டன் வாழாமல் இருக்க முடியுமா?' இதை நினைத்தபோது கோபந்தான் மிஞ்சியது அவனிடம்.

கண்ணன் கண்மூடியானான். அநாவசியமாக அவளை அடக்கலானான். வாயைத் திறந்தால் பல்லை உடைத்துவிடுகிறாற்போல் பேசினான்.

"மத்தியானம் பொழுது போகிறதில்லை. ஏதாவது படிக்க..." என்று தயங்கினாள்.

"நீ படிக்கிற லட்சணம் தெரியாதா? உன் அப்பன் உன்னை ஏழாம் வகுப்பு வரையில், ததிங்கணதோம் போட் டுக்கொண்டு படிக்கவைத்த படிப்புக்குப் புத்தகம் வேறே யாக்கும்!"

இன்னொரு நாள்—

"மூன்றாவது வீட்டு மாமி அடிக்கடி, 'எங்கள் அகத் துக்கு வாயேன்' என்று கூப்பிடுகிறாள். அவளுடைய பெண் டில்லியிலிருந்து வந்திருக்கிறாளாம். பார்த்துவிட்டு வரட்டுமா?"

"நீ அங்கேயெல்லாம் போய் உன் மூஞ்சியைக் காட்டி என் மானத்தைக் கெடுக்காதே."

ஒரு நாள் அவன் வரும்போது, நாகம் பக்கத்து வீட் டிலிருந்து வாங்கிய ஹார்மோனியத்தை வாசித்துக்கொண் டிருந்தாள்.

"உனக்குப் பூனையைத்தான் அழவிடத் தெரியும் என்று நினைத்தேன். இதுகூடத் தெரியுமா? நீ இருக்கிற இருப்புக்குச் சங்கீதம் வேறு?"

இம்மாதிரி இன்னும் எவ்வளவோ!

நாளுக்கு நாள் அவள் அழகாகிக்கொண்டு வந்தாள். அவனுடைய சாப்பாட்டினல் அவள் உடற்கட்டு நன்ருகிக்கொண்டு வந்தது. அவன் வெதும்பினன்.

"இந்த அழகு!" பற்களை நறநறவென்று கடித்தான்.

ஆணியில் தொங்கி, காற்றில் அசைந்த சட்டையிலேயே கண்கள் நிலைபெற்றிருந்ததைக் கண்ணன் விடுத்தான். அவன் முகத்தில் ஏனே கலக்கம். ஒருவித ஏக்கம். அருகில் நாகத்தின் உருவத்தைப் பார்த்தான். பசும் புல்லில் அழகிய மானென்றின் நினைவுதான் வந்தது.

'இப்போது எப்படியாகிவிட்டாள்? என்னுலேதான் எல்லாம்?'

அடுத்த நிமிஷம் பழைய நாட்கள் முன் வந்து நின்றன.

ஒரு நாள், தலைவலி என்று பிற்பகல் மூன்று மணிக்கே திரும்பிவிட்டான். வீடு பூட்டியிருந்தது. எங்காவது சிநேகிதி வீட்டுக்குப் போயிருப்பாள் என்று நினைத்தான்.

நாலரை மணிக்கு அவள் வந்தாள். தெருக்கோடியில் ஒரு பஸ்ஸினின்றும் இறங்கியது நன்ருகத் தெரிந்தது.

"எங்கே போனய்?"

"ஒரு சிநேகிதி வீட்டுக்கு."

"எங்கே இருக்கிருள்?"

"இந்தப் பட்டணத்திலேதான்!"

"அது தெரியும், அதிகப்பிரசங்கி! எந்தத் தெருவில்?"

"சொன்னல் விசாரிக்கப் போகிறீர்களா?"

"எங்கே, சொல்."

“முடியாது.”

மறுநாள் வேண்டுமென்றே மூன்று மணி சுமாருக்கு அவன் திரும்பினான். அன்றும் வீடு பூட்டி யிருந்தது.

வீட்டின் எதிரே ஒரு கிழவி - வேர்க்கடலை விற்பவள் - வழக்கம்போலப் புகையிலைச் சாற்றின் ருசியில் மூழ்கி, வீதியையும் வானையும் பார்த்து உட்கார்ந்திருந்தாள். அவனுக்கு அவளைப் பல வருஷ காலமாகத் தெரியும். அரையணுவுக்குக் கடலை வாங்கிக்கொண்டே, “அம்மா வெளியே போயிட்டாருங்க. ஐயா நிக்கவேண்டியிருக்கு வெளியிலே” என்றான்.

“சொல்லிட்டுப் போகலீங்களா ?”

“இல்லையே, எங்காவது சிநேகிதி வீட்டுக்குப் போய் அரட்டை அடித்துக்கொண்டிருப்பாள்.”

“அதானே பார்த்தேன். கொஞ்ச நாளா மத்தியானத்திலே அம்மா வூட்டிலே இல்லை. எங்கேயோ சிநேகிதிங்க வூடுங்களுக்குப் போறாருங்க !”

“போகட்டும், போகட்டும்” என்று சொல்லிவிட்டு அவன் திரும்பினான்.

சந்தேக விதை முளைத்தது.

அவள் வந்ததும், “என்ன, தினமும் என்னை வாசலில் நிற்க வைக்கிறாய் ?” என்றான்.

“நீங்கள் சீக்கிரம் வருவீர்கள் என்று எதிர்பார்க்கவில்லை.”

“எங்கே போயிருந்தாய் ?”

“சிநேகிதி வீட்டுக்கு.”

“சிநேகிதிதானே !”

மறுநாள் காரியாலயத்துக்குப் புறப்படுமுன் வாசற் கதவை வெளியே பூட்டலானான்.

"ஏதுக்குப் பூட்டுகிறீர்கள்?"

"இன்னும் தெரியவில்லையா?"

"தெரிகிறது; ஆனால் சந்தேகம் ஆசையினாலா, ஆத்திரத்தினாலா என்று..."

"சீ, மூடு வாயை!"

ஒரு வாரம் சிறைவாசம்! தான் செய்வது மிருகத்தனம், இழிவான செயல் என்று அவனுக்குப் படலாயிற்று, மேலும் நாகம் கொடுமையினால் வதங்கிவருவது தெரிந்தது. அவனுடைய குறைகள் கண்களை மூடுகின்றன என்ற விவேகம் வந்தபோது, 'இனிமேல் இப்படி நடந்து கொள்ளக் கூடாது. என் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ள இதுவா வழி? மிருகமா, அவளைக் கட்டிப் போட்டு அடைக்க?" என்று எண்ணிக்கொண்டே அவன் நடந்தான்.

தெருக்கோடியில் பஸ்ஸை விட்டு இறங்கி, வீட்டு வாசலைப் பார்த்தபோது, பாம்பை மிதித்தவனைப்போலத் துள்ளினான். பத்து அல்லது பதினைந்து பேர்கள் வாசலை அடைத்துக்கொண் டிருந்தார்கள். கண்ணன் இருந்த சக்தியைத் திரட்டிக்கொண்டு ஓடினான். நான்கு அடிகள் நாற்பது யோசனைகளாக வளர்ந்தன.

கடைசியில் வீட்டு வாசலை அடைந்தான். பூட்டு உடைக்கப்பட்டிருந்தது.

அவன் உள்ளே தாவினான், எல்லாரையும் விலக்கிக் கொண்டு. திண்ணையில் ஏதோ கருகின நாற்றம். ரேழியில் சிறு சிறு புகைச் சுருள்கள். கூடம் முழுவதும் புகைதான்.

"நாகம்!" என்று கத்திக்கொண்டே அவன் தாவினான் சமையலறைக்குள்.

அவள் அங்கே சுருண்டு கிடந்தாள். சரிந்த 'ஸ்டவ்' வின் அருகில் மண்ணெண்ணெய்ச் சீசா உடைந்து கிடந்தது.

நெருப்பு அணைந்துவிட்டது. அதை அவளே சமாளித்துக்கொண்டு விட்டாள். ஆனால் அது தன் பசியையும் ஆற்றிக்கொண்டது.

அவளை அந்த நிலையில் பார்த்தபோது, மழைக்குச் சாய்ந்த வாழையின் ஞாபகம் அவனுக்கு உண்டாயிற்று.

அவனுடைய செய்கையை ஊரும் உலகமும் வெறுத்தன. மற்றவர்கள் சிரிப்பதற்கு இன்னொரு காரணம்!

ஒரு மாதம் ஆஸ்பத்திரியில் இருந்துவிட்டு அவள் திரும்பினாள். அவன்தான் சதா அவள் பக்கத்தில் இருந்தான்.

''நாகம், என்ன வேண்டும்? மருந்தா, பாலா, கஞ்சியா?''

''ஒன்றும் வேண்டாம்.''

''என்னாலேதானே நீ இப்படி ஆனாய்?''

''விதி உங்களிடம் வந்து ஒளிந்துகொண்டது.''

''நான் மகாபாவி, நாகம். எனக்கு மன்னிப்பே கிடையாது!''

''அப்படியெல்லாம் சொல்லாதீர்கள். நான் ஏதோ தப்புப் பண்ணியிருப்பேன்.''

''இல்லை, இல்லை. எல்லாம் என் தீய எண்ணங்கள். உன்மீது அசூயையும் ஆத்திரமும் சந்தேகமும் கொண்டேன். உன் அழகையே குலைத்தேன்!''

''அழகு, காட்டு மரங்களின் இலைதானே? பருவத்தில் நிறம் மாறிவிடுவதுதானே!''

''ஐயோ நாகம், நான் புயலை உண்டாக்கினேன். உன் வாழ்க்கையையே பாழாக்கினேன்!''

"அப்படிச் சொல்லாதீர்கள். என் அழகு நெருப்புப் போல் இருந்தது. அது அணைந்தது."

"நாகம், நாகம், நான் உனக்குத் தீங்கு செய்துவிட்டேன். என்னை மன்னித்தேன் என்று சொல்." உண்மையாக, பூரணமாகத் திருந்திய கயவனின் நேர்மை அவனிடம் பிரதிபலித்தது.

பத்து நாட்கள் சென்றன. அவன் மனம் அவள்பால் பாகாக உருகிக் கெட்டிப்பட்டது. அவள் கேட்டாள், "நான் ஒரு தப்புப் பண்ணினேனே, தெரியுமா?" என்று.

"என்ன?"

"அதனால்தான் என்மீது சந்தேகம் வந்தது."

"உங்களிடம் சொல்லாமல் தினமும் வீட்டைப் பூட்டிக்கொண்டு எங்கே போனேன் என்று சொல்லியிருக்கலாம்."

"எங்கே போயிருந்தாய்? சந்தேகத்தினால் கேட்கவில்லை; ஆர்வத்தினால் கேட்கிறேன்."

"எனக்கு என்னவோ பாட்டுச் சொல்லிக்கொள்ள வேண்டுமென்று ஆசையாக இருந்தது, சொன்னால் நீங்கள் கண்டிப்பாகச் சம்மதிக்க மாட்டீர்களென்று தெரியும். அதனால் இரண்டரை மணியிலிருந்து நான்கு மணிவரை தினமும் போய் வந்தேன்."

"நான் செய்த பாவத்துக்கு விமோசனம் இல்லை, நாகம்."

"இந்த மாதிரி இனிமேல் பேசாதீர்கள்."

"நாகம், மனசாரச் சொல்லு, உனக்கு என்மீது கோபமோ வெறுப்போ இல்லையே?"

"இரண்டும் எப்போதுமே இல்லை. முன்போல் இல்லாமல் நீங்கள் கொஞ்சமாவது அன்புடன் இருந்தால்

போதும். ஏனென்ருல் இனிமேல்தான் என்னிடம் கவர்ச்சி இல்லையே!'' வெறுப்புக் கலந்த சிரிப்புத் தோன்றியது அவனிடம்.

கண்ணனுக்குத் தாகம் எடுத்தது. ஒரு தம்ளர் தண்ணீரை எடுத்துக் குடிக்கச் சோம்பல்தான். இருந்தாலும் அது இல்லாமல் முடியாது என நினைத்தான்.

தண்ணீரைக் குடித்துக்கொண்டே நாகத்தைப் பார்த்தான். பூரண ஒளியில் முகமும் உடலும் நன்ருகத் தெரிந்தன.

எங்கே அந்த வனப்பு? உதடுகளில் எங்கே புன்னகை? கைகளின் சந்தனப் பொலிவு!

அவனுக்குத் தொண்டை அடைத்துக்கொண்டது; ஆனால் நீர் தடையில்லாமல் சென்றது.

தம்ளரை வைக்கப் போகும்போது, அது தவறி விழுந்துவிட்டது.

நாகம் கண் விழித்தாள்.

''என்ன, இன்னும் தூங்கவில்லையா? எப்போது வந்தீர்கள்?''

''பதினெரு மணிக்கு!''

''சாப்பிட்டீர்களா?''

''இல்லை.''

''ஏன் எழுப்பக்கூடாது?''

''நீ அயர்ந்து தூங்கினுய், நாகம். எழுப்ப மனசு வரவில்லை.''

''இந்தமாதிரி இருந்தால் உடம்புக்கு என்ன ஆகும்?''

அவள் அன்புடன் கடிந்துகொண்டாள்.

அவன் கண்களில் நீர் துளித்தது.

"நீயும் நானுமாக நாளைக்கு எங்காவது சேர்ந்து போகலாமா?"

"சினிமாவுக்கு" என்றாள் அவள்.

"முன்னெல்லாம் வரமாட்டாயே?'.

"ஆமாம். காரணத்துடன்தான்..."

"என்ன அது?"

"மற்றவர்கள் உங்களைப் பார்த்தபோது என் இருதயம் ரத்தத்தைச் சிந்தியது. உயிரோடு யாரோ என் உடலை அறுப்பதுபோல் இருந்தது. நீங்கள் என்னை ஆள வந்தவர் அல்லவா? எனக்குப் பொறுக்கவில்லை."

மீண்டும் கண்ணன் கண்களில் நீர் துளித்தது.

# மூன்றாவது கண்

முற்றத்தின் அருகில் நின்ற வண்ணம் இடுப்பில் இருந்த ராஜுவுக்குப் பாலமுதம் ஊட்டுகையில், அவன் விழுங்க முரண் செய்யவே, ஜனகம் அம்புலியைத் துணைக்கு அழைத்தாள்,

" அதோ.....அதோ...அம்புலி.....அம்புலி மா...மா...! எங்கே, என் கண்ணே, சாப்பிடு......"

ராஜு திசையைப் பார்த்து மிரள மிரள விழித்தான். குழந்தை புன்னகை செய்யாததும், மழலை வார்த்தை ஒன்று கூடப் பேசாததும் அவளை வழக்கம்போலக் கலங்கச் செய்தன. இந்தக் கலக்கம் எத்தனை நாட்களுக்கு ?

திடீரென்று வேறு குரல் :

" அம்மா ! தெனம் தெனம் அம்புலி அம்புலின்னு ராஜுவுக்குக் காட்டறயே, அந்த அம்புலி எப்படி அம்மா இருக்கும் ?"

முற்றத்துத் தூணை அணைத்த வண்ணம் கேட்ட மீனாவின் கேள்விக்கு என்ன பதிலை ஜனகம் சொல்வது ?

" ராஜு, கண்ணே! சாப்பிடுடா !...அப்பா பப்பூட்டு வாங்கித் தருவா !"

ராஜு இப்போது விழுங்க ஆரம்பித்துவிட்டான். ஆனால், ஜனகத்தின் கைதான் வேலை செய்ய முரண் செய்தது. எடுத்த சாதம் குழந்தையின் வாயிலும் செல்லாமல், தட்டிலேயும் நிற்காமல் அவள் கையிலேயே ஆறியது.

நிலா அவள் முகத்திலும் குழந்தையின் உடலிலும் வீசின போது, அவளுக்கு அவளைச் சுற்றிலுமே இருள் கவ்வியது. நடுங்கும் கை சமாளித்த வண்ணம் சாதத்தை ஊட்டினு லும், தொண்டையில் உண்டான இடறல் நீங்கவில்லை.

திரையிட்ட கண்களுடன் அவள் மீனுவின் பக்கம் திரும்பியபோது மீனு, உலகத்திற்கு அப்பாற்பட்ட பிர தேசம் ஒன்றைப் புலன்களின் சக்திக்கு அப்பாற்பட்ட சக்தியால் தேடும் ஞானியைப்போல், ஏதோ ஒன்றையே பார்த்துக்கொண் டிருந்தாள். அங்கேதான் வானமெனும் பந்தலும் மதி எனும் கனியும் தொங்குகின்றன என்ற எண்ணம் எக்காரணத்தாலோ அவளுக்குள் புகுந்துவிட் டிருக்கிறது.

"என்ன அம்மா, பேச்சை மறைக்கிறே...அம்புலி எப்படி இருக்கும்னு தெனம் தெனம் கேக்கறேன்...சொல் லாமல் வேறு என்னத்தையாவது பேசிப் பேசி என்னை ஏமாத்தறயே!..." என்றுள் மீனு.

"நீ சாப்பிடற வெள்ளித்தட்டைத் தொட்டுப் பார்த் திருக்கையோ இல்லியோ?...அதுமாதிரி இருக்கும்..."

"எங்கே?"

"ஆகாயத்திலே!"

"அப்படீன்னு?"

"ஐயோ, எனக்கு சொல்லத் தெரியல்லையே!" என்று கசந்துகொண்டே, "அப்பா வரட்டும், அவர் சொல்லு வார்" என்றுள்.

"அப்பா கிட்டே கேட்டா, அம்மாதான் நன்னுச் சொல்லுவான்னு சொல்ரு. உன்னைக் கேட்டா, அப்பா கிட்டேக் கேளுன்னு சொல்றயே...?"

நான்கு வயதுக் குழந்தைக்கா இவ்வளவு வாய்த் துடுக்கு? ஆனுல், அதை ஜனகத்தால் அநுபவிக்க முடிய வில்லையே? மீனுவின் புத்திக் கூர்மை, அவளுடைய நெஞ்

சைக் குத்தி ரத்தத்தை யல்லவா குடிக்கிறது? மற்றவர்களுக்கெல்லாம் தெரியும் அம்புலியும், இன்னும் அது இது என்று பார்க்கக்கூடிய ஆயிரம் பொருள்களும் தனக்கு ஏன் தெரிவதில்லை என்ற, பல நாட்களாகப் பதில் கிடைக்காத கேள்வியைக் கேட்டுக்கொண்டே மீனு சாப்பிட உட்கார்ந்தாள்.

"அம்மா, இன்னிக்கு எதிராத்துச் செல்லம் வந்து என் கையைப் பிடிச்சு அவள் வீட்டுக்குக் கூட்டிண்டு போனு...எதுக்குன்னு தெரியுமோ......? அவ அப்பா சில்க் கவுன் வாங்கிக் கொடுத்திருக்கா, அதைக் காட்ட! கத்திரிப் பூ நிறம்னு சொன்னு......எப்படி வழவழன்னு இருக்கு தெரியுமோ...? ராஜுவின் வாயிலே விரலை வெச்சா வழவழன்னு இருக்கே, அது மாதிரி இருக்கு அம்மா...!"

"உனக்கும் வாங்கித் தரேண்டி கண்ணே 'சில்க்' கவுன்."

"அம்மா! கத்திரிப் பூ நிறத்திலே வேணும்!"

"ஆகட்டும், கண்ணே......"—ஜனகத்தினிடமிருந்து பெரு மூச்சுத்தான் வெளி வந்தது. எத்தனை ஆயிரம் கண்ணீர்த் துளிகள் இதயத்தினின்றும் ஆவியாக வெளியேறியதோ?

"அம்மா, கத்திரிப் பூ எப்படி யிருக்கும்?"

"நாளைக்குக் கார்த்தாலே நம்மாத்துக் கொல்லையிலேயிருந்து பறிச்சுத் தரேன்..."

"நீ கையிலே தந்தாலும் நான் எப்படியம்மா புரிஞ்சுக்கிறது?"

"தெய்வமே!"—இதுதான் தாயிடமிருந்து வந்தது.

மணி ஏழரை ஆகிவிட்டது. ஜயராமன் வர இன்னும் ஒன்றரை மணி இருக்கிறது. இரண்டு குழந்தைகளும் தூங்கிவிடவே, ஜனகத்தைத் தனிமை விழுங்கிற்று.

வெறிச்சோடின வீட்டிற்கு வெளியே எங்கும் கலகலப்பு; சிரிப்பும் பேச்சும் கொம்மாளமும்! ஆனல் அவள் வீடு இன்று நேற்று இப்படி இருக்கிறது? மீனுட்சி என்றைக் குப் பிறந்து, அவள் இதயத்தில் எரிமலைக் குழம்பை வார்த் தாளோ, அன்றையி லிருந்தே இதயம் கருகிய இதயம் தானே!

வியர்த்து ஒழுகிக்கொண் டிருந்த ராஜுவுக்குக் கொஞ்ச நேரம் விசிறிவிட்டு, பெண்ணின்மீது போர் வையை விரித்தாள். "அம்புலி எப்படி இருக்கும்...கத்தி ரிப்பூ எப்படி இருக்கும் என்றெல்லாம் நினைத்துத் தூங்கு கிறது, என் கண்!" என்று ஜனகம் நினைத்துக்கொண் டாள்.

ஜனகத்திற்குப் பழையதை நினைக்க என்றுமே வெறுப்புத்தான். ஆனல் விருப்பு வெறுப்புக்கு அப்பாற் பட்ட நிலைக்கு இன்னும் வராத அவள், போன காலத்தின் தணியாத உஷ்ணத்திலேயே இன்னும் தகிக்கப்பட் டாள்.

**வீ**ட்டிற்கு ஒரு பெண். செல்லப் பெண். ஐந்தாம் மாதத்திலேயே தலைச்சனுக்கு வந்துவிட்டாள். கை குலுங்க வளையல்கள். நிறைந்த வாயும் சிவந்த உதடு களும்; தலை கனக்கப் புஷ்பம்; மடி பிதுங்கத் தாய்மை.

"அப்பாடா, அம்மாடா!" என்று அவள் ஊஞ்சலில் உட்காரும்போது அப்பாவும் அம்மாவும் நகைத்தார்கள். "இப்படித்தாண்டீ அம்மா, உன்னை நான் பெற்றேன்!" என்றுள் தாயார். ஜனகம் சிரித்தாள். உள்ளே ரத்தத் தின் ரத்தம் சிரிக்கும் சிரிப்பின் ஒலியும், தூரத்தே அடிக்கும் கோவில் மணியாக அவளுக்குக் கேட்டது.

தாசானு தாசனுகத் தம்பி நின்றுன். ஒரு நாள் பிரபல ஓட்டலிலிருந்து பல விதத் தின்பண்டங்கள்; இன்னொரு நாள் காஷ்மீர் திராக்ஷையை அவள்முன் தொங்கவிட்டுச் சிரிப்பான். "அக்கா, நாளைக்கு 'ஆஸ்டிரேலியன் ப்ரூன்ஸ்'...இன்னிக்கு 'ஈஜிப்ஷியன் டேட்ஸ்'." தம்பி

யின் ஆரவாரத்தில் மூழ்குகையில், கோடையில் குளிர்ந்த ஜலத்தில் மூழ்குவதுபோல் இருக்கும்.

"பாலு......எல்லாம் இப்போதே கத்துக்கோ...... நாளைக்கு உனக்குக் கல்யாணம் ஆனதும் எல்லாம் அவசியம் இருக்கும்!" என்று தாயார் கேலி செய்வாள்.

"நீ இங்கேயே மாட்டுப் பெண்ணை வச்சுக்க வைப்பயா? அஞ்சாம் மாசத்திலேயே அடிச்சுத் துரத்திவிட மாட்டாயா?"—பாலுவின் கொக்கரிப்பைக் கண்டு ஜனகத்துக்குச் சிரிப்பும் மகிழ்ச்சியும் பொங்கி வரும்.

ஏழாம் மாதம். ஒரு நாள்; வெள்ளிக்கிழமை: அப்பாவும் அம்மாவும் கோவிலுக்குப் போயிருந்தார்கள். பாலு, கிரிக்கட்டுக்குப் பின் நடக்கும் அரட்டையிலிருந்து இன்னும் வந்தாக வில்லை. ஜனகம் மாடியில் முன் தாழ்வாரத்தில் நின்றுகொண் டிருந்தாள். வானைப் பார்த்தபோது பயமாக இருந்தது. கிளையில் தொங்கும் தேனீக் குழாத்தைப்போல் வானில் மேகங்கள் கரும் பூதங்களாகத் தொங்கிக்கொண் டிருந்தன. அதன் பயங்கர வசீகரிப்பில் பயந்துகொண் டிருக்கையில், திடீரென்று வஜ்ரமொன்று வானத்திலே கிளம்பி, அம்பு போலப் பாய்ந்து விரைந்து மறைந்தது. கண்கள் இமைக்கும் இமைப்பிற்குள் ஒளியை இருளாக்க,அவள் அலறின கண்களைக் கண நேரத்தில் மூடியும் பயம் தீரவில்லை. கைகளால் பொத்தின விரைவில் வலது கையிலிருந்த தம்ளரை மறந்தாள்.

திறந்து பார்க்கையில், தற்செயலாக ஊர்ந்து சென்றுகொண்டிருந்த ஒரு பல்லியின் முகத்தில் பிரேதக் களை சொட்டிக்கொண் டிருந்தது. காதுகளில் குண்டாமணிகள் போல, அதன் முகத்தில் நின்ற இரு கருமணிகளில் ஒரு மணி, தம்ளர் விளிம்பு இசை கேடாகப் பட்டதால் நசுங்கி உதிர்ந்தது. வெண்கலத் தம்ளரின் - எப்போதோ திருச்சூரில் சொல்லி வைத்து வார்த்த தம்ளரின் - பின்னங்கள் தரையில் சிதறிக் கிடந்தன.

"அது சாகல்லியே, ஒரு பூண்டு ஒழியல்லையேன்னு தான் எனக்கு வருத்தமா இருக்கு. ஆணியடிச்சாப்பலே

சுவத்திலே உட்கார்ந்து வீட்டையே நாசம் பண்றது எப்போதும்...அதை நினைச்சுப் பைத்திய மாட்டமா அலட்டிக்காதே!

"பல்லியின் தலை எழுத்துடி, ஜனகம். வெள்ளியும் அதுவுமா வெண்கலப் பாத்திரந்தான்..." என்று தாயார் அரைகுறையாக இழுத்தாள்.

"போதுமே அம்மா, நீ ஒருத்தி. வெள்ளிக்கிழமையில் பல்லி நசுங்கலாமானல், தம்ளர் உடையக் கூடாதோ? ஏதோ ஒரு தம்ளர் நஷ்டம். என்னிக்கு வந்தா என்ன அது?" என்று பாலு அடுக்கினுன்.

மொத்தத்தில் ஜனகம் அன்று தூங்கவில்லை. பல்லியின் சிதையாத கண், அவளைப் பார்த்துகொண்டே சுவர் ஓரமாக ஊர்ந்ததாகத் தோன்றியது, அவளுக்கு. வஞ்சம் தீர்த்துக்கொள்ள இயலாமல் தவிப்பவனின் கண்ணைப் போல அதன் கண் இரங்கி ஜ்வலித்தது என்று அவள் எண்ணினுள். 'தெய்வமே! நீ பல்லிக்காக என்னைப் பழி வாங்காதே!' என்று மட்டும் அவள் வேண்டிக்கொண்டாள்.

கணவன் அவளைப் பார்க்க வந்திருந்தபோது அவனிடம் சொன்னுள், தயங்கித் தயங்கி, குற்றம் செய்ததைச் சொல்வதுபோல.

இரண்டாகப் பிளந்த குஞ்சாலாடுவை வாயில் குத்தி அடைத்துக்கொண்டே, "போடி அசடே! இதெல்லாம் ஒரு பயமா? இன்னொரு லாடு கொண்டா போ; அப்படியே இரண்டு முறுக்கும்..." என்று ஐயராமன் கூறினுன்.

முன்னேற்பாடாக மருத்துவச்சிகளையும் பிரபல வைத்தியரையும் தயாராக்கி வைத்திருந்தார், ஜனகத்தின் தகப்பனுர்.

வீட்டில் எல்லோருக்கும் ஆர்வமும் ஆவலும், ஜனகத்திற்கு ஆவல், ஆர்வம், பயம், கலக்கம் எல்லாம்.

கடைசியில் ஒரு நாள் சூரியோதயத்தின்போது, அவளுடைய உயிரில் வாழ்ந்த உயிர் உலகில் ஜனித்தது. அசதியால் மயக்கமான தாய், கண்களை விழித்துப் பார்த்த போது, குழந்தையின் மூடின கண் இதழ்களை வைத்துக் கொண்டு வைத்தியர்கள் திண்டாடிக்கொண் டிருந்தார் கள். அப்போது அவள் இதயத்தில் திடீரென்று தைத்த முள் இன்னும் அகலவில்லை.

"பராசக்தி! அருள் செய்! மதுரையில் உன் சந்நிதி யில் என் குழந்தையைக் கொண்டு வந்து காட்டுகிறேன்!" என்று நாமகரணத்தின்போது ஜனகம் வேண்டிக் கொண்டாள்.

ஜனகத்தின் குழந்தை மீனுட்சி, தொட்டிலில் அங்கு மிங்குமாகக் கைகளை நீட்டி விளையாடினுள். தாயின் இடைக்கு வந்து, மார்பகத்தைக் கைகளால் தேடித் துழாவு வதைப் பார்க்கையில் ஜனகம் அதை மார்போடு அணைத் துக்கொள்வாள். பால் சுரக்கு முன்னே கண் சுரந்து விடும். பாலும் கண்ணீருமாகக் குழந்தை குடித்தாலாவது, மீனுட்சி அருள் புரிய மாட்டாளா?

எட்டாம் மாதம், குழந்தை வாசற்படி தாண்டுவதைப் பார்க்க, துக்கத்திலும் தாய்மையின் ஆசை மின்னிட்டது. குழந்தையைப் படியண்டை கொண்டு போய், "என் கண்ணு. இப்போ படி தாண்டப் போறது!" என்று கொஞ்சினுள். தவழும் கிருஷ்ணனைப்போல் தவழ்ந்த மீனுட்சியின் முழங்கால் படியில் இடித்தது. தாயின் இடிந்த மனம் உலுங்கியது.

அவள் தன்னையே நொந்துகொண்டாள். தெய்வம் ஏன் இப்படி அவளைச் சோதிக்க வேண்டும்? என்றும் இப்படியே போகுமா? விமோசனம் உண்டா?

மீனுட்சி நடக்க ஆரம்பித்தாள். கால்கள் நிலத்தில் பாவுவதற்கு முன், கைகள் அந்தரத்தில் துழாவ ஆரம் பித்து விட்டன.

அவளுடைய கோலத்தைப் பார்க்கும்போதெல்லாம், ஒரே ஒரு நினைவுதான், தோன்றி மறையும் எண்ணங்களை விழுங்கிக்கொண்டு எழுந்து, நிலையாக நிற்கும். வெள்ளிக் கிழமை, மின்னல், சிதறிய வெண்கலத் தம்ளர்...தம்ளர் பறித்த பல்லியின் கருமணி!

மீனுவுக்கு இரண்டரை வயதாக இருக்கையில் இரண்டாம் முறை பிரசவத்திற்காக அவள் பிறந்தகம் சென்ருள்.

இப்போது ராஜுவுக்கு ஒன்றரை வயது ஆகிவிட்டது. எட்டாம் மாதத்தில், 'அம்மா...அப்பா...' என்று தொடங்குவது போய், இன்னும் ஒரு வார்த்தைகூட ராஜுவின் நாவிலிருந்து உதயமாகவில்லை. எதைப் பார்க்கையிலும், அவன் கண்களில் ஒரு தவிப்பு, புரையோடியது. ஜனகத்தின் வயிறு கலங்க ஆரம்பித்தது.

* * *

மணி ஒன்பது அடித்தது.

ஜயராமன் வந்தான். இதுவரையில் ஒன்று சேர்ந்து அவளை வதைத்த நினைவுக் கூட்டம், அவன் வந்த சுவட்டில் சிதறி அலைகளாகப் பிரிந்து போயின.

"ஜனகம், இன்னிக்கு என்ன வைத்திருக்கிருய்?"

"முருங்கைக்காய்ப் பொரிச்ச கூட்டும், வெண்டைக்காய் வதக்கின பச்சடியும்..."

"சபாஷ்!"

சாப்பிட உட்காரு முன், "கோட் பாக்கெட்டில் ராஜுவுக்குச் சாக்கலேட்டும் பெப்பர்மிண்டும், மீனுவுக்குப் பொம்மையும் பலூனும்..." என்று ஜயராமன் கூறினுன்.

கணவன் பொருள்களை மாற்றிச் சொல்லியிருக்கலாம் என்று ஜனகம் நினைத்தாள். ஆனுல் சொல்லவில்லை. மௌனமாகச் சாதத்தைப் பரிமாறினுள்.

திடீரென்று, "ராஜூவைப்பற்றி எனக்குப் பயமாக இருக்கு!" என்ருள்.

"என்ன?"

"ஆண்டு நிறைவாகி ஆறு மாசம் ஆகிறது...'அம்மா!' ன்னு ஒரு வார்த்தைகூடச்சொல்ல வில்லையே..."

"சில குழந்தைகள் பேச ஆரம்பிக்க ரொம்ப நாள் ஆகும். நான் ரெண்டு வயசிலேதான் பேச ஆரம்பிச்சேனும். ஆனல் ஆரம்பிச்சாப் பின்னே நிக்காது..."

"எனக்குப் பயமாக இருக்கு..."

"பயந்து பிரயோசன மில்லை...வருவது எல்லாம் வந்து தானே தீரும்."

"நாளைக்குக் கார்த்தாலே வெளியே போய் வரபோது, கத்திரிப் பூக் கலரில் சில்க் ஒரு கஜம் வாங்கிக்கொண்டு வாருங்கள், மீனுவுக்கு வேணுமாம்."

"ஆகட்டும்."

"கத்திரிப் பூ நிறம்...ஞாபகம் இருக்கட்டும்."

"அவளுக்கு நிறம் வேறு தெரிய ஆரம்பித்து விட்டதா?

இதயத்தில் குத்தி யிருந்த முள் இன்னும் துளைத்தது. "குழந்தைக்குத் தெரியுமோ என்னமோ? அது ஆசையோடு 'கத்திரிப் பூ' என்று சொன்ன...து..."

* * *

ஆறு மாதங்களாயின. ராஜூவைப்பற்றிய பயம் வீண் போகவில்லை. வாயிலிருந்து உமிழ்நீர்தான் வழிந்ததே தவிர, புரளும் நாவினின்று பிறந்த ஒலி, பயத்தைத்தான் அளித்தது.

"தெய்வமே! பராசக்தி!...என் கதி இப்படியா ஆகணும்! ஆண்டி பெத்ததைப்போல் அல்லவா நான் பெத்து விட்டேன்!"

"ஜனகம்...நம் இரண்டு மணிகள் பாபத்தின் உருவங்களோ என்னமோ? கவலைப்பட்டு ஒரு பயனும் இல்லை. எனக்கு உன்னைவிட மனச் சங்கடந்தான்...உலகத்திற்கு ஒட்டினுற்போலத்தான் காரியங்களைச் செய்ய வேண்டியிருக்கிறது. இதையே வெளியிலே பார்த்தால் இரக்கம். நம் வீட்டினுள் பார்த்தால் வேதனை...மீனுட்சியை அடுத்த வருஷம், அவளுடைய பள்ளிக்கூடத்திற்கு அனுப்பப் போகிறேன்...இன்னும் மூன்று வருஷத்தில் ராஜு அவனுடைய பள்ளிக்குப் போகப் போகிருன். அவர்களுக்கும் வாழ்க்கை உண்டு."

'தெய்வமே, எல்லோரும் போகிற பள்ளிக்கூடங்கள் என் குழந்தைகளுக்கு இல்லியா! கழியையும் கையையும் கொண்டு பிழைக்கப் பிறந்த குழந்தைகளைப் பெற நான் ஏன் பிறந்தேன்?'

ஜனகம் மூன்றும் முறை கண்ணீரும் கம்பலையுமாகப் பிறந்தகம் சென்றுள். போகுமுன், "ஜனகம், நீ கண்ணீர் விடவே பிறந்திருக்கிருய். இப்போதாவது மனத்தைத் தேற்றிக்கொள்!" என்ருன் ஐயராமன்.

"உங்களுக்கு என்ன தெரியும், என் மனசு?...உங்கள் மனசைப் பாறை ஆக்கிக்கொண்டு விட்டீர்கள்!"—துக்கத்திலும் கோபம் உதித்தது அவளுக்கு.

"ஜனகம், கரும் பாறையினுள்ளும் நீர் கசிந்து கொண்டுதான் இருக்கிறது. தன்னுள்ளே அதை அடக்கும் முறைதான் விவேகமானது."

பிறந்தகத்தில் அவள் யாருடனும் அதிமாகப் பேசவில்லை. மனநிலை அறிந்து எல்லாரும் நடந்துகொண்டார்கள். இரு குழந்தைகளும் சேர்ந்து விளையாடுவதைப் பார்க்கையில் ஜனகத்தின் கண்களில் நீரும், உதடுகளில் புன்னகையும் உதிக்கும்.

"இவர்களை யார் எங்களுக்குப் பின்...?" என்ற கேள்வி எழும்போதே வயிறு கலங்கும். "தெய்வமே!

இந்த இரண்டு பேரையும் காப்பாற்ற எனக்கு ஒரு பூரணனைக் கொடு. என்னைச் சோதிக்காதே!'' என்று அவள் வேண்டலானாள்.

தனக்குப் பிறக்கப் போகும் மூன்றுவது குழந்தை, மூத்தவர்களின் இளையவனா? அவளைப் பொறுத்த வரையில் முன்னே பிறந்தவர்களைக் காக்க, பின்னே வரும் தெய்வந்தான்.

அவள் கண்ட ஆயிரம் கனவுகளிலெல்லாம் அந்தத் தெய்வந்தான் தோன்றியது. 'மூன்றுவது குழந்தை பிறந்தவுடன் கண் விழித்தது; அழுதது; எட்டாவது மாதம் தவழ்ந்து, படி தாண்டியது. 'அம்மா!' என்று தாயின் மடியைப் பிடித்தது; 'அப்பா!' என்று அழைத்துக் கணவன் மூக்கைக் கிள்ளியது,......துள்ளியது......ஓடியது: குதித்தது. பள்ளிக்கூடத்தில் பையன் ஓடியாடி விளையாடினான். கல்லூரியில் டென்னிஸும் கிரிக்கெட்டும் ஆடிச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினான். பிரபல உத்தியோகம் வகித்த போது அண்ணாவையும் அக்காவையும் இமைகள்போல் காத்தான்.'

''தெய்வமே! என் கனவுகள் பலிக்குமா?''—இது தான் ஜனகத்தின் ஓயாத ஒழியாத கேள்வி. 'என் குழந்தைக்கு அழகு வேண்டாம். லட்சணம் வேண்டாம். ஆனால் எல்லாவற்றையும் கொடு. அது போதும்!'

தினம் தினம் இந்த எண்ணந்தான். பிறக்காத குழந்தையின் உருவத்தையும் உடலையும் நினைத்து நினைத்து, அவள் உலகத்தையே மறந்தாள். அவளுடைய ஆர்வமும் ஏக்கமும் இத்தனை நாள் கொண்ட துக்கத்தைக்கூட விழுங்கிவிட்டன. தன்னைத் தெய்வம் கைவிடாது என்று பரிபூரணமாக அவள் நம்பினாள். மூன்றுவது குழந்தை வெறும் குழந்தையா? வயிற்றில் தேனும் பாலுமாக வாரி இறைக்கும் உயிர் ஊற்று அல்லவா? அது அக்காவுக்கு ஒளியாகவும் அண்ணாவுக்குக் குரலாகவும் இருக்கக்கூடிய பரந்தாமன். ஆமாம். அவன் பெயரே—யாரும் வைக்காத

பெயராகத்தான் இருக்கப் போகிறது. அவளுடைய இரண்டு கண்களை உய்விக்க வந்த மூன்ருவது கண்ணை யல்லவா அவள் பெறப் போகிருள்?

**க**டைசியில் அந்தத் தினமும் வந்தது. வழக்கம்போல் அன்று ஜனகத்தால் படுக்கையிலிருந்து எழுந்திருக்க முடியவில்லை. நாள் பூராவும் வலியால் அவள் துடித்தாள்.

டாக்டர் வந்து பரிசோதித்து விட்டு, வேறு பிரபல டாக்டர் ஒருவரை அழைத்து வந்தார். அவர்கள் இரண்டு பேருமாகப் பரிசோதித்துவிட்டுப் பக்கத்து அறைக்கு, ஜயராமனைத் தனியே அழைத்துப் போய்ச் சொன்னது, அரை மயக்கத்திலும் ஜனகத்திற்குக் கேட்டது. கொடிய வலியிலும் புலன்கள் சரியாக இருந்தன.

டாக்டர் சொல்லி முடித்ததும் ஜயராமன், "வேண்டவே வேண்டாம்......வீட்டிலே ரெண்டு இருக்கு...... மூணுவது, தெய்வம் தந்தால் தரட்டும்......" என்று உரக்கவே அலறிவிட்டான்.

ஜனகத்தின் உள்ளத்தில் தீர்க்கமான எண்ணம் சுழலடித்தது. "என் கண்களுக்குப் பரந்தாமன்தான் முக்கியம். அந்தப் பரந்தாமனைத் தியாகம் செய்வதா? வயிற்றில் நான்காவது உதிக்குமோ என்னமோ?......மீனுவையும் ராஜுவையும் யார் பார்த்துக்கொள்வார்கள்?...... நாம் எத்தனை நாளுக்கு?......"

அடுத்த நிமிஷம், "அம்மா!" என்று தீனமாக அழைத்தாள். அம்மா வந்ததும், "அவரைக் கூப்பிடேன்" என்ருள். ஜயராமனிடம், "எனக்கு ஆப்பரேஷன்தான் வேணும்......" என்ருள்.

"ஜனகம்!......" என்று தொடங்கியவன் திகைத்து நிறுத்திவிட்டான். அவன் முகத்தில் பீதியின் பயங்கரம் நிலவியது. "உனக்குப் பைத்தியமா!..." என்ருன்.

"எனக்குப் பேசச் சக்தி யில்லை...என்னை ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் செல்ல ஏற்பாடு செய்யுங்கள்.. தர்க்கம் செய்தாலும் பயனில்லை" என்றாள்.

ஆஸ்பத்திரியில் எப்போது பிரக்ஞை பெற்றேம் என்று ஜனகத்துக்கே தெரியாது, அடிவயிற்றில் ஆயிரக் கணக்கான ஊசிகளைக் கோத்தாற்போன்ற உணர்ச்சியிலும், பக்கத்தில் கிடந்த பரந்தாமனைத்தான் அவள் மனம் சுற்றி அலைந்தது. "உலக மகா வீரன் சீஸரை இப்படித்தானே அவன் தாயார் பெற்றாள்?...என் பிள்ளையும் அப்படி ஆவான்...!"—இந்த எண்ணம் ஏனோ பிரக்ஞை வந்ததிலிருந்து தோன்றிக்கொண்டே இருந்தது.

தாயாரும் பக்கத்து வீட்டுக்காரியும் ஜனகத்தின் அருகில் வந்து பேசலானார்கள்; "மூக்கும் முழியும் எப்படியிருக்கான் பாரு...சந்திரமண்டலம் மாதிரி...அப்பப்பா...! அழுது அழுது ஆஸ்பத்திரியையே ரெண்டு பண்ணிடுத்து! ...நர்ஸ் சொல்ரு...ஏழரைப் பவுண்டு இருக்காம்...! அதான் இத்தனை சங்கடம்...!"

"ஏண்டா, பொறக்கறப்பவே அம்மாவை இப்படிப் பாடுபடுத்தி விட்டயே?..." என்று சர்க்கரையை வாயில் தடவினாள் பக்கத்து வீட்டுக்காரி.

'என்னையா பாடாய்ப் படுத்தினன்! வயிற்றில் பாலையல்லவா வார்த்தான்!' என்று அவள் எண்ணுகையிலேயே திடீரென்று அடி வயிற்றில் பூகம்பம் உண்டாயிற்று. அவள் கண்முன் உலகமே தட்டாமாலை ஆடிக்கொண்டிருந்தது. ஆயிரக் கணக்கான பரந்தாமன்கள் நட்சத்திரங்களைப்போல் ஜ்வலித்து ஆடிக்கொண் டிருந்தார்கள்.

ஒரு விநாடி நேரம், கண்கள் திறந்து பரந்தாமனைக் கண்டு பூரித்தன. பூரணத்துவம் நிறைந்த அவனுடைய கண்களில் அவளுடைய இரு உயிர்களின் பிம்பங்கள் தோன்றி, மூன்று கண்களும் அவளுக்குள் ஐக்கியமான போது அவள் கண்கள் மூடிக்கொண்டன.

# வழிப்பறி

ஏழு மணிக்கு வரவேண்டிய ரெயில் எட்டு மணிக்குத் தான் வந்தது. சிவராமனை ரயிலடியில் காணவில்லை. முன் பின் தெரியாத ஊரில், பாஷை புரியாத பிரதேசத்தில், எப்படித்தான் வீட்டை அடைவது என்று மனம் கலங்கத் தொடங்கியது. முகத்தில் தைரியத்தை வரவழைத்துக் கொண்டே ஒரு 'போர்ட்ட'ரிடம் விசாரித்தேன்.

"மாங்காவு நாலு மைல் தூரம் சாமி!" என்று அவன் கூறினான்.

குதிரை வண்டிக்காரன் கூசாமல் நான்கு ரூபாய் கேட்டுவிட்டு, ஏதோ சலுகை காட்டுவதுபோல் மூன்று ரூபாய்க்கு இறங்கினான்.

'ஒரு ரூபாய்' என்று ரிக்ஷாவில் ஏறிக்கொண்டேன். குறுகிய பாதைகள். எங்கே பார்த்தாலும் ஒரே கடைகள் தான்.

ஒருவாறாக ரிக்ஷா நகரத்தை விட்டுப் பிரிந்ததும் மாங்காவைப்பற்றிய சிந்தனை தொடங்கியது. மாங்காவில் வீடு எங்கே இருக்கும்? கிழக்கு மாங்காவு என்று மட்டும் தெரியும். ஆனால், எது கிழக்கு, எது மேற்கு என்றே புரியவில்லை.

கோழிக்கோட்டில் மழை எப்போது கிளம்பும் எப் போது நிற்கும் என்று எந்த வான சாஸ்திரியாலும் நிர்ண

யிக்க முடியாது. திடீரென்று எங்கிருந்தோ கிளம்பிய மேகங்கள் முட்டி, மோதிப்பொழிந்து தள்ளிவிடும். பிறகு அமைதி. மீண்டும் மழை. ரிக்ஷாவில் போகும்போது ரிக்ஷாக்காரன், மழை ஆரம்பிப்பதைக் கண்டதும் இதைச் சொன்னான், ரிக்ஷாவுக்கு 'பர்தா' கட்டிக்கொண்டே.

தெருக்களில் விளக்குகள் இல்லை. மேடு பள்ளங்ளங்களுக்குக் குறைச்சல் இல்லை என்று என் இடுப்பே சொல்லிவிட்டது. தொலையாத வழியில் மாட்டிக்கொண்டு ஏன் செல்கிறோம்? எதற்காகச் செல்கிறோம்?என்ற கேள்விகள் எழுந்தபோது என்னையே நான் சபித்துக்கொண்டேன். நண்பன் சிவராமனை முகாலோபனம்கூடச் செய்யக்கூடாது என்று மனம் பொருமியது. மாங்காவே போய்ச் சேரமாட்டோம் என்றுகூட உள்ளம் சொல்லிக் கலங்கத் தொடங்கிவிட்டது. பொறுமை இழந்த நிலையில் அடிக்கடி, "இன்னும் எத்தனை தூரம் இருக்கிறது?" என்று ரிக்ஷாக்காரனிடம் கேட்கலானேன்.

நான் ஊருக்குப் புதிது என்று அவனுக்கு ரெயில்வே ஸ்டேஷனிலிருந்தே தெரியும். "இன்னும் கொறைச்சே உள்ளது" என்று சாவதானமாகச் சமாதானப்படுத்திக் கொண்டே வந்தான்.

மையிருட்டு; மழை; இரு புறங்களிலும் அடர்த்தியான புதர்களும் மரங்களும்; தனிமை! இந்தச் சூழ்நிலையில் மனம் எண்ணாத எண்ணங்களை யெல்லாம் எண்ணத் தொடங்கியது. பட்டணத்தில் மயிலாப்பூரில் இருந்தும், கபாலியைத் தரிசிக்கப் போகாதவனுடைய மனம் பிரதிஷ்டை செய்யாத, தெய்வங்களைக்கூட நினைத்து வேண்டத் தொடங்கிவிட்டது. பீதி காரணமாக எனக்கு மயக்கம் வரும்போல் இருந்த நிலை......

**ரி**க்ஷாவை யாரோ நிறுத்தினார்கள். ரிக்ஷாக்காரன் ஒன்றுமே பேசவில்லை. பர்தாவை அவிழ்த்தான். எனக்கு முன்னாலிருந்த உருவம் நிழல்போலத்தான் தெரிந்தது. குரலிலிருந்து அவன் நோக்கம் என்னவென்பதை அக்கணமே உணர்ந்துவிட்டேன்.

என்னிடம் அவன் பேச்சே வைத்துக்கொள்ளவில்லை. என் கைகளைப்பற்றிக் கரகரவென்று இழுத்து, ரிக்ஷாவுக்கு வெளியே தள்ளினுன். வலது முழங்கால் ரிக்ஷாச் சட்டத்தில் மோதியது; என் கையிலிருந்த பை அவன் கையில். கோட் பாக்கெட்டில் என்னைவிடச் சுவாதீனமாகக் கை விட்டான். மார்புப் பக்கமாக அது சென்றது. "ஐய்யயோ! கை என்ன இரும்பா?" என்று மனம் நடுங்கியது. அவனுடன் மல்லுக்கு நிற்க, மனத்தில் தைரியமும் இல்லை; உடல் வசதியும் இல்லை. ஒரு நிமிஷத்தில் நான் அநாதையானேன்.

என் பர்ஸிலிருந்து எடுத்த பணத்தில் ஒரு ரூபாயை ரிக்ஷாக்காரனிடம் வீசினுன்: "அடோ, இதை எடுத்தேக்கின்..." என்று. அடுத்த கணம் ரிக்ஷா சென்றுவிட்டது. தெருவில் விழுந்தவன் எழுந்திருக்க முடியவில்லை. இருட்டையும் மீறிக்கொண்டு அவன் முகத்தைப் பார்க்க வேண்டும் என்ற ஆத்திர அவா என்னுள் கிளம்பியது. ஒன்றும் பயனில்லை. திடீரென்று தோன்றின மின்னல் சமய சஞ்சீவியாக வரவே, உடலின் அமைப்பும் முகத்தின் தோற்றமும் விநாடி காலத்தில் என்னுள் பதிந்தன. ரிக்ஷா போன இரண்டு நிமிஷங்களுக்கெல்லாம் அவனும் போய்விட்டான், என்னைத் தனியாக விட்டுவிட்டு.

இருநூறு ரூபாய்; இரண்டு வேஷ்டி, ஷர்ட்டுகள், இன்னும் சில்லறைத் துணிமணிகள்; ஒரு டயரி, இத்யாதிகளை இழந்த நிலையில் என்ன செய்வது என்று தெரியவில்லை. முழங்கால் வலியில் எழுந்திருக்கக்கூட முடியவில்லை. மழையில் உடை, கூளமாக இருந்தது.

கால்மணி நேரத்திற்குப் பிறகு மெள்ள எழுந்தேன். மனத்தின் பயம் விட்டுவிட்டது. என்னிடம் என்ன இருக்கிறது, பயப்பட!

ஜுரத்தில் நடப்பவனைப்போல மெள்ள நடந்தேன். சிறு சிறு கூர்மையான கற்கள் காலைத் துளைத்தபோது தான், செருப்பை, ரிக்ஷாவிலிருந்து விழுந்தபோது நழுவ விட்டது நினைவுக்கு வந்தது

என்ன நேரமோ தெரியாது; எத்தனை தூரம் நடந்தேனோ தெரியாது. அசதி தள்ளியது; வயிறு இரைந்தது. கண்ணுக்கெட்டிய தூரமெல்லாம் காரிருள். வானத்தில் தாரைகள் தெரியவில்லை. மேகப் போர்வை உலகத்தையே போர்த்திவிட்டதுபோல் இருந்தது. இனி, மேலே செல்ல முடியாது. இருளோ மழையோ பசியோ என்னவானாலும் பாதையிலேயே விழுந்துவிட வேண்டியதுதான் என்று நிச்சயித்த நிலையில்...

தூரத்தே ஒரு விளக்குத் தெரிந்தது.

தெய்வமே வழி காட்டுகிறது என்ற ஒரே எண்ணம் உள்ளத்தில் வியாபிக்க, தேகத்தில் இருந்த சக்தியையெல்லாம் திரட்டிக்கொண்டு மீண்டும் நடக்கலானேன். கண்ணுக்கு, அண்மையில் தீபம் இருப்பதுபோல் தோன்றினாலும் நடக்க நடக்கப் பாதை வளர்ந்துகொண்டே சென்றது.

உடல் வியர்க்க, மூச்சு இரைக்க, மலை ஏறுபவனைப் போல் ஊர்ந்து ஊர்ந்து செல்லும் முடவனாக ஒருவாறு அந்த இடத்தை அடைந்தேன்.

பதினேழு பதினெட்டுப் படிகள். பிறகு வேலிக் கதவு. அதைத் திறந்ததும், இரண்டொரு நாய்களின் ஓலம். என் நிலையில் நாய்களை லட்சியம் செய்யக்கூடத் தோன்றவில்லை.

"யாரா, அது?" என்ற குரல் வீட்டிலிருந்து எழுந்தது.

"நான்தான்...நான்தான்..." என்று அர்த்தமில்லாமல் முனகிக்கொண்டே வீட்டு வாசற்படியை அடைந்தேன்.

கேள்வியைக் கேட்டவளுக்கு ஆத்திரம் வந்தது. "யாரா, நீ...ஈ நேரத்தில் இவ்விடே வருந்நது?" என்று கடுத்தாள். அவளுடைய முகத்திலிருந்து கிழவி என்று மட்டும் தெரிந்தது.

மேலும் அவளுக்குப் பதில் சொல்லத் தெரியவும் இல்லை; உடம்பில் சக்தியும் இல்லை. திண்ணையிலேயே படுத்துக்கொண்டேன். கோட்டால் தலையைத் துவட்டிய பிறகு, என் மனத்தில் மட்டும், 'ஜுரம் வந்து விட்டது!' என்ற உணர்வு தோன்றிக்கொண்டே இருந்தது.

**எ**த்தனை நேரம் நான் கண் அயர்ந்தேனோ தெரியாது. கண் விழிக்கையில் நான் திண்ணையில் இல்லை. கூடத்தில் ஒரு கட்டிலில் கிடந்தேன். உடம்பு கொதித்துக்கொண் டிருந்தது. பழைய நினைவுகளும் சம்பவங்களும் அன்று நடந்தாற்போலத் தோன்றின.

வீட்டில் ஆள் அரவமே இல்லை. வேலிக் கதவின் அருகில் இரண்டு நாய்கள் விளையாடிக்கொண் டிருந்தன. ஒரு மரத்தில் குடும்பம்போல், பலாக் காய்கள் மரத்தையே வளைக்கும் பாரத்தில் தொங்கின. செவ்வரளிப் பூக்கள் வேலியோரத்தில்; ஒரு சிறு பாம்பு புதர் வழியாக ஓடியது. பட்டணங்களும் கட்டிடங்களும் நாகரிகமும் செழித்த உலகத்தில் இருப்பதெல்லாம் கனவுகள் ஆகிவிட்டன.

திடீரென்று பேச்சுக் குரல் எழுந்தது. மலையாள பாஷைதான் என்றாலும் அர்த்தம் தெரிவது கடினமாக இல்லை.

"தள்ளே, சாமி தமிழன்போலத் தோணுன்னு..." குரலிலேயே இளமை!

"யாரோ ஆய்க்கோட்டே......இந்நு வைகும் நேரம் அயாள் இவ்விட இருக்காம்பாடில்லா..." முந்தின இரவில் அதட்டிய கிழவியின் குரலில், கடுமை இன்னும் மறைய வில்லை.

"அங்ஙனே பறையாம் பாடில்லா...தேகம் சுகமில்லா...வல்லாண்டு சுடுந்நு; பனியா யிருக்கணும்...சுகமான பிற்பாடு போனாப் போரே?..."

என்னையும் அறியாமல், அந்த இளங் குரலுக்கு நன்றி செலுத்தினேன். அவள் முகத்தைப் பார்க்க மனம் துடித்தது.

சிறிது நேரத்தில் கிழவி கூடத்திற்கு வந்தாள். என்னைப் பார்த்ததும், "மாதவி, நின்டே சாமி எணிச்சிட்டுண்டு...(எழுந்திருந்தாகி விட்டது)" என்றாள்.

"அதேயோ...? இப்போ கஞ்சி கொண்டு வராம்..."

மாதவி! என்ன அழகான பெயர்? மனிதன் எந்த நிலையிலும் பெண்மையில் உள்ள அழகையும் புதுமைகளையும் மறப்பதில்லை. அவையே அவனுக்கு ஆறுதலாக இருந்துவிடுகின்றன.

**கை**யில் பாத்திரத்தோடு வந்த மாதவியை முதல் முதலாகப் பார்த்தேன். அழகின் அர்த்தமே அவளிடம் தான் பிறந்திருக்க வேண்டும்! அவள் அழகே என் கண்களுக்குப் பாரமாகி விட்டது. அதி தித்திப்பு, கடைசியில் திகட்டுவதுபோல, அவளுடைய அழகு ஆகிவிடுகிறதோ என்று நினைத்தேன்.

வட்டமான முகம், துடைத்து விட்டாற்போல் இருந்தது. நெற்றி நடுவே சிறு குங்குமப் பொட்டு. கன்னங்கரிய விழிகள், தடாகத்தில் ஒளிப் பிம்பங்கள் ஆடுவது போல் ஆடின. எடுப்பான மூக்கும், நேர்த்தியாக வளர்ந்த, வளைந்த புருவங்களும் ஓவியத்தில்கூடக் காண முடியாது. நீண்டு வளர்ந்த கேசத்தைப் பாய் பாயாக முதுகில் பாயவிட்டிருந்தாள். அரையில் வெள்ளை வெளேரென்ற முண்டு. அதேபோல் ஒரு வெள்ளை ரவிக்கை.

கண்களைச் சந்தித்தபோது, அவள் மார்பகம் விம்மியது. எனக்கு நிலை கொள்ளவில்லை. அந்த இடத்தை விட்டே ஓடிவிடலாமா என்ற ஒரே எண்ணந்தான். அவள் கட்டில் அருகே வந்தாள். என் உடம்பு அந்த முரடன் வந்தபோதுகூட அப்படி நடுங்கவில்லை.

என் நடுக்கத்தையும் முகம் சுருங்கினதையும் கண்டு அவள் சிரித்தாள்.

பிறகு, "ஈ கஞ்சியை குடிச்சேக்கின்...நிங்களுக்குச் சுகமில்லா!..." என்றாள்.

கஞ்சியைப் பார்த்தால் அருவருப்பு உண்டாகுமோ என்று மடமடவென்று பார்க்காமலே குடித்தேன். புழுங்கலரிசிக் கஞ்சி; என் பசிக்கு அமிர்தமாக இருந்தது.

பாத்திரத்தைக் கீழே வைத்ததும், மார்பைத் தொட்டுப் பார்த்தாள். என் மார்பு தும்பி இறகுபோல அடித்தது.

''நிங்களுக்கு ஏதா ராஜ்யம்...?''

''தமிழ் ராஜ்யம்...''

''அது அறியும்...ஏதா ஊரு...?''

''மெட்ருஸ்..'

''இவ்விடே எந்தா ஜோலி...?''

கோழிக்கோட்டில் சிவராமன் இருப்பதையும் அவன் அழைப்பிற்கு இணங்க, ஊர் பார்க்க வந்த கோலத்தையும் வழிப்பறியையும் சொன்னேன். அவள் முகத்தில் பரிதாபமும் இரக்கமும் பிரதிபலித்தன.

''கள்ளர்டே பயம் அதிகம் இண்டு இவ்விடே...அ சிவராம சாமிக்கு ஸ்டேஷனிலேய்க்கு வராம்பாடில்லே...?'' என்று அவனைக் கடிந்தாள்.

**மா**தவி போன பிறகு என் மனம் சுற்றிச் சுற்றி அவளையே வட்டமிட்டது. என்ன இளமையின் பூரிப்பு? என்ன குணம்? ஏன் அவள் இந்த மாதிரியான இடத்தில் ஒரு கிழவியுடன் வசிக்கிருள்? சுற்றிலும் மரங்களும் செடிகளும் புதர்களும் பாம்புகளும் இருக்க, இந்தக் காட்டில் ஒரு சிறு வீட்டில் இருப்பானேன்? கல்யாணமாகாதவளாக இருக்கவேணும்? இல்லை, கல்யாணமாகி விட்டதோ? அப்படியானல் கணவன் எங்கே? நெற்றியில் குங்குமம் இருக்கிறது! கல்யாணமாகி யிருந்தால் அவன் இல்லாமல் இருப்பானு? இல்லை. ஒரு வேளை...? சீச்சீ! ஆண் என்று பெயர் படைத்த எவனுலும் இவளைப்

போன்ற ஒருத்தியைப் புறக்கணிக்க முடியாது! இவள் அவனைப் புறக்கணித்திருந்தால்? குணத்தைப் பார்த்தால் இவளைப் பழி சொல்லக்கூட முடியாதே? உ...ம் பார்க்க லாம்...கதை எங்கெங்கே எப்படி எப்படி யெல்லாம் போகப்போகிறதோ?

**சா**யங்காலம் வந்தது. ஒரு தட்டில் நேந்திரங்காய் வறுவலும், தம்ளரில் 'டீ'யும் கொண்டு வந்தாள். தேங் காய் எண்ணெயானால் தலை சுற்றுமோ என்ற பயம் இருந்தும், மாதவியின் திருப்திக்காக இரண்டு துண்டுகளை வாயில் போட்டுக்கொண்டேன்.

பிறகு, "எனக்குப் போகவேண்டும்...சிவராமன் வீடு எங்கே என்று தெரியுமா?" என்று கேட்டேன்.

"அறியில்லா" என்றவள், "இனியும் ரெண்டு திவசத் திற்கு நீங்கள் போகாம்பாடில்லா......உடம்பிலே சுகம் வரண்டே...?" என்று கேட்டாள்.

இரவில் மீண்டும் கஞ்சி. இந்தக் கஞ்சியைக் குடித்தா இவள் உடம்பு இம்மாதிரி தேறியிருக்கிறது?

**ம**று நாளும் அதே சிசுருஷை. ஒவ்வொரு தடவை மாதவி வந்தபோதும், என்னுள் அவள் சிந்தனையைத் தூண்டிவிட்டாள். அதிகமும் பேசாமல், பேசாமலும் நிற்காமல், கூடப் பிறந்தவளைப்போலத்தான் அவள் நடந்துகொண்டாள். ஆனால் என் மனம் அவளைப்பற்றி வேறு விதமாக எண்ணலாயிற்று.

ஏன் அவள் இன்னும் இப்படி இருக்கவேண்டும்? கல்யாணமாகவில்லை என்றால், ஏன் விவாகம் செய்து கொள்ளக்கூடாது? சுற்றிலும் தோப்பும் துரவும் இருக்க, நடுவே ஒரு சிறு வீட்டில் தனிமையுடன் காலங் கழிப்பா னேன்? என் சிந்தனை நாலா திசைகளிலும் பாய்ந்தது.

சென்னைக்கு மாதவியை அழைத்துக்கொண்டு போனால்? நான்கு பேர் நான்கு விதமாகப் பேசிக்கொள் ளுவார்கள். ஆனால் எல்லாம் நான்கு நாட்களுக்குத்தானே?

"மலையாளத்துக்குப் போய் என் பிள்ளை இப்படியா திரும்பவேண்டும்! நல்ல இடத்திலிருந்து நாட்டுப்பெண் வந்திருக்கக் கூடாதா!' என்று அம்மா அலுத்து, அங்கலாய்த்துக்கொள்வாள். ஆனால் அம்மாவுக்கு மாதவியின் குணத்தைப்பற்றி என்ன தெரியும்? தூய உள்ளத்தைத் தான் கண்டாளா? ஊர்ப் பேச்சுக்குப் பயந்து என் நலனை நான் இழப்பானேன்?

என் பணத்தையும் வேலையையும் மாதவிக்குச் சொன்னால் அவள் சம்மதிக்க மாட்டாளா? கிழவியின் வாயில் கொஞ்சம் பணத்தைப் போட்டால் அது மூடிவிடும். சிந்தனைக்குள்ளும் சிந்தனையான, உள் மனம் என் எண்ணங்கள் சரியல்ல என்றுதான் உணர்த்தியது. ஆனால், மனத்தை அடக்க முடியவில்லையே?

அன்றிரவு ஜுரம் விட்டுவிட்டது. மறுநாள் காலையில் புறப்படலாம் என்று எண்ணினேன். அதற்குள் மாதவியின் மனத்தையும் அறிந்துவிடத் தீர்மானித்தேன்.

இரவு நன்றாகத் தூங்கிக்கொண்டிருந்தேன்.

திடீரென்று பேச்சுக் கேட்டது. ஆண் குரலின் வலிமை, இருளின் நிம்மதியில் காதை அறைந்தது. மாதவியின் குரல் அவனுடைய குரலில் மறைந்துவிட்டது. கடைசியில் ஏதோ இரைச்சலுக்குப் பிறகு, 'பளார்' என்று அறையும் சப்தமும் நாராசமாக விழுந்தது. என் மனம் பதை பதைக்க, இன்னும் என்ன வருமோ என்று எதிர்பார்த்தேன். நல்ல வேளையாக, அவன் கொல்லைப்புற வழியாகவே சென்றுவிட்டான்.

வந்தவன் மாதவியின் கணவனாக இருக்க வேண்டும் என்று ஊகித்தேன்.

மறுநாள் காலையில் மாதவி என்னை எழுப்பினாள். அவள் கைகளைப் பார்த்ததும் தி்கிட்டேன். என் மணி பர்ஸை நீட்டினாள்! பேச வாய் எழாமல் முகத்தைப் பார்த்தேன்.

மாதவி சிரித்தாள். "இது நீங்கள்டேது அல்லே?."

"ஆமாம்......இது எப்படி உன்னிடம் வந்தது......?" அது ஒன்னும் சோதிக்கண்டா...இதை எடுத்தோண்டு போய்க்கோலின்..." என்று மீண்டும் சிரித்துக்கொண்டே கூறினாள்.

முகம் கழுவின பிறகு, அவள் கொடுத்த 'டீ'யைக் குடித்தேன். எனக்கு ஏனோ ருசிக்கவில்லை. அவள் என் தோல் பையையும் கொண்டுவந்து வைத்தாள். எதிர்பார்த்ததை இழந்து விட்டவனைப்போல் இருந்த எனக்கு, இழந்ததை மீண்டும் அடைந்ததில்கூடத் திருப்தி ஏற்படவில்லை. புறப்படுகையில், "உன் புருஷன் உன்னை ஏன் அடித்தான்?" என்று கேட்டேன்.

"ஈ பையைத் தொட்டப் போ(ள்) அடிச்சுது..."

"அப்போ இதைக் கொடுத்துவிட்டால், கொன்று விடுவானே?"

"நீங்கள் விசாரப்படண்டா அதனைப்பத்தி!" அப்போது அங்கே வந்த கிழவியிடம் ஒரு ரூபாயைக் கொடுத்தேன். அதைப் பெற்றுக்கொண்ட மகிழ்ச்சியில் அவள், "ஈ பெண்ணுக்கு இன்னும் விவாகம் ஆயில்லா...ஒருத்தன் சம்பந்தம் செய்யான் வேண்டிப் பணத்தோடு வந்நு...அப்போ(ள்) இவள்டே ஜேஷ்டன் ராத்திரியிலே வழி மறிச்சான்...பின்னே அயாள் இன்னும் வந்திட்டில்லா..." என்றாள்.

"தள்ளே (கிழவி)......மிண்டண்டா......உள்ளே போய்க்கோ..." என்று மாதவி அதட்டினாள்.

"அப்போ என் பணத்தைப் பிடுங்கியவன் உன் அண்ணனா?" என்றேன் ஆச்சரியத்தோடு. ஏன் புறப்படுகிறோம் என்றுகூட வருத்தமாக இருந்தது.

மாதவி பேசவில்லை. இரு முத்துக்கள் கண்களில். சம்பந்தம் செய்ய வந்தவனுடைய நினைவில் அவள் மூழ்கிவிட்டாளோ?

# ஏக ஸ்வரம்

“மாமா, மாமா!” என்று சீனி ஓடி வந்தான்.

“என்னடா, எங்கே தீப் பிடித்தது?” என்று கேட்டேன்.

“இல்லை மாமா, நான் ஊருக்குப் போயிருந்தேனே இல்லையோ? வரத்துக்குள்ளே ராஜாத்திக்குக் கல்யாணம் நிச்சயம் பண்ணிவிட்டா...”

“பேஷ்......பேஷ்......யாருடா மாப்பிள்ளை?...என்ன பண்றான்?”

“என்ன மாமா இப்படிக் கேட்கிறேள், மாப்பிள்ளை கிட்டேயே?” என்று சீனி கோபித்துக்கொண்டான். விநாடிக்கு ஒரு தடவை அவனுடைய கூர்ந்த மூக்கு, மேலும் கீழுமாகத் துள்ளி வந்தது.

“என்ன! நீயா...? மிஸ்டர் சீனியா...? பரவாயில்லையே ! உன் அப்பாகூட என்னிடம் சொல்லவில்லையே?” என்றேன்.

“அப்பா, ‘யார்கிட்டேயும் இப்போதைக்குச் சொல்லாதே...ஊரே அதிசயப் படும்படியா உன் கல்யாணம் நடக்கப் போறது’ என்றார்.”

“பின்னே என்கிட்டே மட்டும் சொல்லுவானேன்...?”

“நீங்கள், ‘என்’ மாமா இல்லியா!” என்று சொல்லிவிட்டுப் பறந்தான். தொடர்ந்து அவன், “நீங்க யார் கிட்டேயும் சொல்லிவிடாதீர்கள்” என்று இரைந்தது என் காதில் விழுந்தது.

சீனியைப் பார்த்தபோது எனக்குச் சிரிப்பிற்கிடையில் பரிதாபமும் உண்டாயிற்று. பாவம், வயதுக்கேற்ற — உடல் வளர்ச்சிக்கு ஒப்பான - அறிவு வளர்ச்சி உண்டாக வில்லை. ஒரு அவயவம் ஜீவனற்றுப்போனால் இன்னொன்று அதி தீட்சண்யமாக இருக்கும் என்பது மெய்யோ, பொய்யோ? எனக்குத் தெரியாது. சீனியின் உடல், அறிவைப்போல் அல்லாமல் பிரமாதமாக வளர்ந்திருந்தது. வாட்ட சாட்டமான தேகம், நல்ல எலுமிச்சம் பழ நிறத்தில் கட்டுமஸ்தான கை கால்கள். முகத்தில் பிரகாசமான கண்கள். இவ்வளவு இருந்தும், அவன் காமாலை கண்டவன் மாதிரி, தனக்குள்ளே பேசிக்கொள்வதும், தான் கண்டுபிடித்த சூட்சும உலகத்தைப் பார்த்துப் புன்முறுவல் செய்து, சில சமயங்களில் சிரிப்பதும் அவனுடன் கூடப் பிறந்தவைதானோ என்னவோ?

படிப்பு, பூஜ்யம் என்று சொல்லத் தேவையே இல்லை. ஆனால், ஊரில் கேட்டறிந்த விசித்திரக் காதற்கொலைகளும் மர்ம மனிதர்களும் அவனுக்குக் காணாப் பாடங்கள். பாவம், சொத்தும் சுதந்தரமும் இருந்தும் என்ன பலன்? அவன் தகப்பனாருக்குத் தீராத தலைவலிதான். இவ்வளவுக்கும் ஒரு தொந்தரவும் அவனால் வந்தது என்று சொல்ல முடியாது.

**சீ**னி போன அரை மணிக்கெல்லாம், "பிள்ளை என்ன உளறிண்டிருந்தான் உன்னிடம்?" என்று கேட்டுக் கொண்டு எதிர் வீட்டிலிருந்து சாம்பசிவம் வந்தார். பேச்சு என்னவோ பஞ்சமத்தில் வந்தாலும் குரலில் வருத்தச் சுவடு இல்லாமல் இல்லை.

"ஒண்ணுமில்லையே; தனக்குக் கல்யாணம் என்று சொன்னான், அவ்வளவுதான்..."

"முன்னே பின்னே சொல்லாம, ஊரிலேயும் யார் கிட்டேயும் சொல்லாம ஓடி வந்திருக்கான்...அவனுக்கு யார் தான் ராஜாத்திக்குக் கல்யாணம் நிச்சயம் செய்யப் போகிறார்களென்று சொன்னார்களோ, தெரியாது!......'என்ன அப்பா, என்னைக் கேளாமல் ராஜாத்திக்கு நிச்சயம் செய்

கிருய்?' என்று சம்பந்திக்காரன் முன்னுலேயே இரைந்து விட்டான். 'உனக்குத்தாண்டா அவளைக் கொடுக்கப் போகிறது—' என்று சொல்லிச் சமாதானப்படுத்துவதற் குள் போதுமென்று ஆகிவிட்டது.'' சாம்பசிவம் திண்ணை யில் உட்கார்ந்துவிட்டார். அவருடைய நரைத்த முகத்தில் கண்கள் கலங்கி யிருந்தன. எவ்வளவு நல்லவராகத் தோன்றுகிருர்? ஏன் அவருக்கு இம்மாதிரியான பிள்ளை பிறக்க வேண்டும்?

''உம்...எல்லாம் உங்கள் போதாத காலந்தான்!''

''போன வருஷம் நிச்சயமான பிள்ளையைக் கொன்று விடுவேன் என்று பயமுறுத்திக் கல்யாணத்தையே நிறுத்தி விட்டான். அப்போதும் இது மாதிரி ஏதோ சமாதானப் படுத்தி வைத்தேன். ஆனல் ராஜாத்திக்குப் புருஷன், வேறு ஒருவன், என்று தெரிந்ததும், காலாக்னி மாதிரி கிளம்பிவிட்டான்.''

''இப்போ அதுமாதிரி ஏற்படாமல் இருக்கணும்!'' என்றேன்.

''அதற்கு உன்னைத்தான் ராமு நம்பியிருக்கேன்...''

''என்ன! என்னையா?'' எனக்குத் தூக்கி வாரிப் போட்டது.

''ஆமாம்...கல்யாணத்துக்கு ரெண்டு நாள் முன்னுலே, 'ஊரிலேதான் கல்யாணம் நடக்கப் போகிறது' என்று சொல்லி, நீ அழைத்துக்கொண்டு போ. ஆனல் ஊருக்குப் போக வேண்டாம்...வேறே எங்காவது போகட்டும்...''

''இதெல்லாம் அவன் கிட்டே பலிக்காது, சாம்ப சிவம்...அவனுக்குப் படிப்பும் அறிவும் இல்லே, வாஸ்தவந் தான். ராஜாத்தி விஷயத்தில் அவனுடைய புத்திக் கூர்மை என்னையே அதிசயிக்க வைக்கிறது!'' என்றேன். 'ஒரு புலியை வேண்டுமானுலும் வெறுங் கயிற்றில் கட்டிக் கொண்டு எங்கேயாவது போகலாம். ஏமாற்றிச் சீனியை அழைத்துக்கொண்டு போகக் கூடாது' என்று எனக் குள்ளேயே தீர்மானித்துக்கொண்டேன்.

“வீட்டிலே ஒரு ஜீவன்கூட மாப்பிள்ளையைப்பற்றியோ சம்பந்திகளைப்பற்றியோ வாய் திறக்கக் கூடாது’ என்று கட்டளை. ‘வெளியே யார்கிட்டேயும் சொல்லாதே’ என்று அவனிடம் ஆணித்தரமாகச் சொல்லி யிருக்கேன்... அவனும் பூரணமாக நம்பி யிருக்கான்...நீ மட்டும் எப்படியாவது இந்த உபகாரம் செய்தால் பயனுண்டு...உனக்குத்தான் அவனும் அடங்குவான்.”

“யோசிக்கிறேன்!” என்றேன்.

* * *

மஞ்சளையும் குங்குமத்தையும் இழந்த நிலையில் ஐந்து வயதுப் பெண்ணுடன் அண்ணாவின் வீட்டுக்கு வந்தவள் பாகீ. ராஜாத்தி என்றால் பெண் ராஜாத்திதான். அவள் பிறந்தபோதே, “பாகீ, உன் பெண் என் பிள்ளைக்கு!” என்று சீனியின் தாயார் சொல்லி யிருந்தாள். விளையாட்டு, மெல்ல மெல்லக் காரியம் ஆகிவிடும் நிலையைக்கூட எட்டும் நிலைக்கு வந்துவிட்டது. ஏனெனில் ராஜாத்தி வந்த தினத்திலிருந்து ஒன்பது வயதுப் பையனான சீனி, அவளை நிழல்போலப் பார்த்து வந்தான். அவளுடைய பின்னலைப் பிடித்துக்கொண்டு ஓடி விளையாடுவான். பாகீக்கு அப்போதெல்லாம் ஒரே ஆனந்தம். சீனி சொத்துக்காரப் பிள்ளை அல்லவா? அதுவும் ஏக புத்திரன்.

ஒரு நாள் குளத்தின்அருகில் ராஜாத்தியும் சீனியும் இன்னும் ஓரிரு சிறுவர்களும் விளையாடிக்கொண் டிருந்தார்கள். அருகே யிருந்த பூவரச மரத்திலிருந்து ஒரு புஷ்பம் ஜலத்தில் விழுந்து மிதந்தது. அதைப் பார்த்தபோது, ராஜாத்திக்கு என்ன தோன்றியதோ தெரியவில்லை. ‘சீனி, அதை எடுத்துக்கொடேன், பூ ரொம்ப நன்னா யிருக்கு!’ என்றாள். தரையில் பல பூக்கள் சிதறிக் கிடந்தது அவளுக்குத் தெரியவில்லை. சீனி தண்ணீரில் குதித்துவிட்டான். புஷ்பம் கைக்குக் கிட்டிய நிலையில்,கரைக்கு வருவது எப்படி என்று தெரியவில்லை. நீந்தத் தெரியாதவனுக்குக் குதிக்கமட்டுந்தான் தெரியும்.

‘ஐயோ! ஐயோ!’ என்ற ஓலங்களுக் கிடையில் அவன், கையில் புஷ்பத்துடன் தண்ணீரைக் குடித்துக்கொண்டே

மூழ்கிப் போய்க்கொண் டிருக்கையில்—யதேச்சையாக ஒருவர் அவனைக் காப்பாற்றினார். அவரைக் கூட அவன் யார் என்று பார்க்கவில்லை.

'இந்தா ராஜாத்தி, பூ!' என்றுதான் அவள் முன் சொட்டச் சொட்ட நின்றான், மூச்சுத் திணறிக்கொண்டே.

அவனுக்கு ராஜாத்தி என்றால் உயிர். புஸ்தகம் படிப்பவனுக்கும் இரண்டு வார்த்தைகள் பேசத் தெரிந்தவனுக்குந்தான் காதல் பிணக்கு இருக்கிறதா? சீனி விஷயத்தில் காதல், குளத்தில் விழுந்த தூய்மையான மலர்தான்.

நான்கு வருஷங்களுக்கு முன்னால் ராஜாத்திக்கு விஷ ஜுரம் வந்தது. படுத்த படுக்கையாக ஒரு மாதம் இருந்தாள். அவளைப் பெற்றவள் எப்படித் தவித்தாளோ, தெரியாது. சீனி தவித்த தவிப்புக்கு எல்லையே இல்லை.

அந்த ஒரு மாதமும் ராஜாத்தியின் அருகில்தான் சீனி இருந்தான். பகல் முழுதும் மூன்று நாட்கள் முழுதாகச் சாப்பிட்டிருந்தால் அதிகம்.

"ஏண்டா சீனி, சாப்பிட மாட்டேன் என்கிறே?"

"மாமா, ராஜாத்தி எழுந்து வந்த பிறகுதான் சாப்பாடு!"

"சீனி, உன் உடம்பு கெட்டுப் போயிடுமேடா..."

"ராஜாத்தி இப்படி இருக்கும்போது, எனக்கு என்ன மாமா உடம்பு வேண்டியிருக்கு."

"இங்கே ஒரு பிடி சாப்பிடேன்."

"ஊஹூம்..."

யார் என்ன சொல்லியும் அவன் பிடிவாதம் மாறவே இல்லை.

ராஜாத்தி பிழைத்து எழுந்த பிறகு, ஒரு நாள் சீனி வந்தான், மாமா, இன்னிக்கு உங்க அகத்திலேதான் "சாப்பாடு!" என்று சொல்லிக்கொண்டு.

பாலப் பருவத்திலிருந்து கடந்த பிறகுதான் பாகீ விழித்துக்கொண்டாள். கிளியை வளர்த்து ஒரு 'அசமஞ் சக் குரங்'கிடம் ஒப்படைக்க அவளுக்குப் பிடிக்கவில்லை. எப்போதாவது என் வீட்டிற்கு வந்தால், என் மனைவியிடம் 'சரசு, என் பெண்ணுடைய புத்திக்கும் அழகுக்கும் அவன் வேண்டவே வேண்டாம். பணத்தைக் கண்டும் சொத்தைக் கண்டும் என் பெண்ணைத் தாரை வார்க் கணுமா என்ன?' என்பாள். பாகீயைச் சொல்லி என்ன பயன்? அவள் உலகத்து மனுஷி.

ராஜாத்தி எஸ்.எஸ்.எல்.ஸி. பாஸ் செய்துவிட்டாள். இப்பொழுது வயது பதினேழு தாண்டிவிட்டது. போன வருஷமே கல்யாணம் நிச்சயமாகி யிருந்தது. அதைத் தகர்த்து எறிந்துவிட்ட சீனி, "இன்னமே அவளுக்கு வேறு வரன் பார்த்தால் வீட்டில் கொலை விழும்!" என்று பய முறுத்தினன். அவனை யாரால் என்ன செய்ய முடியும்? தாயார் அவன் செய்வதை யெல்லாம் பொருட்படுத்த மாட் டாள். அவள் கழுத்தையே அவன் நெரிக்க வந்தாலும், 'என்னடா, என் கண்ணே!' என்பாள். நாகப்பிரதிஷ்டை பண்ணின பிறகு பிறந்த பிள்ளை அல்லவா அவன்! சாம்ப சிவத்துக்குப் பயம்; அப்பனைவிட அரை அடி உயரம் பிள்ளை!

தமக்குள்ள பயத்தில் அவர் ராஜாத்தியை அவனுக்கே முடித்துவிட வேண்டும் என்றுகூட எண்ணினர். அவர் மனைவிக்கும் அதுவேதான் எண்ணம்.

"அண்ணு, நீ எங்களுக்கு ஆதரவு தந்தது எல்லாம் வாஸ்தவந்தான். அதற்காக என் பெண்ணை நான் பண யம் வைக்க முடியாது!" என்ருள் பாகீ.

"சீனிக்கு என்ன குற்றம்?" என்ருள் பிள்ளையைப் பெற்றவள்.

"குற்றம் இருக்குன்னு நான் சொல்ல வில்லையே... என் பெண்ணுக்கு வேண்டாம்னுதான்..."

"அண்டிப் பிழைக்கிறவர்களுக்குக்கூட வாய் முளைக் கிறது இந்தக் காலத்தில்..."

"ஏழைமையின் கழுத்தில் கைவைத்தால்?" என்று சொல்லிவிட்டு, "அண்ணு, நான் எங்கேயானும் வேணும்னு போயிடறேன். இத்தனை நாள் கேட்காத வார்த்தைகளை இனிமே கேட்பானேன்?" என்ருள் சாம்பசிவத்தை நோக்கி.

**வீ**ட்டுக்குள்ளே பெண்டாட்டிக்குப் பயந்து எத்தனை வேணுமானுலும் சாம்பசிவம் கேட்டுக்கொள்வார். ஆனுல் ஊர் அவரைப்பற்றி ஒரு வார்த்தைகூடப் பேசக்கூடாது. தங்கையைச் சமாதானப்படுத்தினுர்.

அப்புறந்தான் முதல் கல்யாணம் நிச்சயமாயிற்று. ராஜாத்திக்கும் ஒருவிதத்தில் நிம்மதி உண்டாயிற்று. குழந்தைக் காலம் வேறு, வாலிபப் பருவம் வேறு என்று உணர ஆரம்பித்த காலத்திலிருந்தே சீனி தனக்குக் கண வனுக வரக்கூடாது என்று ராஜாத்தி தீர்மானித்துவிட் டாள். அவன் மீது அவளுக்கு உள்ள பிரியத்துக்கும் வாஞ்சைக்கும் எல்லை இல்லை. தனக்காக உயிரையும் அலட்சியம் செய்பவன் ஒருவன் உண்டானுல் அவன் சீனி தான் என்று அவளுக்குத் தெரியும்.

ஆனுல் அவள் வேண்டினது உயிரைத் தியாகம் செய்கிற கணவன் அல்ல!

வயது வந்த பிறகும் சீனி ராஜாத்தியிடம் ஒழுங்கு இல்லாமல் நடந்துகொள்ளுவான். "இந்த வருஷமா அடுத்த வருஷமா கல்யாணம், ராஜாத்தி?" என்று கேட்பான்.

"உனக்கு எப்பவும் இதுதான் நினைவு!" என்று அவள் கடுத்துக்கொள்ளுவாள்.

"கல்யாணப் பந்தலில் நீயும் நானும் பக்கத்தில் பக்கத் தில் உட்கார்ந்துகொள்ளுவோம், இல்லையா?"

வாஞ்சையின் இடையிலும் ராஜாத்தி 'கோடானு கோடி மைல் விலகி இருக்கணும் நான்' என்று நினைத்துக்

கொண்டே, "உன்னை நான் கல்யாணம் பண்ணிப்பேன் என்று சொப்பனம் காணாதே!" என்பாள்.

"ஏனும்?"

"உனக்கு என்ன அருகதை இருக்கு?"

"என்ன இல்லை?"

"புத்தி? படிப்பு? அநுபவம்? குணம்?"

"அழகு இல்லியோ?"

"அதைக் குப்பையில் கொட்டு!" என்று சொல்லி விட்டு அவள் போய்விடுவாள்.

சீனி தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு உட்கார்ந்துவிடுவான் மணிக்கணக்காக. சோற்று நினைவே இருக்காது. என்னிடம், "மாமா, ராஜாத்தி இப்படிச் சொன்னாள்!" என்று முறையிடுவான். தனிமையில் நான் அவனைப் பற்றிப் பரிதபித்தாலும் அவனைப் பார்த்தால் கேலிதான் தோன்றும் என் வார்த்தைகளில்.

"நான் உன்னைக் கல்யாணம் செய்துகொள்ளுகிறேன்" என்று ராஜாத்தியே வந்து சொன்னால்தான் சீனி சாப்பிட உட்காருவான். அதை அவள் சொல்ல லேசில் முன்வரவும் மாட்டாள். சீனியின் தாயார், பிள்ளையைக் கண்டு வயிறு எரிகையில், "இந்தப் பட்டத்து இளவரசிக்கு எந்த ராஜா காத்துண்டு நிக்கறானோ தெரியவில்லை!" என்று வார்த்தைகளைக் கொட்டுவாள்.

மொத்தத்தில், சாம்பசிவம் என்ன பாவத்தைச் செய்தாரோ, இம்மாதிரியான நிலை உண்டாவதற்கு!

*　　　*　　　*

**க**டைசியில் நான்தான் சாம்பசிவத்தின் மழுங்கிப் போன மூளைக்கு யோசனை கூறவேண்டி வந்தது. அவர் மேல் உள்ள மரியாதையினாலும், ராஜாத்தியின் மேலுள்ள கனிவாலுந்தான்.

"சாம்பசிவம், என்றைக்குக் கல்யாணம்? ஆனி மாதம் பத்தாம் தேதிதானே?"

"ஆமாம்!"

"நாளன்றைக்கு ஒண்ணும் தேதி. சீனியை அழைத்துக்கொண்டு நான் பட்டணம் போகிறேன். 'கல்யாண டிரஸ்ஸைப் பட்டணத்தில் வாங்கலாம்' என்று சொல்லி ரூபாயை அவனிடம் கொடு. கல்யாணம் பதிமூணும் தேதின்னு சொல்லு. கல்யாண அழைப்பு இன்னும் தயாராகவில்லையே?"

"இல்லை. வேணுமானால் அவன் பேரையும் போட்டு வேணு கொஞ்சம் தயாரிக்கிறேன்!"

சாம்பசிவத்தின் வெள்ளை மனசைக் கண்டு நான் இளகிப்போனேன்.

"அதெல்லாம் வேண்டாம்!"

ஆனி மாதம் முதல் தேதி நானும் சீனியும் பட்டணம் கிளம்பினோம். என் எதிரே உட்கார்ந்து கொண்டு, வெளியே மலைகளையும் மரங்களையும் பார்த்துச் சிரித்துக் கொண்டே வந்தான். ஏதோ தனக்குள்ளே பேசிக் கொண்டான். கண்களை மூடி மூடித் திறந்தான். நீண்ட மூக்கைத் தடவி விட்டுக்கொண்டான். "ராஜாத்திக்குப் பிடிக்கிற மாதிரியா டிரஸ் வாங்கணும்!" என்று ஆயிரம் தடவை சொன்னான்.

"நானும் அவளுமா வந்து பட்டணத்திலே பெரிய ஸ்டூடியோவில் போட்டோ எடுத்துக்கொள்ளணும்!" என்றான். இப்படி இன்னும் எவ்வளவோ!

இரண்டு மூன்று நாட்கள் கடை வீதி யெல்லாம் சுற்றினோம். தினுசு தினுசாகக் கணக்கில்லாமல் கண்ணாடி வளையல்கள் வாங்கினான். "அப்பா பணம் தந்திருந்தால் பொன் வளையலும் ராஜாத்திக்கு வாங்கலாம்!" என்று சொல்லிக்கொண்டே, சுமார் பத்துப் பன்னிரண்டு கஜம்

ஸில்க் ரிப்பன் வாங்கினான். "அவளுக்கு ரிப்பன்னா உசிரு மாமா!"

என்னுடைய நண்பருக்குத் தெரிந்த தையற்காரன் ஒருவனிடம் சீனி வாங்கின துணிகளுடன் சென்றோம்.

"பத்தாம் தேதி நான் ஊரில் இருக்கவேண்டும். என் ஆயிரம் சிநேகிதர்களையும் கூப்பிட வேண்டும். அதற்குள்ளே வேண்டும்!" என்றான் அவன், தையற்கார னிடம்.

"அதெப்படி முடியும்? எல்லாம் உயர்ந்த துணிகள். பதினைந்து நாள் ஆகும்!" என்று தையற்காரன் கூறினான்.

சீனிக்கு ஏற்பட்ட மனத்தாங்கலைக் கவனித்துவிட்டு, "அவசரப்பட்டால் தையல் நன்னாகாது. அப்புறம் ராஜாத்திக்கும் அதிருப்தி" என்று நான் சொன்ன பிறகு தான் ஒரு வகையான சமாதானம் அவனுக்கு உண்டா யிற்று.

ஊர் திரும்பும் படலம் வந்தது.

பெட்டி நிறைய உடுப்புக்களும், ராஜாத்திக்காக வாங்கின துணிமணியுமாக எழும்பூரில் என்னுடன் ரெயில் ஏறினான். எழும்பூரையே விலைக்கு வாங்கி ராஜாத்தி பேருக்கு எழுதி வைத்துவிட்டதான மமதை அவன் முகத் தில் தாண்டவமாடியது.

எக்ஸ்பிரஸ் வேகமாகப் போய்க்கொண்டிருந்தது தூங்கச் சௌகரியம் இருந்தும் அவன் தூங்கவில்லை. என்னையும் தூங்கவிடாமல் ஏதேதோ பேசித் துளைத்துக் கொண்டிருந்தான்.

இரவு மூன்றரை மணிக்குத் திருச்சி ஜங்ஷன் வந்தது. அரை மணி நேரத்திற்குப் பிறகு, எங்கள் ரெயில் புறப் படும் தறுவாயில், எதிர் பிளாட்பாரத்தில் இன்னொரு ரெயில் எதிர்த் திசையிலிருந்து வந்தது.

"மாமா, நானும் ராஜாத்தியும் பட்டணம் போவதாக இருந்தால் அதில்தானே வரவேண்டும்?" என்று அவன்

கேட்டுக்கொண் டிருக்கையிலேயே எங்கள் ரெயில் ஊதியது.

அடுத்த கணத்தில், ''மாமா, ராஜாத்தி!'' என்று அவன் இரைந்தான்.

தூக்கக் கண்களுடன் பார்த்தேன். ஆமாம், ராஜாத்தி தான்! முதலில் அவள் இறங்கியிருக்கிறுள் கூஜாவுடன். பின்னுல் அவளை அணைய வந்தவன் பட்டு வேஷ்டியிலும் ஸில்க் ஷர்ட்டிலும் காட்சியளித்தான்.

ரெயில் நகர ஆரம்பித்துவிட்டது. பாகீ ஒரு கூடை யுடன் இறங்கிறுள்.

ரெயில் ஓட ஆரம்பிக்கையில், ''அப்பாவும் இறங் கறு!'' என்று கத்திக்கொண்டே கதவைத் திறக்க முற் பட்டான் சீனி. லேசில் பிடி நகரவில்லை.

ஜன்னல் மூலமாக ஒரு காலை விட்டான். ''ராஜாத்தி! ராஜாத்தி!!'' என்ற இரைச்சல் இரவு வேளையில் பயங்கர மாக ஒலித்தது.

நானும் இன்னும் இரண்டு பிரயாணிகளுமாக அவனைப் பிடித்து இழுக்க முயன்ருேம். அவன் எங்களை ஒரே கையால் ஒதுக்கிவிட்டு இரண்டு கால்களை யும் வெளியே கொண்டுவந்து குதித்தான். இதற்குள் ரெயில் பிளாட்பாரத்தைக் கடந்தாகிவிட்டது.

ரெயில் நின்றபோது, சீனி குதித்த இடத்தில் இல்லை. சிறிது தூரத்தில் தள்ளப்பட்டிருந்தான். சுருதி கலைந்த மனத்தில் ஒரு ஸ்வரம் மட்டும் - ராஜாத்தி - அழகாக இருந்து அழிந்துவிட்டது.

# தாழம்பூ

சரோஜாவை நான்கு நாட்களாகக் காணவில்லை. எனக்கு எதிராக உட்கார்ந்து தினமும் என்னிடம் ஏதாவது கேட்டுக்கொண்டு வேலை செய்யும் அவள் இல்லாதது வெறிச்சென்றிருந்தது. வந்தது முதல் என்னிடமேபயின்று காரியாலய விஷயங்களை அறிந்துகொண்டதால் என்மீது தனி அன்பும் மதிப்பும் அவளுக்கு இருப்பதாக எனக்குத் தோன்றியது. எனக்கும்-நாளுக்கு நாள் இயந்திர வாழ்க்கையில் மனம் கசந்துகொண் டிருக்கும் எனக்கும் — அவள் புத்துயிர் அளிக்கும் மருந்தாக இருந்தாள்.

அவளுடைய வேலை நான்கு நாட்களாகத் தேங்கி நிற்பதைக் கண்ட மானேஜர் என்னை அழைத்தார்.

"என்ன, அந்தப் பெண்ணை நான்கு நாட்களாகக் காணோம்? ஒரு தகவலும் இல்லை!" என்று அவர் ஆரம்பித்தார்.

"ஆமாம். லீவ் லெட்டர்கூட வரவில்லை."

"வேலையை உதறிவிட்டாளா? அப்படியானால் ஏன் எழுதிப் போடக்கூடாது? வேறு யாரையாவது அமர்த்திக்கொள்ளலாம்."

"ஏதாவது சங்கடத்தில் மாட்டிக்கொண் டிருக்கிறாளோ என்னவோ..."

"அதென்னவோ, ஏதோ! ஒருத்தியினால் ஆபீஸில் சில வேலைகள் நின்றுவிட்டன என்று வரக்கூடாது. இன்னும் இரண்டு நாள் பார்க்கலாம். வரவில்லையானால் மூன்

ருவது நாள் வேறு யாரையாவது நியமிக்க வேண்டியது தான்.''

அவர் சொன்னவுடன், சரோஜா சிவந்த முகத்துடன், கண்ணில் நீர் துளிக்க, பாக்கிச் சம்பளத்தைப் பெற்றுக் கொண்டு காரியாலயத்தை விட்டு, இடது கையில் குடையுடனும் வலது கையில் பையுடனும் இறங்கிச் செல்லுவது என் கண்முன் நிழலாடியது.

''விசாரித்துப் பார்த்தால் என்ன?'' என்று கேட்டேன். என்னையும் மீறி என் வார்த்தைகளில் அவள் மீதுள்ள அக்கறை தொனித்தது.

''அது உன் பாடு. ஆபீஸ் 'பைலில்'தான் அவளுடைய விலாசம் இருக்கிறதே. என்னவோ செய்'' என்று அவர் சொன்னர். அவர் மனத்திலும் சரோஜாவைப் பற்றிய நல்ல அபிப்பிராயம் இருக்கிறது என்பது தெரிந்தது. இருந்தாலும் உத்தியோக அதிகார உறையில் அவர் ஒளிய வேண்டியவர்தானே ?

நாளைக்கும் வராவிட்டால், சாயந்தரம் போய்ப் பார்த்துக் கொள்ளலாம் என்று தீர்மானித்தேன். இரவெல்லாம் ஏனே அவள் என்னைச் சுற்றிச் சுற்றி வந்தாள். அவள், தன் தூய வெள்ளைப் புடைவையில், பச்சைக் கரை பிரகாசிக்க, துடைத்து விட்டாற்போன்ற இளம் முகத்தில், சிறிய குங்குமம் செம்மை வீச, என்னை ஏதோ ஆபீஸ் விஷயமாகக் கேட்பது போன்ற பிரமை அடிக்கடி உண்டாயிற்று. காலையில் வந்ததும் எனக்கு ஒரு புன் முறுவலால் வந்தனம் செலுத்திக்கொண்டே குடையை ஒரு மூலையில் வைப்பதும், நடந்த ஆயாசத்தில் முகத்தில் பிறந்த முத்துக்களைக் கைக்குட்டையால் துடைத்துக் கொண்டே ஆசனத்தில் உட்காருவதும் என் கண்முன் நிழலாடின.

சரோஜா வந்து மூன்று மாதங்கள்தான் ஆயின. வயது இருபத்துமூன்று அல்லது இருபத்து நான்கு இருக்கலாம். மாந்தளிர் மேனி. ஒற்றை நாடியான சரீரம்.

இரண்டு கைகளில் ஒன்றில் மட்டும் ஒரு சிறிய கடிகாரம். இன்னொன்றில் ஒரே ஒரு தங்க வளையல். காதில் மூக்கில் ஒன்றுமில்லை, கழுத்தில் மெல்லிய சங்கிலி. முகத்தில் களை இருந்தது. ஆனால் அழகி என்று சொல்ல முடியாது. பார்த்ததும் உள்ளத்தில் பதியும் முகம். ஊடுருவிப் பார்த்தால்தான் அப்படியொன்றும் அழகு இல்லை என்று தெரியும். எடுப்பான மூக்கும், முகத்திற்குச் சற்றுப் பெரிய கண்களும் அழகிப் பட்டத்திற்குக் குறுக்கே நிற்பவையாகத் தோன்றின. பெரிய கருவிழிகளில் பிரகாசம் தோன்றினாலும், 'மாட்டினி' காட்சியில் சிறு கதவுத் துவாரம் காரணமாக மங்கலாக நிழலாடுவதுபோல, ஏதோ சொல்ல முடியாத ஏக்கம் புதைந்து கிடப்பது தீர்க்கமாகப் பார்ப்பவர்களுக்குத் தெரியும். அதை மறைத்துக்கொண்டும், மறைக்க முயன்றுகொண்டும் எங்களிடையில் அவள் உழலுகிறாள் என்பது நான் அறிந்ததுதான்.

அவளுடைய உடைகளைப் பார்த்தால் ஏதோ வேலையைப் பொழுதுபோக்குக்காக வைத்துக்கொண் டிருக்கிறாள் என்றுதான் எல்லாருக்கும் தோன்றும். காலில் நாகரிக ஜோடுகள், தூய வெண்ணிறப் புடைவை, கரையின் நிறத்திற்கேற்ற ரவிக்கை, ஒரு நாளாவது பழம் புடைவையைக் கட்டிக்கொண்டு வந்தாள் என்று கிடையாது. எந்த வண்ணான் இவளுக்குச் சலவை செய்கிறான் என்று எனக்கு வியப்பாக இருக்கும்.

**தூ**க்கம் வருமுன், "தெய்வமே, நாளைக்கும் அவள் வரக்கூடாது!" என்று வேண்டிக்கொண்டேன். எங்கள் இருவருக்குமிடையில் உள்ள தூரத்தைக் குறைக்க, என்னுடைய விஜயம் ஒத்தாசை புரியும் என்பது என் கருத்து. அவள்மீது நான் கொண்டிருக்கும் அக்கறையின் மேலாவது அவளுக்கு என்மீது புதுவிதமான உறவு பிறக்கலாகாதா என்பது என்னுடைய ஏக்கம்.

தெய்வம் என்னை மறுநாள் கைவிட்டது.

"இன்றும் நீ வராமலிருந்தால் உன் வீட்டிற்குச் சாயங்காலம் வரலாமென்று இருந்தேன்" என்றேன்.

அவள் முகம் திடீரென்று சுருங்கியது.

"ஏன்? எதற்காக?"

காரணத்தைச் சொன்னேன்.

"விலாசந்தான் இருக்கிறதே. கடிதம் எழுதினல் போதாதா?" என்று அவளுக்குப் புதிதான குரலில் கூறிவிட்டு, "நான்தான் லீவ் லெட்டர் அனுப்பினேனே!" என்ருள்.

அவள் குரலின் மாறுதலை விரும்பாத நான், "எந்த ஆபீஸுக்குப் போய்ச் சேர்ந்ததோ அது!" என்றேன் சற்றுக் கடுகடுப்பாக.

"அதற்கென்ன, வேறு ஒன்று எழுதிக் கொடுக்கிறேன்!"

"அதற்கு முன்னல் ஒரு தடவை மானேஜரைப் போய்ப் பார்த்துவிடு. அவர் என்ன சொல்லுகிருரோ?"

அவளுக்குத் திடீரென்று பயம் தோன்றியது.

"வேலைக்கு ஒன்றும் பங்கம் வராதே?" என்று அவள் ஏக்கம் கலந்த ஆர்வத்துடன் கேட்டாள்.

"எனக்குத் தெரியாது. மானேஜருக்குத்தான் தெரியும்" என்றேன். ஏனே எனக்கு அவள்மீது ஒரு வெறுப்புப் பிறந்தது. அவள் வீட்டுக்குப் போவதாக இருந்ததைக் கேள்விப்பட்டதில் அவளுக்குச் சுவாரஸ்யம் குறைந்துவிட்டதைக் கண்டு என்னல் பொறுக்க முடியவில்லை.

அவள் மானேஜரைப் பார்க்கச் சென்ருள்.

'ஏன் தன்னை வீட்டில் பார்ப்பதை அவள் விரும்பவில்லை? வெளியில் இருப்பவர்கள் ஏதாவது வம்பு பேசுவார்கள் என்ரு? இல்லை, தாயார் விரும்பமாட்டாள் என்ரு? இல்லாவிட்டால் என்னைப் பிடிக்கவில்லையா?' பல கேள்விகள் இது மாதிரி என்னுள் எழுந்துகொண்டே இருந்தன.

பத்து நிமிஷத்திற்கெல்லாம் அவள் திரும்பி வந்து விட்டாள்.

"மானேஜர் விசேஷமாக ஒன்றும் சொல்லவில்லை. நீங்கள் என்னைப்பற்றி ரொம்ப அக்கறை எடுத்துக் கொண்டதாக மட்டும் ரொம்பச் சொன்னார்!" என்றாள். வேலை போகவில்லை என்ற கர்வம் கலந்த மகிழ்ச்சியில், அவள் என்னை ஏளனம் செய்வதுபோலப் பேசினாள்.

"அதற்குத்தான் நீ சரியானபடி எனக்குக் கொடுத்து விட்டாயே, இனிமேல் உன் வீட்டுக்கு வரச் சொப்பனத் தில்கூட நினைக்க முடியாதபடி!"

"எனக்குத் தெரிந்தவர்கள் யாரும் என் வீட்டுக்கு வருவதை நான் விரும்பவில்லை!" என்றாள் அவள்.

அதற்குப் பிறகு அந்த விஷயத்தைப்பற்றி நான் பேசவில்லை.

நாள் செல்லச் செல்ல என்னை அறியாமல் என் மனம் அவள்பால் இழுத்துக்கொண்டு போவதை உணர்ந்து கொண்டேன். சிற்சில சமயங்களில் அவளும் நெகிழ்ந் தாள். ஒரு சனிக்கிழமை தைரியமாக, "சினிமாவுக்குப் போகலாமா? நல்ல படம் என்று சொல்லிக் கொள்கிறார் கள்!" என்று கேட்டேன். அவள் 'சரி' என்று சொன் னது என்னைக் குளிர வைத்தது. மூன்று மணிநேரம் மூன்று விநாடியாகப் பறந்தது.

எங்கள் பழக்கம் நாளுக்கு நாள் வளர்ந்துகொண்டு வந்தது. தாய் தந்தையரற்ற எனக்கு என் வாழ்வை நானே நிர்ணயித்துக்கொள்ளும் சுதந்தரம் இருந்ததால் அந்த வாழ்வின் எதிர்காலத்தைப்பற்றி நினைக்கலானேன்.

அவளும் நானுமாக ஒன்றாக ஆபீஸ் சென்று ஒன்றாகத் திரும்பி வரலாம். ஒரு சமையற்காரியை இருபது ரூபாய்க் குப் போட்டுக்கொண்டால் ஒரு கஷ்டமும் இருக்காது. அவளுடைய தொண்ணூறு ரூபாயும் என்னுடைய நூற்றைம்பது ரூபாயும் சுகமான இல்வாழ்க்கைக்குப்

போதாவா? அதுவும் மானேஜருக்கு அடுத்தபடியாக இருக்கும் எனக்கு, உத்தியோக உயர்வு இன்றைக்கோ, நாளைக்கோ!

மானசிக உலகில் என் உள்ளம் எல்லாப்பேச்சுக்களையும் பேசி, எல்லாச் செய்கைகளையும் செய்து எல்லா இன்பங்களையும் அநுபவித்துக்கொண் டிருந்தது.

ஒரு நாள் சரோஜாவிடம் சொன்னேன்: ''சரோஜா, இன்றைக்கு ரெண்டு பேருமா ஒரு படத்திற்குப் போவது. பிறகு கடற்கரைக்குப் போவது, அங்கே ஒரு முக்கியமான சமாசாரம் உன்னிடம் சொல்ல வேண்டும்.''

சினிமா முடிந்ததும் அவளே கேட்டாள். ''அந்த முக்கியமான சமாசாரம் நம் இருவரையும் பற்றித்தானே?''

''ஆமாம்.''

''அதற்குக் கடற்கரைக்குப் போவானேன்? வீட்டுக்கு வாருங்கள். அங்கே பேசிக் கொள்ளலாம்.''

எனக்கு வியப்பாக இருந்தது. பழைய வருத்தமெல்லாம் நொடியில், மண்ணோடு மண்ணாக மடிந்துவிட்டது.

''இன்று நான் எப்போதும் போலப் போகிறேன். நீங்கள் வேறு ஒரு நாள் வாருங்கள்'' என்றாள்.

''நாளைக்கு ஞாயிற்றுக்கிழமை. காலையில் வருகிறேன்!'' என்றேன்.

''ஆகட்டும்'' என்றாள்.

**எ**திர்பார்த்தபடி ஞாயிற்றுக்கிழமை காலையில் போக முடியவில்லை.

சாயங்காலந்தான் சரோஜா வீட்டுக்குப் போக முடிந்தது.

சிந்தாதிரிப்பேட்டையில் கடை வீதியிலிருந்து கிளம்பும் பல சிறு தெருக்களிலிருந்து பிறக்கும் ஒரு சந்து.

''சிவப்பிரகாசம் சந்து. எட்டாவது நம்பர் வீடு''. சரோஜாவின் விலாசம் என் மனத்தில் முத்திரையாகியிருந்தது. சந்தின் சாக்கடை நாற்றம் சகிக்க முடியவில்லை. கார்த்திகை மாதமாதலால் ஆறு மணிக்கே இருட்டிவிட்டது. மழைத் தண்ணீர் அங்கங்கே குட்டை குட்டையாகத் தேங்கிக் கிடந்தது. கஷ்டப்பட்டுக்கொண்டு, எட்டாவது நம்பரைக் கண்டுபிடித்தேன்.

தோள் உயரத்திற்கும் வராத கதவில் ஒரு சிறு பையன், அரைச் சராயுடன் சாய்ந்துகொண்டு, தன் பரட்டைத் தலையில் பேன் எடுப்பதுபோல நின்றுகொண்டிருந்தான்.

''தம்பி, எட்டாவது நம்பர் வீடு இதுதானே?'' என்று கேட்டேன்.

''இதிலே நீளமாப் போறது பாருங்கோ. எல்லாமே எட்டாம் நம்பர்தான்'' என்று அவன் சொல்லிவிட்டு எங்கேயோ பார்த்துக்கொண் டிருந்தான்.

''சரோஜா என்கிற பெண் இருக்கிற வீடு எது?'' என்று கேட்டேன். அவள் தாயார் பெயர் - மாமியாராக வரப்போகிறவளுடைய பெயர் - எனக்குத் தெரியாது.

''சரோஜாவா? வாருங்கள்'' என்று நான் எதிர்பார்க்காத துள்ளலுடன் அவன் கிளம்பினான்.

கழுத்து வலிக்க மண்டையைத் தாழ்த்திக்கொண்டு கதவைத் தாண்டினேன். நீளமான முன் தாழ்வாரத்தின் ஒரு பக்கம் சுவர். இன்னொரு பக்கம் ஒன்று இரண்டு என்று ஏழு குடிகள். ஏதோ ஒரு குடிக்குள் அவன் புகுந்து, ''அக்கா, அக்கா! உன்னைத் தேடியுண்டு யாரோ வந்திருக்கா!'' என்றான். இதற்குள் இரண்டு மூன்று சிறு குழந்தைகளும், ஒரு சிறு பிள்ளையும், காடு மாதிரி தலையை வளர்த்துக்கொண்டும், சூம்பிப்போன வயிறுகளுடனும் சிறு கதவின் முன் நின்றது என் கண்ணில் பட்டு, என் வயிற்றைச் சுருங்கச் செய்தது.

கதவிலிருந்தே உள் நோட்டம் விட்டேன். ஒரே அறை. அதற்குள் ரெயில் வந்த பிளாட்பாரத்தில் அடுக்கியிருக்கும் மூட்டைகள் மாதிரி என்ன என்னவோ! கீழே ஒரு பக்கத்தில் இஸ்திரிப் பெட்டி நெருப்புடன் வைக்கப்பட்டிருந்தது. பச்சைக் கரையிட்ட வெள்ளைப் புடைவையை அழகாக மடித்துக்கொண்டு சரோஜா உட்கார்ந்திருந்தாள்.

"இதுவா சரோஜா இருக்கும் இடம்? இவளையா நான் மணம் செய்துகொள்ள வந்தேன்?" என்று மயக்கம் வரும் நிலையில் எழுந்த கேள்விக்குப் பதிலளித்துக் கொள்ளுமுன், யாரோ ஒரு பையன் தலைதெறிக்க ஓடி வந்து, "மாமியை நாளைக்குக் காலையிலே ஐந்து மணிக்கெல்லாம் ஆபீஸர் அகத்திலே வரச்சொன்னு. காலையிலே எட்டு மணிக்கு எங்கேயோ போகிறார்களாம். அதற்குள்ளே சமையல் ஆகணுமாம்!" என்று சொல்லிவிட்டு ஓடினன்.

"உள்ளே வாருங்கள். ஏன் அங்கேயே நிற்கிறீர்கள்?" என்று சரோஜா சொன்னாள்.

சாக்கடையில் நடக்கும் பிரமையுடன் உள்ளே சென்றேன். சரோஜாவின் புடைவையைப் பார்த்தேன். காவி நிறம். அதில் ஏழெட்டு இடங்களில் ஒட்டு. இவளா அப்படி 'டிரஸ்' செய்துகொண்டு ஆபீஸ் வருகிறாள்?

என் முகத்தில் தோன்றின விபரீத மாறுதலை அவள் புரிந்துகொண்டாள். "அம்மா இன்னும் வரவில்லை. வரும் நேரந்தான்!" என்றாள்.

நான், "அப்போ இன்னொரு நாள் பார்த்துப் பேசினால் போகிறது!" என்றேன்.

"இன்னொரு தரம் இங்கே வருவீர்களா?" என்று கேட்டுக்கொண்டே என்னைப் பார்த்தாள். அந்தப் பார்வையில்தான் என்ன அர்த்தம்!

"வராமல் என்ன?" என்று ஏதோ மென்று விழுங்கினேன்.

"எனக்கு மூன்று தங்கைகளும் இரண்டு தம்பிகளும். எல்லாம் தொண்ணூறு ரூபாயில்... அம்மாவுக்கு நடு நடுவே ஏதாவது கிடைக்கும். என் நிலையை அப்பட்டமாக வெளியே கொண்டுவந்தால் ஆதரவே கிடைக்காது. அதனால் ஆதரவைத் தேட ஆபீஸுக்கு அம்மாதிரி வர வேண்டியிருக்கு. செலவுதான். என்ன செய்கிறது... அந்தச் செலவு மூலதனம். லாபம், நான்கு பேருடைய மதிப்பும் அபிமானமுந்தான்."

"இன்னொரு நாள் வருகிறேன்!" என்று மீண்டும் சொல்லிவிட்டு எழுந்தேன்.

வாசல் வரை அந்தப் பையன் வந்தான். சந்தில் காலை வைத்ததும் எதிரே ஓர் அம்மாள் பிஞ்சுப் பழமாக, நரைத் தலையுடன், சோகை நிறத்துடன் வந்துகொண் டிருந்தாள்.

"அம்மா! அம்மா!" என்று பையன் கத்தினன். நான் காதில் போட்டுக்கொள்ளாமல் நடந்தேன்.

"உங்கள் அன்பு நெஞ்சுக்கு மேல்தான்!" என்று சரோஜா சொல்லலாம். அதைக் கேட்டுக்கொண்டு இருப்பதை விட வேறு என்னல் என்ன செய்ய முடியும்?

மொத்தத்தில் தாழம்பூக் கொண்டையில் ஒட்டிக் கொள்ளும் பூச்சிகள்தாம் என் நெஞ்சை உறுத்தின. வெளியே இருக்கும் பூவையும் ஏற்க முடியவில்லை.

# விடிந்தது

இரவின் நிம்மதியைக் குலைத்துக்கொண்டு ராஜி வீரிட்டு அழுதாள். கதிகலங்க அவளையே பார்த்துக் கொண்டு நின்ற ரமணிக்கு இருதயமே நின்றுவிடும் போலிருந்தது. ராஜியின் ஒவ்வொரு துடிப்பும், ஒவ்வொரு கதறலும் அவனுடைய உள்ளத்தை அல்லவா தாக்கின!

ஒரு தடவை சுற்றிலும் பார்த்தான். ராஜியின் தாய் - அவன் மனைவி - சோர்வு நிறைந்த அலுப்பினால் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தாள். மேலே கொடியில் புடைவையும், ராஜியின் சொக்காயும் இளங்காற்றில் அசைந்து கொண்டிருந்தன. ஓர் ஓரத்தில் ராஜியின் விளையாட்டுச் சாமான்கள். 'ஸெல்லுலாய்டு' பொம்மை - ஒரு நாள் ராஜி செய்த அலங்காரத்துடன் - ராஜியையே கூர்ந்து பார்ப்பதுபோலக் காட்சி யளித்தது. அறையினுள் விழுந்த தெரு வெளிச்சத்தில் தன்னுடைய நிழலைக் கண்ட போது அது ராஜியின் முகத்தில் படர்ந்தது தெரிந்தது. ஓர் அடி நகர்ந்துகொண்டே ராஜியின் சலனமற்ற முகத்தைப் பார்த்தான். அப்பொழுதுதான் பறித்த வெண் தாமரையின் நினைவுதான் அக் கணத்தில் - காலத்தின் விபரீத நேரத்திலும் - அவனுள் தோன்றியது.

ராஜியின் ஒவ்வோர் அங்கமாக அவன் பார்த்துக் கொண்டே வருகையில், திடீரென்று மார்பு பிளந்தது போல் இருதயத்தில் ஓசை. முழங்காலுக்கு மேல் அவனால் பார்க்க முடியவில்லை. பெண்ணின் கால்களைக் கொண்டா தெய்வம் அவன் உள்ளத்தை உதைத்துக் கசக்க வேண்

டும்? ஏதோ புது வியாதியாம்! 'போலியோ'வாம்! அது ஏன் அவளுக்கு வர வேண்டும்?

கார்த்திகை மாதத்துக் குளிர்காற்று. ராஜியின் மீதிருந்த போர்வை நீங்கியிருந்தது. தூக்கத்தில் நடப்பவன்போல, காரணமின்றித் திரியும் ஊமைபோல, அவன் அவளருகில் சென்று, போர்வையைக் குழந்தைமீது உடலறியாவண்ணம் போர்த்தினன். கால்கள் பக்கமாக அதைச் சரி செய்கையில் அவன் கைகள் நடுங்கின. ஏன் அவள் கால்கள் அப்படியாக வேண்டும்?

ரேடியோ அருகில் இருந்த கடிகாரத்தைப் பார்த்தான். மணி பதினென்றரை. தனக்கு மணி எத்தனையானல் என்ன என்ற கேள்வி எழுந்த கணமே, எப்படித்தான் எப்போதுதான் விடியப் போகிறதோ என்ற ஏக்கமும் உண்டாயிற்று. ஆனல், மணி பார்க்க வேண்டிய அவசியமும் உடனேயே நினைவில் ஏறிவிட்டது. பன்னிரண்டு அல்லது பன்னிரண்டரை மணிக்கு ராஜிக்குக் கஞ்சி கொடுக்க வேண்டுமே?

அன்று அவன் கஞ்சி கொடுப்பதில்தான் என்ன விசேஷம்? அதற்குப் பிறகு அவன் கஞ்சி கொடுக்க அவசியம் இருக்கப் போகிறதா? இல்லை, ராஜிதான் கஞ்சி வேண்டும் என்று கேட்கப் போகிருளா? விடிவதற்குள் விடிவுதான், எல்லாருக்கும் விடியப் போகிறது. 'போலியோ' என்றும் குணமாகாது என்று டாக்டர் சொல்லி விட்டார்! ஆனல் அவன் கொடுக்கும் மருந்து ராஜியையே குணப்படுத்தும்!

ஏதோ அஜீர்ணத்தால் வரும் காய்ச்சல் என்றுதான் ரமணி நினைத்தான், ராஜி முதல் முதலாகப் படுத்தபோது. அந்தக் காய்ச்சல் தீர்ந்தும், ராஜியின் முகத்தில் தெளிவு ஏற்பட்டும், அவள் ஏனே படுக்கையிலிருந்து எழுந்திருக்கவில்லை!

"ஏண்டி, நீதான் மூணு நாள் படுத்து எங்க உசிரை வாங்கியாச்சே, எழுந்திரேன்!" என்று ஸ்ரீமதி எரிச்சலுடன் சொன்னுள்.

ராஜியின் முகம், அனலில் பட்ட இலைபோலச் சுருங்கியது. நான்கு வயதுக்காரிக்கு உள்ளம் இல்லையா? அவள் மௌனம் சாதித்தாள். அரை மணி நேரம் பொறுத்து மீண்டும் தாயார் வந்து பழையபடி இரைந்தபோது, "அம்மா எழுந்திருக்க முடியல்லே!" என்றாள். ஏதோ உள் வலியில் கலங்கி நிற்கும் கன்றுக்குட்டிபோலத் தோன்றினாள் ராஜி.

"ஸ்ரீமதி, குழந்தைக்கு எழுந்திருக்க முடியல்லைன்னு அவளைத் தொந்தரவுபடுத்தாதே. அவள் எழுந்திருந்து என்ன ஆகணும் இப்போ...?" என்று ரமணி கூறினான்.

"நீங்கள் கொஞ்சம் பேசாம இருங்கோ. இப்படிப் படுத்துக்கொண்டே இருந்தால்?......ஜுரந்தான் விட்டாச்சே. இருடீ. நான் உன்னை நிக்கவைக்கிறேன்...!" என்று சொல்லிக்கொண்டே குழந்தையை ஸ்ரீமதி, பெட்டியைத் தூக்கும் கூலியாளைப்போலத் தூக்கினாள். அடுத்த கணம்—

"ஐயோ அம்மா!" என்று அலறிக்கொண்டே எழுந்த ராஜி, படுக்கையில் மீண்டும் விழுந்தாள். அந்த அலறல் விதியின் சிரிப்பாகக் கேட்டபோது, ரமணியின் உள்ளம் பாகாகியது. அக்கணமே டாக்டரிடம் ஓடினான். ஓடுகையில் ஏதோ சிறுபிள்ளை வாதம் என்றுதான் எண்ணினான். ஆனால் டாக்டர் வாய்மொழியில் 'பெரி'தாக அல்லவா ஏற்பட்டுவிட்டது?

* * *

மணி பன்னிரண்டு அடிக்கப் பத்து நிமிஷம்; ரமணிக்குத் தூக்கம் வராது என்று தெரியும். வெற்றிலை, சீவல், புகையிலையை எடுத்து வைத்துக்கொண்டான். மேஜை டிராயரிலிருந்து எடுக்கையில் ராஜியின் பந்து கண்ணில் பட்டது. அந்தப் பந்து உருட்டிவிட்ட சிந்தனைகள் அவனுள் அலைமோதின.

சென்ற வருஷம் ராஜிக்குப் பிறந்த நாள் வந்தது. பல நாட்களாக, "அப்பா, நேக்குப் பந்து வேணும், அப்பா...! எதிர் வீட்டுப் பேபிகிட்டேப் பந்து இருக்கு" என்று அவள் சொல்லிக்கொண் டிருந்தாள்.

பெண் குழந்தை, பந்து விளையாடக் கூடாது என்று ஸ்ரீமதி கண்டித்ததையும் அவன் லக்ஷ்யம் செய்யவில்லை. ராஜியின் பிறந்த நாள் அன்று வெள்ளைப் பந்து ஒன்று வாங்கிக்கொண்டு வந்தான். ராஜிக்கு ஆனந்தம் தாள வில்லை. சுவரில் விட்டெறிந்து அவள் ஓடினாள். என்றோ ஒரு நாள், கால் பந்து ஆடுவதை அவனோடு சேர்ந்து பார்த்த நினைப்பில், "ஏம்ப்பா, அன்னிக்கு இப்படித் தானே ஆடினா?" என்று காலால் பந்தை உதைத்து விளையாடினாள்.

இப்போது அதை நினைத்தபோது, ரமணியின் உள் ளம் விண்டு விரிந்தது. "இனிமேல், என் கண் ஓடுவாளா? பந்தைக் காலால் எட்டி எட்டி உதைப்பாளா? பந்து வேணும் என்றுதான் கேட்பாளா?" என்ற கேள்விகள் சுவரில் எறிந்த பந்தாகத் திரும்பித் திரும்பி அவனையே தாக்கின.

பரந்து கிடந்த மேகக் கூட்டங்கள் சேர்ந்து, குவிந்து, பொழிய ஆரம்பித்தன. ஜன்னல் மூலமாக வந்த சாரல், ரமணியின் பிடரியில் அடித்தது. ஒரு நிமிஷ நேரம் அதை யும் பொருட்படுத்தாமல் நின்றான். இன்னும் இப்படியே போனால் அறையினுள் நீர் பாயும் எனத் தோன்றவே, ஜன்னலை மூடப் போனான். அப்போது தெருவில் தண்ணீர் ஓடுவது தெரிந்தது.

அக்கணமே இரண்டு மாதங்களுக்கு முன்னால் ராஜி மழைத் தண்ணீரில் தெப்பம் விட்ட நாள் நிழலாடியது.

* * *

அவன் பாக்டரியிலிருந்து வந்துகொண் டிருந்தான். மழை அப்போதுதான் விட்டிருந்தது. ராஜியும், இன்னும் நாலைந்து குழந்தைகளும் கொம்மாளம் அடித்துக்கொண்

டிருந்தனர். தூரத்திலிருந்து வரும்போதே, ரமணியின் உள்ளத்தில் அக்காட்சி பதிந்துவிட்டது. அந்த உள்ளக் கிளர்ச்சியில், அவன் மனத்தில், 'இந்த உலகத்தில் எந்தத் துக்கத்தையும் குழந்தைகளைப் பார்த்துக்கொண்டே சகித்துக்கொள்ளலாம்.........கோடித் துக்கம் குழந்தை வதனத்தினுலே மறைந்துவிடுமே!' என்று நினைத்துக் கொண்டே நடந்தான்.

அப்போது ஒரு லாரி வேகமாக வந்துகொண் டிருந்தது. குழந்தைகளெல்லாம் கூக்குரல் இட்டுக்கொண்டு வாசற் படியை நோக்கி ஓடினுர்கள். ஆனுல் லாரி அவர்களை விட வில்லை. மழைத் தண்ணீரை அது மிதித்த மிதியில், தண்ணீர் இரண்டு பக்கமும் பாய்ந்து, பரந்து, சிதறியது. ராஜியின் கத்திரிப் பூ நிறக் கவுன் பூராவும் ஒரே தண்ணீர்! அதுவும் சிகப்பு நிறத் தெருவின் சிகப்பு நீர். அத்துடன் அவள் சிரித்துக்கொண்டே, எதையோ சாதித்துவிட்ட பெருமையோடு ரமணியிடம், "அப்பா, லாரி வந்தது. தண்ணியை வாரி இறைச்சுடுத்து!" என்று கூறினுள்.

ரமணிக்கு மகிழ்ச்சி தாளவில்லை. அவளுடைய ஈர உடலையும் கவனியாமல், தூக்கி அணைத்துக்கொண்டே உள்ளே சென்ருன். அவன் உடுப்புக்களைக் கழட்டி, டிபன் சாப்பிட வருவதற்குள், ஸ்ரீமதி தன்னுடைய கடமையை நிறைவேற்றி விட்டாள். "மழைத் தண்ணிலே போய் நாள் பூராவும் அலையறது! உனக்கு 'டைபாய்டு'ம், 'நியுமோனியா'வும் வந்தால், யார் பாடுபட முடியும்!"

கண நேரத்தில் ராஜியின் மகிழ்ச்சி அஸ்தமித்து, வருத்தத்தின் இருள் கவிந்துவிட்டது. "ஏண்டி, ராட்சஸி மாதிரி குழந்தையைக் கொல்லுகிருய்! அதன் வயசிலே நீ மழைத் தண்ணியில் அலையாமல்தான் வளர்ந்தாயோ?" என்று ரமணி குழந்தையைத் தன் பக்கம் இழுத்துக் கொண்டான்.

"ஆமாம், ராட்சஸி மாதிரி இருந்தாத்தான் உங்க பெண்ணை வளர்க்க முடியும்!.........நீங்க கொடுக்கிற

செல்லத்தில் இது அடங்காப் பிடாரியா ஆகப் போகிறது!' என்று ஸ்ரீமதி கறுவினுள்.

அன்று ரமணி தன் கையாலேயே, இரண்டு மூன்று காகிதக் கப்பல்கள் செய்து பெண்ணுக்கு அளித்தான்.

* * *

மணி பன்னிரண்டு அடித்தது. வெளியே மழை நின்ற சுவடு தெரிந்தது; மூடியிருந்த ஜன்னல் கதவுகளைத் திறந்தான். அவன் பார்த்த திக்கில் ஆகாயம் களங்கமற்றிருந்தது. கூர்ந்து, கூர்ந்து பார்த்தான், கண்களின் முழு தீட்சண்ணிய பலத்துடன். அவனுல் அளக்கவே முடியவில்லை.

'என் பெண்ணின் எதிர்கால வாழ்வின் துக்கமும் இந்த ஆகாயம் மாதிரிதானே!' நினைவு பிறந்த கணமே அவன் முன்னுல், பதினைந்து வயதுப் பெண் எழுந்து நிற்கவும் இயலாமல் உட்கார்ந்து, அவனைப் பார்த்துத் தவிக்கும் காட்சி நின்றது.

எவ்வளவோ முயன்றும் மானசிகக் காட்சியை அவனுல் தவிர்க்க முடியவில்லை, 'நான் ஏன் பிறக்க வேண்டும்? பிறந்தும் ஏன் இப்படி வாழ வேண்டும்?' என்று ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் ராஜி நொந்து கொள்ளப் போகிருள். இருதயத்தின் ரத்தம் அவளுடைய கண்ணில் சுரக்கப் போகிறது! அவள் கண்ணில் மட்டுமா? அந்தக் காட்சியைக் கண்டு அவன் கண்களிலும்தான்!...

நினைக்க நினைக்க ரமணிக்குப் பொறுக்கவில்லை. எத்தனை நாள் அவன் நினைத்துவிட்டான் இம்மாதிரி? மேனுட்டு நிபுணர்களையே திகைக்க வைக்கும் நோய் ராஜிக்கு வந்துவிட்டது என்று டாக்டர் கூறியதிலிருந்தே அவன் குழம்பிக் கிடந்தான்.

எவ்வளவு ஆசையுடன் அவன் ராஜியை வளர்த்தான்! தனக்கு வேண்டியதையும் மறுத்து, அவளுக்காகச் செலவு

செய்து திருப்தி செய்தானே? எதிலுமே அவனுக்கு அதிக அக்கறையில்லை. ஸ்ரீமதி, அவனுடைய தாயார், தகப்பனர், தம்பி எல்லோரிடத்துமே அதிகமாக அக்கறை கொண்டு ஒரு காரியத்தையும் செய்யமாட்டான். அப்பேர்ப்பட்டவன் அபரிமிதமான ஆசையை அள்ளிச் சொரிந்து விட்டான்! ஒரே பெண்ணின் மீது! அதற்குத் தெய்வம் ஏன் அவனைத் தண்டிக்க வேண்டும்? அதுவும் இம்மாதிரி.

* * *

பக்கத்துத் தெருவில் இருக்கும் கொட்டகையில் சினிமா முடிந்துவிட்டது. ஜனங்கள் - ஆண்களும் பெண்களுமாக – வந்துகொண்டிருந்தார்கள். சிலர் தூங்கி வழிந்துகொண்டு வந்தார்கள். வேறு சிலர் தூக்கத்தைப் பிடிக்க விரைந்துகொண்டிருந்தனர். எல்லோரையும் அலட்சியம் செய்துகொண்டு ஓர் இளந் தம்பதி போய்க் கொண்டிருந்தனர்.

தெருவின் வெளிச்சத்தில் அந்தக் கணவன்-மனைவியரைப் பார்த்தபோது ரமணிக்குத் துக்கம் பீரிட்டுக் கொண்டு வந்தது. அவன் ஸ்ரீமதியுடன் போய் வந்த நாட்கள் அவனுள் தோன்றவில்லை. இப்போது போய்க்கொண்டிருந்தவர்களின் அழகும் மனத்தில் பதியவில்லை. அவன் பெண் ராஜி, அவளுடைய ஜன்மத்தில் இது மாதிரி போவாளா? இக் கேள்விதான் அவனுள் எழுந்து அவனை அறைந்தது.

ராஜியால் எங்கேதான் போக முடியும்? யாராவது தூக்கிக்கொண்டு போனல்தானே அவள் உலக இன்பக் காட்சிகளைப் பார்க்க முடியும்?

அவன் பெண்ணை யார் கல்யாணம் செய்துகொள்ள முன் வருவார்கள்? 'வலது கன்னத்தில் பெரிய மச்சம் இருக்கிறது' என்று சொல்லிப் பெண்களை ஒதுக்கும் உலகத்தில் ராஜிக்கு ஏது இடம்?

ஒரு பெண்ணுக்குக் கல்யாணம் ஆகவில்லையானால் அவளுடைய கதி! படித்த பெண்களே இந்தக் காலத்தில் ஆண் ஆதரவின் அவசியத்தை உணருகையில் அவனுடைய பெண் – அதுவும் குறைப்பெண் – எப்படி வாழ்வாள்? அப்பாவும் அம்மாவும் இருக்கும் வரையில் ராஜியைப்பற்றிப் பயப்பட வேண்டாம். அவன் முதலில் மறைந்தால், ஸ்ரீமதி இப்பெண்ணை வைத்துக்கொண்டு என்ன செய்வாள்? அவளும் போய்விட்டால், ராஜிக்கு யார் ஆதரவு? கருகிய மரந்தான்! கருகிய மரத்தையும் வெட்டி முறித்து உபயோகிக்கும் மனிதர் இருக்கிற உலகத்தில் அவனுடைய கண்ணுக்குக் கண்ணான ராஜி எப்படிக் காலந்தள்ளுவாள்?

*　　　*　　　*

நேரம் செல்லச் செல்ல, ஜுரத்தின் சூடு நெற்றியில் அடிப்பதுபோல, உணர்ச்சியின் கொந்தளிப்பு ரமணியைத் தாக்கியது.

தினம் தினம், பொழுது விடிய, பொழுது அஸ்தமிக்க, இருந்து இருந்து, அவனுடன் வாழ்ந்து வாழ்ந்து, ராஜி அவனை வதைக்கத்தான் வேண்டுமா! இந்த உதயாஸ்தமன அவஸ்தையில், தினம் தினம் இருதயம் கசிந்துகொண்டிருக்க வேண்டுமா! தன் வாழ்வை, மறைந்த காலத்தின் நிழலாக்க ராஜியை ஏன் தெய்வம் தன் வசமே கொள்ளக் கூடாது? கால மருந்தில் மனப்புண் ஆறிவிடும். வடு, பிற்பாடு தோன்றினாலும், உள்ளத்தில் வலி இருக்காது. விநாடி நேரச் சஞ்சலந்தான்.

நினைக்க நினைக்கச் சட்டைப்பையில் இருக்கும் மருந்துதான் அவன் முன் நின்றது. அந்த மருந்துக்குத்தான் என்ன சக்தி! அவனுடைய துக்கச் சுமையையே அது அவிழ்த்துவிடப் போகிறது! அவனுடன் வெகு நாள் பழகின நண்பனே அதைக் கொடுக்க மறுத்துவிட்டான் என்றால் அதன் வலிமையைப்பற்றிக் கேட்க வேண்டுமா!

"என்னடா, உனக்குப் பைத்தியம் கியித்தியம் பிடித்துவிட்டதா!" என்ருன் நண்பன்.

"உனக்கு என்னடா...கேட்கிற பணத்தை வாங்கிக் கொள்..."

"உனக்குக் கொடுத்துவிட்டு என்னைக் கடை மூடச் சொல்லுகிருயா?"

"என் நிலையில் நீ இருந்தால் என்றைக்கோ நான் செய்ய எண்ணி யிருக்கிறதை நீ செய்திருப்பாய்!"

"விஷயத்தைச் சொல்...பார்க்கலாம்..."

தன் உள்ளப் போராட்டத்தை நண்பனிடம் விவரித்தான்.

எத்தனையோ நேரம் யோசித்துவிட்டு, "சரி, சாயங்காலம் ஏழு மணிக்கு வா, எடுத்து வைக்கிறேன்...நான் இல்லாவிட்டாலும் கம்பவுண்டர் இருப்பான்...அவனிடம் கொடுத்து வைக்கிறேன்...வெளியே மட்டும் தெரிந்தால் தீர்ந்தது...! இரண்டு பேருமாகக் கல் உடைக்கப் போக வேண்டியதுதான்...!"

* * *

நண்பன் சொன்ன வார்த்தைகள் இன்னும் ரமணியின் காதுகளில் ஒலித்துக்கொண் டிருந்தன.

அவன் செய்கையின் விபரீத பலன், கடைசியில் நண்பன் சொல்கிற மாதிரி ஏற்படுமோ? அக்கணமே ஸ்ரீமதி அபலையாகத் தெருவில் நிற்கும் தோற்றம் அவன் முன் எழுந்தது. ஆனல் அடுத்த நிமிஷம் அவன் தன்னையே தேற்றிக்கொண்டான்.

"ஏன் அதுமாதிரி யெல்லாம் பயப்பட வேண்டும்?... இரண்டாம் பேருக்குத் தெரியாது, நான் செய்யப் போவது...ஏன், ஸ்ரீமதிக்கே தெரியப் போவதில்லை!"

சட்டைப் பையிலிருந்து அந்தப் பொட்டணத்தை எடுத்தான். வெகு சிறு பொட்டணம்! அதில்தான் எத்தனை பெரிய சக்தி! அந்தச் சமயத்தில், 'நாசம் செய்கிற சக்தி எளிதில் கிடைக்கிறதே...!உயிர் அளிக்கிறசக்தி ஏன் கிடைக்கமாட்டேன் என்கிறது; டாக்டர் தைரியமாகக் கையை விரிக்கிறார்! எத்தனையோ ஆயிரம் 'கேஸ்'களைப் பார்த்த அவருக்கு ராஜி என்ன பொருட்டா?' என்றெல்லாம் எண்ணங்கள் ஓடின. அந்த எண்ணங்களுக்கு இடையிலும், 'ஏன் நான் பொறுக்கக் கூடாது......இந்த நாகரிக உலகத்தில் நாளுக்கு நாள் விஞ்ஞான விந்தைகள் நடந்து கொண்டிருக்கின்றன. ராஜிக்கும் விடிவு வராதா? எவனாவது ஒருவன் ஒரு மூலையில் தனிமையில் உட்கார்ந்து, அந்த விடிவை ஏற்படுத்த மருந்தைக் கண்டுபிடிக்க மாட்டானா?' என்ற சிந்தனைகளும், ஆர்வம் கலந்த சந்தேகங்களும் கிளம்பின.

ஆனால் அவன் உள்ளத்தின் ஆழத்தில் எழுந்தது, சோகத்தின் எதிரொலிதானே?

மணியைப் பார்த்தான். நின்று நின்று கால்கடுத்த கடுப்பிலும், 'உ...ம்......மணி பன்னிரண்டே முக்கால்... நேரம் ஆகிவிட்டது......' என்று முணு முணுத்துக் கொண்டே, கண்ணாடித் தம்ளரில் கஞ்சியை எடுத்தான். பொட்டணத்தை அவன் எப்படி மறப்பான்?

அரைத் தூக்கத்தில் ராஜி கஞ்சியைக் குடித்தாள். அவளுடைய நினைவு எங்கேயோ? அந்தத் தூக்கச் சுமை படிந்த முகத்திலும் தனி அழகு மிளிர்வதை ரமணியால், வேலையின் கொடுமையிலும் அநுபவிக்காமல் இருக்க முடியவில்லை.

'விடிவதற்குள், விடிந்துவிடும்!' என்று சமாதான மடைந்தான்.

ஐந்து மணி ரயிலில் அவன் புறப்பட்டால்தான் ஏழரை மணிக்குப் பாக்டரியில் இருக்கலாம். அந்த வேளையில் புறப்படுவதும் அவனுக்கு ஒரு விதத்தில் சௌகரியமாக இருந்தது.

வீட்டை விட்டுப் புறப்படுவதற்கு முன் ராஜியின் சலனமற்ற முகத்தை-ஏன் சலனமற்ற உடலைப்-பார்க்க வேண்டுமென்ற அவா தோன்றியது. கூடவே எழுந்த, பயத்தினுல் அதைத் தவிர்த்துவிட்டு ஸ்ரீமதியிடமும் சொல்லிக்கொள்ளாமல் புறப்பட்டுவிட்டான்.

ஆனுல் நேரம் செல்லச் செல்ல, மனம் மாறுபட்டுக் கொண்டே வந்தது. அவன் செய்தது சரியா? தன்னுடைய சுயநலத்திற்கு, வாழ்நாளின் நிரந்தர நிம்மதியைப் பெற, வாழ்வில் ஏற்படக் கூடிய போராட்டங்களுக்குச் சால் ஜாப்புச் சொல்ல முடியாமல் செய்த செய்கை நியாயந் தானு? தன் நிம்மதிக்கு ஒரு ஜீவன் பலியாக வேண்டுமா? பற்பல எண்ணங்கள் அலை மோத, அவனுக்குத் தான் செய்தது தவறு என்று பட்டது. ஆனுல் செய்த தவற்றை மாற்ற முடியாதே? எந்த டாக்டர் வந்தாலும் ராஜி இனி மேல், 'இருந்த' ராஜிதான்!

ரயில்வே ஸ்டேஷனில் ரமணி பேப்பர் வாங்கினுன். ஏதோ யந்திரம்போலத்தான் பத்திகளைக் கண்கள் பார்த்தன. ஆனுல் அப் பார்வையிலும், அவனை வதைத்த வியாதி அடிபட வேண்டுமா?

அமெரிக்காவில் அந்த வியாதிக்கு மருந்து கண்டு பிடித்து விட்டார்களாம். நூற்றுக்குத் தொண்ணூற் றென்பது பேர் குணம் அடைந்திருக்கிருர்களாம். மருந்து, வெளி நாடுகளுக்கும் அனுப்பப்படுகிறதாம்! என்ற செய்தியைப் பார்த்ததுமே ரமணிக்கு மூர்ச்சை போட்டு விட்டது மாதிரி ஆயிற்று.

சேச்சே! ஒரு நாள் தள்ளி வந்துவிட்டது செய்தி. நம்பிக்கையே இருக்காது என்று நினைத்துச் செய்தது எவ் வளவு அறிவீனமாகப் போய்விட்டது! அவனுடைய ராஜியை அவனே கொன்றுவிட்டான். அவளுக்கு வாழ்வே கிடையாது என்று அவனே நினைத்து, தீர்மானித்து, அதற்கு ஒரு முடிவையும் அவனே கொடுத்துவிட்டான்.

உள்ளத் துடிப்போடு கோட்டை ஸ்டேஷனில் அவ னையும் அறியாமல் இறங்கின ரமணியை ஏதோ ஒரு வேகம்

உந்தியது. தாம்பரத்தை நோக்கிச் செல்லும் ரயிலில் ஏறிவிட்டான்.

அந்த முக்கால் மணி நேரம் எப்படித்தான் சென்றதோ! அவன் கண்கள் முன்னுல் ராஜி...இப்போது கால்களை மட்டுமா அவளால் அசைக்க முடியாது? கைகளை மட்டுமா? கண்ணைத்தான் திறக்க முடியுமா? நாவுதான் பேசுமா? ராஜி மண்ணோடு மண்ணுகப் போனபின் அவளுடைய சாம்பல்தானே காற்றில் பறக்கும்! இவ்வளவிற்கும் காரணம்? அவன், அவன், அவனேதான்!

திடீரென்று, 'எதற்காக இப்போது வீட்டை நோக்கிச் செல்ல வேண்டும்?' என்ற கேள்வி எழுந்தது. இனிமேல் அவனுக்கு ராஜியைப் பார்ப்பதும் ஒன்றுதான்; பார்க்காமலே இருப்பதும் ஒன்றுதான். பார்க்க வேண்டாமென்றுதானே, செய்ய நினைத்ததையும் செய்து, விடிவதற்குள் புறப்பட்டும் வந்திருக்கிருன். பின் ஸ்ரீமதிக்குத் தேறுதல் சொல்லவா? தேறுதலுக்கு அவசரமும் அவசியமும் இல்லையே!

சிந்தனைத் தொடர் முடிவதற்குள் தாம்பரம் வந்துவிட்டது. அவனுடைய உள்ளம் உடலை மீறிக்கொண்டு முயலாகத் தாவித் தாவி ஓடியது, கார்த்திகை மாதத்துக் குளிரிலும் உடல் வியர்த்தது.

ராஜி உயிரோடு இருக்க மாட்டாள் என்ற தீர்மான எண்ணத்திற்கு இடையிலும், 'ஒருவேளை, மருந்து வேலை செய்திருக்காது' என்ற நம்பிக்கை நூல் இழையாக ஓடியது. ஆகா! அவனுடைய நம்பிக்கை மட்டும் வெற்றி பெற்ருல்! வெற்றி எண்ணமே அவனுக்கு வாழ்வின் வெற்றியாக முடியும்! ஆனுல் அவன் கொடுத்து வைத்தவனு!

'இந்தச் சமயத்தில்மட்டும் தெய்வம் என்னைக் கைவிடாமல் இருந்தால், இம்மாதிரியான அவசரச் செயலை என்றென்றும் செய்யவே மாட்டேன்!' என்று அவன் மனதார வேண்டிக்கொண்டே நடந்தான்.

வீடு வெறிச்சென்றிருந்தது. வாசலில் கோலம் இல்லை. வீட்டினுள் நிசப்தம் நிலவிக்கொண்டிருந்தது. அவனுடைய பயம் விஷம்போல ஏறிக்கொண்டே போயிற்று.

கூடத்தில் ஆள் அரவமே இல்லை.

கடைசியாகப் பொறுமையை இழந்து, வேதனையின் பாரம் தாங்க முடியாமல் அவன் அறையினுள் பாய்ந்தான்.

ஸ்ரீமதியைக் காணோம். பின்கட்டில் இருப்பாளோ என்னவோ? அடுத்த நிமிஷம்,—

பயந்து பயந்து செத்துக்கொண்டிருந்த அவன், ராஜியின் படுக்கையைப் பார்த்தான். அதே சமயத்தில் ஆள் அரவத்தில் விழித்துக்கொண்ட ராஜி அவனை ஏறிட்டுப் பார்த்தாள்!

"ராஜி! விடிந்துவிட்டது!!" என்று தன்னையும் மீறிக்கொண்டு ரமணி கத்திவிட்டான்.

ஒரு கணம் நிதானித்துவிட்டு அவன் புறப்பட்டான், மருந்துக் கடை நண்பனைப் பார்க்க. நண்பன் ரமணியைப் பார்த்துச் சிரித்தான்!

# கட்டாயக் கல்யாணம்

**போ**த்தனூர் ஸ்டேஷனில், அவர், தம் நண்பர் ஒருவருடன் வண்டியில் ஏறி, ஜன்னல் ஓரமாக, என் எதிரில் உட்கார்ந்துகொண்டார். வயது நாற்பதையும் தாண்டாமல் நாற்பதுக்குள்ளும் அடங்காமல் ஒரு புதிராக இருந்தது.

கன்னங் கரிய தேகம், கொழுத்து வளர்ந்திருந்தது. முகத்தில் தேஜஸ் என்று ஒன்று இல்லாவிட்டாலும் களை நிறைந்ததாக இருந்தது. மேல் உதட்டை மறைத்துக் கொண்டு அடர்த்தியாக வளர்ந்த கரிய மீசை காம்பீர்யத்தை அளித்ததே ஒழியப் பயங்கரத்தை வீசவில்லை. தலையை அழகாக வாரி விட்டிருந்தார். வலது கையில் ஒரு வைர மோதிரம், இடது கையில் ஒரு தங்க மோதிரம், மணிக்கட்டில் தங்கச் சங்கிலியிட்ட கைக்கடிகாரம். சரிகைக் கரையிட்ட வேஷ்டியும் ஸில்க் ஷர்ட்டும், இடது தோளில் விரித்தபடி இருந்த பட்டு மேல் வேஷ்டியும் பணக்காரக் கோலத்தை வீசின.

வண்டி புறப்படும் வரை எங்கும் நிசப்தமே நிலவியது. கையிலிருந்த பத்திரிகையை மடித்து, மடியில் வைக்கப் போகையில், மீசைக்காரரின் நண்பர், "ஸார், ஒரு நிமிஷம் நானும் பார்க்கலாமா?" என்றார்.

"ஓ, தாராளமாகப் பார்க்கலாம்!" என்று கொடுத்தேன்.

பெட்டிக்குள் பத்து அல்லது பன்னிரண்டு பேர் தான். என் எதிரே இருந்த மீசைக்காரர் அடிக்கொரு

தடவை வலது கையால் மீசையைத் தடவிக்கொண்டும், கட்டை விரலால் மோதிரத்தை நிமிண்டிக்கொண்டும் ஜன்னலுக்கு வெளியே பார்த்த வண்ணம் இருந்தார். இதற்கிடையில் அவருடன் வந்தவரின் கையிலிருந்த, என் பத்திரிகையின் பல தாள்களில் ஒரு தாள், மூன்றாவது பிரயாணியின் கைக்குச் சென்றது. இரவலில் இரவல்!

அந்த மூன்றாவது பிரயாணியின் கைக்கு அந்தத் தாள் வந்ததும், "இங்கே பார்த்தீர்களா, இந்த அதிசயத்தை! தனக்குப் பிடித்த ஒருவனைத்தான் கல்யாணம் செய்து கொள்ளுவேன் என்று பிடிவாதம் பிடித்த பெண்ணை வேறொருவனுக்கு நிச்சயம் செய்யவே, அவள் ஒரு குளத்தில் விழுந்துவிட்டதாகவும், நல்ல வேளையாகச் சமயத்தில் யாரோ வந்து காப்பாற்றினதாகவும் போட்டிருக்கிறது!" என்று உரக்கச் சொல்லிவிட்டு எல்லோரையும் ஒரு முறை பார்த்தார்.

நான் ஒன்றும் பேசவில்லை. மீசைக்காரர் மீசையைத் தடவிக்கொண்டே, மௌனம் சாதித்தார். ஆனால் அவர் உதடுகளில் புன்னகை அரும்பியதை மட்டும் கவனித்து விட்டேன்.

செய்தியின் அதிசயத்தால் தாக்குண்டவர், மேலும் தொடர்ந்து, "நம்ம நாட்டிலே கல்யாண விஷயத்திலே பெண்ணின் இஷ்டப்படி பெற்றவர்கள் நடந்துகொள்ளா விட்டால் எவ்வளவு விபரீதங்கள் பாருங்கள்! சிவனே என்று அவள் சொன்னவனுக்கே முடித்திருந்தால் குளத்திலே விழப் போயிருப்பாளா?...... விழுந்ததுதான் விழுந்தாள்; அதோடு போகாமல், பாதி உயிரோடு திரும்பி வந்திருக்கிறாளே! இனிமேலே அவள் உயிர் போகிற வரைக்கும் உலகம் அதைப்பற்றித்தானே பேசிக்கொண்டிருக்கும்!" என்றார்.

அவர் கூறுவதில் உண்மை இருக்கிறது என்று பட்டது எனக்கு.

திடீரென்று மீசைக்காரர் வாயைத் திறந்தார். "நிதானமாக யோசித்துப் பார்த்திருந்தா அந்தப்

பொண்ணு குளத்திலே விழுந்திருக்கும்னு நினைக்கிறீர்களா? என்னமோ ஒருத்தனைக் கல்யாணம் பண்ணிக்கணும்னு ஆசைப்பட்டது. எதுக்கு அவனைத்தான் பண்ணிக்கணும்னுகூடத் தெரியாமெ ஆசைப்பட் டிருக்கும். அது கிடைக்காம போனதாலே, எல்லாமே போயிடிச்சுன்னு குளத்திலே முன்னே பின்னே யோசிக்காம விழுந்திருக்கு. அது மட்டும் நிதானமாக யோசித்து, தாய் தகப்பன் சொன்னபடி கேட்டிருந்தா, அது சௌக்கியமா இருக்கும் புருஷன்கூட...''

''அதெப்படீங்க சொல்ல முடியும்?'' என்றார் விஷயத்தை ஆரம்பித்தவர்.

''நான் சின்னக் கதை ஒண்ணு சொல்றேன். சிரமமில்லாவிட்டால் கேளுங்க. இந்த மாதிரி ஒரு பெண்ணைப் பத்தித்தான் அது......'' என்று மீசைக்காரர், தமது மீசையை வருடிக்கொண்டே ஆரம்பித்துவிட்டார்.

* * *

**சா**மிநாதக் கவுண்டனைப்பற்றிக் கேட்டிருக்கிறீர்களோ, என்னமோ? அவன் தன் முயற்சியாலேயே முன்னுக்கு வந்தவன். பன்னிரண்டு வயதிலே சிற்றாளாக ஒரு கடையில் வேலைக்குப் போனவன், இருபது வயதுக்குள் கடையில் நேர்மையான வேலையாள் என்று பெயர் வாங்கி, இருபத்தைந்தாவது வயதிலே சிறிய கடை ஒன்றைச் சொந்தத்திலே நடத்த ஆரம்பித்துவிட்டான். அவனுக்குத் தாயாரும் ஒரு தம்பியுந்தான். அவனுடைய தங்கையைக் கல்யாணம் செய்து கொடுத்திருந்ததால், பொறுப்பு அவ்வளவு அதிகம் இல்லை. அண்ணனைவிடப் பன்னிரண்டு வயது சிறியவனான தம்பி ஷண்முகம், அண்ணனுடைய கடையிலேயே இருந்து வந்தான்.

கடை, விருத்தி யாகிக்கொண்டு வர வரச் சாமிநாதனுக்கு ஊரில் கௌரவமும் மதிப்பும் அதிகமாகிக் கொண்டே வந்தன. கூடவே கர்வமும் அகங்காரமும்

அவனுடைய ரத்தத்தில் வளர லாயின. ஒவ்வொரு நரம் பிலும் பிடிவாதமும் விடாமுயற்சியும் படைத்த அவன், 'என் முயற்சியால் நான் முன்னுக்கு வந்தவன்!' என்ற திமிருடன்தான் பேசுவான். தம்பி, கடையில் ஏதாவது சிறு பிசகு செய்தாலும், "என்னடா, நீ வச்ச கடைன்னு எண்ணமோ! என் பணம்டா! உனக்கு எங்கே அதன் அருமை தெரியப் போகிறது?" என்பான்.

வியாபாரம், செழித்து வளருகையில் தங்கையின் புருஷன் திடீரென்று இறந்துவிட்டான். தங்கை தனது பன்னிரண்டு வயதுப் பெண்ணுடன் அண்ணன் நிழலைக் கெஞ்சிக்கொண்டு வந்தாள். "அநாதைகளுக் கெல்லாம் என் வீடுதான் சத்திரமா?" என்று பொருமிக்கொண்டே சாமிநாதன் அவளுக்கு நிழல் அளித்தான். அவளுடைய பெண்ணைக் காணும்போதெல்லாம் அவனுக்கு எரிச்சல் தான் வந்தது.

"போனதுதான் போனுனே! இந்தப் பீடையையும் பெத்துவிட்டுத்தான் போகணுமா!" என்று கறுவிக் கொண்டான். பிற்காலத்தில் அவளுடைய கல்யாணம் அவ னுடைய பொறுப்புத்தானே! சிற்சில சமயங்களில் அதை வாய்விட்டுக் கூடச் சொல்லிவிடுவான். அப்போதெல்லாம் அவன் தங்கைக்கு ரோஷத்தால் உள்ளம் பதறும். வழி யிருந்தால் என்றைக்கோ அவனை விட்டுப் போயிருப்பாள். ஆனால், அதுதான் இல்லையே!

* * *

**வ**ருஷங்கள் சென்றன. தாயாருக்கு வயதாகிக் கொண்டு வந்தது; பிள்ளைகளுக்குப் வயதாகிக்கொண்டு வந்தது; பேத்திக்கும் வயதாகிக்கொண்டு வந்தது. அவ ளுடைய பன்னிரண்டாவது வயதிலிருந்தே, ஷண்முகத் திற்கு மனம் சரியில்லை. இப்போது அவளுக்குப் பதினறு வயது; அவனுக்கு இருபது. பெரிய மாமா எப்பொழுதும் தன்னைக் கரித்துக் கொட்டுகிருர் என்ற ஆதங்கம் அவளுக்கு.

''அபிராமி, இந்த விஷயத்தில் நமக்குள்ள ஒற்றுமை, வேறு யாருக்கும் எந்த விஷயத்திலும் இருக்காது!'' என்பான் ஷண்முகம்.

''மாமா, அவர் என்னைத் திட்டும்போதெல்லாம் நீ தான் எனக்குப் பக்கபலமாக இருக்கிறாய்...... கசிந்து போற மனசிலே நீதான் கரும்புச் சாற்றைப் பிழிகிறாய்!''

''நீயும் அப்படித்தான் என் விஷயத்தில்! அண்ணா என்னை விரட்டும்போதெல்லாம் நீதானே எனக்கு ஆறுதலாக ஏதாவது சொல்கிறாய்?''

''ஏன் இந்தமாதிரி நம்மை யெல்லாம் மாமா அடக்குகிறார்?''

''தான் சொந்தமாகச் சம்பாதிக்கிற பணம்னு அகங்காரந்தான்!''

''மாமா எப்போ கல்யாணம் செய்துகொள்ளப் போகிறார்...? வயது முப்பத்திரண்டு ஆச்சே, இல்லையா?'' என்று கேட்டாள் அபிராமி ஒரு நாள்.

''அதுதான் எனக்கும் தெரியவில்லை. நானும் அதற்காகத்தான் காத்துக்கொண் டிருக்கிறேன்...சீக்கிரத்திலே எவளாவது ஒருத்தியின் கழுத்திலே தாலியைக் கட்டிவிட்டா எல்லாருக்கும் விடியும்...அவருடைய அசுர குணமும் குறையும். எனக்கும் உனக்கும் விடிவு தோன்றிவிடும்!'' என்றான் ஷண்முகம்.

நாலைந்து வருஷங்களாகப் பழகியதில் அவர்கள் தங்களுக்குள் எவ்வளவோ ஒற்றுமைகளைக் கண்டுவிட்டார்கள். இரண்டு பேரும் ஒவ்வொரு விதத்தில் திக்கற்றவர்கள்; இரண்டு பேரும் ஒரே மாதிரி கஷ்டப்படுகிறவர்கள். ஒருவருக்கு இன்னொருவர் ஆதாரம் என்ற எண்ணங்கள் அவர்களை ஐக்கியப்படுத்தின.

சாமிநாதனுக்கு வயது முப்பத்திநாலு ஆகியும், ஏனோ அவன் விவாகத்தைப்பற்றி யோசிக்கவில்லை! இன்னும் என்ன என்ன துறையில் இறங்கினால் பணம் சேரும் என்று

எண்ணுபவனுக்கு விவாகத்தைப்பற்றி நினைக்க நேரம் இல்லை போலும்! நண்பர்களில் யாராவது நெருங்கிக் கேட்டால், ஏதாவது அலட்சியமாய்ப் பதிலளிப்பான்.—'நீங்கள் கல்யாணம் பண்ணி என்ன சாதித்துவிட்டீர்கள்?' என்ற தோரணையில். தாயார் கேட்கவே பயப்பட்டாள். வயது காலத்தில், மகன் மனைவியுடன் இருப்பதைப் பார்க்க ஆசைதான். அந்த ஆசையை அநுபவிக்க முயலவே அவளுக்குப் பயமாக இருந்தது.

ஒரு நாள்; வெள்ளிக்கிழமை. ஷண்முகம் கடைக்குப் போயாகி விட்டது. தாயார் படுக்கையில் கிடந்தாள். தங்கை, சமையல் அறையில் காரியமாக இருந்தாள். ஏதோ சில கணக்குகளைப் பரிசீலனை செய்துவிட்டு, அதே நினைவாக மாடியிலிருந்து இறங்கிய சாமிநாதன், ஹாலில் கண்ணாடியின் முன் நின்று, முழங்கால் வரையிலும் பாய் பாயாகத் தொங்கிய கருமையான கேசத்தைக் கோதிக் கொண்டிருந்த அபிராமியைக் கண்டான். கண்டதும், என்றும் இல்லாதபடி ஒரு கணம் அசந்து நின்றுவிட்டான். யௌவனத்தின் சோபையும், உடற் கட்டின் பொலிவும் முதல் முதலாகப் பல நினைவுகளுக்கு இடையிலும் அவன் உள்ளத்தில் பாய்ந்தன. அவளை விழுங்கிவிடுவதுபோல் ஒரு கணம் பார்த்துவிட்டு, தன் காரியத்தைக் கவனிக்கச் சென்றான்.

அபிராமியை அவன் கண்கள்தான் இத்தனை காலமாகப் பார்த்திருந்தன. இன்றைக்குத்தான் உள்ளம் பார்த்தது! பன்னிரண்டு வயதில் இருந்த உடலைப் பதினெட்டு வயதில் தீர்க்கமாகப் பார்த்தபோதுதான், பெண்மையின் கவர்ச்சியும் யௌவனத்தின் வசீகரமும் அவன் உள்ளத்தைக் கரைத்தன.

அன்று சாயங்காலம் அவனுக்குக் கடையில் இருப்புக் கொள்ளவில்லை. ஏற்கனவே தலைவலி என்ற காரணம் சொல்லி, ஷண்முகம் வீட்டிற்குத் திரும்பி யிருந்ததால், ஆள்காரனிடம் கடையை ஒப்படைத்துவிட்டு, சாமிநாதன் திரும்பினான்.

அவன் ஹாலுக்குள் காலை வைத்தபோது, கால்கள் தாமாகவே ஒரு விநாடி பின்வாங்கின. கண்ணாடியின் முன் சிங்காரித்துக்கொண்டு அபிராமி நின்றுகொண் டிருந் தாள். பக்கத்தில் ஷண்முகம், "இந்தா அபிராமி, உனக் காக முல்லைப்பூ வாங்கி வந்தேன்!" என்று சொல்லிக் கொண்டே, பூவை அவள் கையில் அளித்தான். கூடவே, "உனக்கும் முல்லைக்குந்தான் என்ன பொருத்தம்!" என்ற வார்த்தைகள் அவனிடமிருந்து எழுந்தன.

"கோவிலுக்கு நாழியாகிறது. மாமா வரத்துக்கு முன்னாலே திரும்பிவிடலாம்.........தலைவலின்னு சொல்லி விட்டு ஓடி வந்திருக்கேன்!" என்றான் ஷண்முகம் தொடர்ந்து.

"இப்பத்தான் தெரியறது...உனக்கு ஏன் வெள்ளிக் கிழமைகளில் தலைவலி வரதுன்னு!..." என்று கதவின் அருகினின்றும் எழுந்த குரல் இருவரையும் நிலைகலங்கச் செய்தது. ஷண்முகம் தலைகுனிந்தான்; அபிராமியின் கையிலிருந்த முல்லை நடுங்கியது.

"போடா, மடையன் மாதிரி நிற்காதே!......கடையில் யாரும் இல்லை..." என்று இரைந்தான் சாமிநாதன்.

அவன் போன பிறகு, "புறப்பட்டதுதான் புறப் பட்டாய்......கோவிலுக்கு நான் அழைத்துப்போகிறேன் வா..." என்று சாமிநாதன் அபிராமியிடம் கூறினான்.

அபிராமியினால் தன் காதுகளையே நம்ப முடியவில்லை.

"என்ன, ஊமைக் கோட்டானாக நிற்கிறாய்?" என்று சொல்லி அவளைத் துரிதப்படுத்தினான். வேண்டா வெறுப் பாக அவள் அன்று அவனுடன் கோவிலுக்குச் சென்றாள்.

* * *

அடுத்த வெள்ளிக்கிழமை முகூர்த்தம் நிச்சயிக்கப் பட்டது. ஷண்முகத்திற்குப் பேரிடி! தாயாருக்கு, 'பிள்ளை இந்த மட்டிலுமாவது வழிக்கு வந்தானே!' என்ற சமா தானம். தங்கைக்காரிக்கு உள்ளூரச் சந்தோஷம்;

அண்ணுவுக்கோ நிறையப் பணம் இருக்கு. அபிராமி ஒரு விதத்தில் கொடுத்து வைத்தவள்! வயதுதான் கொஞ்சம் அதிகமாயிருக்கே தவிர, மற்றப்படி ஷண்முகத்தை விட அவன் எல்லா விதத்திலும் உயர்ந்தவன்' என்று நினைத்தாள். சாமிநாதனுக்குப் புது வாழ்வு உதயமாகப் போகிறது என்ற ஆனந்தம். தன் தம்பியின் பெரும் ஏமாற்றத்தைப்பற்றி அவன் எண்ணியதாகவே தெரியவில்லை. என்றும் இல்லாதபடி பணத்தை அபிராமியின் மீது அள்ளி வீசினான். வீட்டில் நகைகளும் புடைவைகளும் நிறைந்தன.

ஆனால், அபிராமி! அவளுடைய உள்ளமே உடைந்து விட்டது. கடைசியில் பூகம்பம் வருவதுபோலவா, இப்படி ஏமாற்றம் வரவேண்டும்! ஷண்முகத்தை அவள் இழந்துவிட்டது பெரிய நஷ்டமாகப் பட்டது. இது வரை சாமிநாதனைக் கரித்துக் கொட்டி, 'இழவே!' என்று சோறு போடும் மாமா என்ற ஸ்தானத்தில்தான் அவனை வைத்திருந்தாள். திடீரென்று அவனைக் கணவன் ஸ்தானத்தில் வைத்துப் பார்க்க அவளால் முடியவில்லை.

கல்யாணத்துக்கு இரண்டு நாள் இருக்கும். இரவு பன்னிரண்டு மணி சுமாருக்குத் தூக்கம் பிடிக்காமல் சாமிநாதன் தாழ்வாரத்தில் நின்றுகொண் டிருந்தான். திடீரென்று ஷண்முகத்தின் நினைவு உண்டாயிற்று.

இரண்டு நாட்களாகவே அவனுடைய போக்கு, புரியாத போக்காக இருந்தது. கல்யாண விஷயம் வெளியான இரண்டு நாட்கள்வரையில், பேயறைந்தவன்போல் இருந்த ஷண்முகம், கடந்த இரண்டு நாட்களாக உறுதி குலையாதவனைப்போல் மாறி விட்டதன் மர்மம் அவனுக்குப் புரிந்தும் புரியாததுமாக இருந்தது. தனக்கு எதிராக ஷண்முகமும் அபிராமியும் ஏதாவது சதி செய்கிறார்களோ என்ற சந்தேகமும் பயமும் தோன்றின.

* * *

அவன் பயம் வீண் போகவில்லை. அதி காலையில் ஐந்து மணிக்கு அவன் அபிராமியைத் தேடியபோது அவள் அங்கே இல்லை; ஷண்முகத்தையும் காணவில்லை!

உடனேயே ரயிலின் ஞாபகந்தான் வந்தது சாமிநாதனுக்கு. மேட்டுப்பாளையத்திலிருந்து கோயமுத்தூர்ப் பக்கமும், ஊட்டிப் பக்கமும் ரயிலோ, பஸ்ஸோ ஐந்து மணிக்கு மேல்தான் புறப்படும். உடனே ஓர் ஆளை ஸ்டேஷனுக்கு அனுப்பி, தானே பஸ் ஸ்டாண்டிற்கு விரைந்தான் அவன்.

எட்டு மணிக்கெல்லாம், இருவரும் சாமிநாதனுடைய காவலில் வீட்டுக்குத் திரும்பிவிட்டார்கள்! கோயமுத்தூருக்கு இரண்டு பஸ் டிக்கட்டு வாங்கினதுதான் மிச்சம்!

"என்னடா, என்னுடைய பணத்தை எடுத்து என்னுடைய சொத்தையே திருடப் பார்க்கிறாயோ!" என்று பொருமினான் சாமிநாதன்.

"நான் கிணற்றில் விழுந்துவிடுவேன்!" என்று வீரிட்டு அழுதாள் அபிராமி.

"என் கையிலே இருந்து தாலியை வாங்கிக்கிட்டு வேணும்னு விழு!" என்று சொல்லிவிட்டுச் சாமிநாதன் ஷண்முகத்தைக் கடைக்கு இழுத்துச் சென்று, அன்றே வியாபார முகாந்தரமாக அவனைக் குன்னூருக்கு அனுப்பி விட்டான்.

* * *

கல்யாணம் நன்றாக நடந்தது. ஊரிலுள்ள பிரமுகர்கள் எல்லாரும் விஜயம் செய்தார்கள்.

வியாபாரிகளிடமிருந்தும் நண்பர்களிட மிருந்தும் பட்டும் மணியுமாக அபிராமிக்குப் பரிசுகள் குவிந்தன.

விவாகமான சில மாதங்கள் வரையில் அபிராமிக்கு உலகமே பயங்கரமாகத்தான் இருந்தது. எவன்மீது

உயிரையே வைத்திருந்தாளோ அவன் கிடைக்காமல், எவனை ஆரம்பம் முதல் பயத்தால் வெறுத்திருந்தாளோ அவன் கணவனாக வாய்க்கவே, அவளால் தனது வாழ்வை நிம்மதியாக நடத்த முடியவில்லை.

ஆனால், நாள் செல்லச் செல்லச் சாமிநாதனிடம் மாறுதல் உண்டாக ஆரம்பித்தது. வீட்டில் அவன் இரைவது அபூர்வம். எதையும் நிதானமாகப் பேசினான். சதா வேலைக்காரர்கள்மீது எரிந்துவிழுவதுகூட நின்று விட்டது. அபிராமியிடம் பேசும்போது உபாத்தியாயரிடம் பேசும் மாணவனைப்போல்தான். ஒரு காலத்தில் தன்னைத் துச்சமாகத் தள்ளும் மாமா, ஏன் இப்போது இப்படிப் பேசுகிறார் என்று அவளுக்கே புலப்படவில்லை. அவனுடைய வசவை அவளால் ஏற்க முடிந்தது. அவனுடைய கருணையையும் அன்பு மொழிகளையுந்தான் ஏற்கத் துணிவு வரவில்லை.

ஒரு நாள் அவன் சொன்னான்: "அபிராமி, உன் கழுத்தில் தாலி ஏறிய நிமிஷத்திலிருந்து நமது மாமன்—மருமகள் உறவு அற்றுவிட்டது; எனக்கு மருமாள் அபிராமி இறந்து போய், நான் அவளை முற்றும் மறந்தாகிவிட்டது......அவள் இப்போது மனைவி அபிராமியாகி விட்டாள்!" என்றான்.

"ஆனால், உங்கள் மாமா உறவுதானே எனக்குச் சதா நினைவுக்கு வருகிறது!......"

"அதற்குக் காரணம் நான் உன்னை நடத்தின விதந்தான். ஷண்முகத்தைப்போலவே நானும் அன்புடன் நடந்துகொண்டிருந்தால், உன் மனமே வேறு விதமாக இருந்திருக்கும் அல்லவா? இனிமேல் உனக்கு என்னிடம் சகல விதமான உரிமைகளும் உண்டு. வீட்டில் நான் எப்படி குடும்பத் தலைவனோ, அப்படி நீ குடும்பத் தலைவி......"

* * *

அவன் சொன்னதோடு நிற்கவில்லை. செய்கையிலும் காட்டிவிட்டான். குடும்பப் பொறுப்பு முழுதும் அவள் கைக்கு மாறியது. எதுவும் அவள், 'சரி' என்றால்தான் நடக்கும். சாமிநாதனே, தன் விஷயங்களைப்பற்றி அவளிடம் ஆலோசனை கேட்பான். தான் ஒரு புதிய பதவிக்கு வந்தாற்போன்ற உணர்ச்சி, அபிராமியிடம் உண்டாயிற்று. அவளுடைய உள்ளத்தின் முன் அவனைப் பற்றியிருந்த எண்ணத் திரை, கொஞ்சம் கொஞ்சமாக விலகியபோது, அன்பும் ஆசையும் கொண்ட கணவனின் உருவந்தான் தெரிந்தது,

இதற்கிடையில், கல்யாணமான உடனேயே சாமிநாதன், குன்னூரில் ஒரு கடையை நிறுவிவிட்டு அதை ஷண்முகத்திடம் ஒப்படைத்துவிட்டான். பழைய நினைவைக் கிளற அவன் இல்லாதது, புருஷன் - மனைவி ஐக்கியத்தைத் துரிதப்படுத்தியது. அபிராமியின் மனம் எதிர்காலத்தைப்பற்றித்தான் ஓடியது. பிறைச் சந்திரன் வளர்வதுபோல் அவள் மனம், பயம் என்ற இருட்டை உதறி, கணவன் அன்பு என்ற ஒளியைப் பெறலாயிற்று.

அதிகம் சொல்வானேன்? நாளடைவில் அபிராமி, புது மனுஷி. கல்யாணமான இரண்டாம் வருஷம் கையில் ஒரு புத்திரன். நான்காம் வருஷம் அவளையே உரித்து வைத்தாற்போன்ற பெண். அணைத்துக்கொள்ள இரண்டு ரத்தினங்கள். அன்பினால் அரவணைக்கும் கணவன். வீடு, நிலம், கடை, வண்டி, ஆட்காரர்கள்—இன்னும் என்ன வேண்டும் அவளுக்கு?

இப்போதெல்லாம் சாமிநாதன் வெளியூர் போகப் புறப்படுகையில், "ராவோடு ராவா வந்து சேர்ந்திடுங்க. கண்ட இடத்தில் சோறும் தூக்கமும் உடம்புக்கு ஆகாது!" என்கிறாள். எப்படியிருக்கிறது கதை, பார்த்தீர்களா?

* * *

கதையை முடித்துவிட்டு, லேசாக அரும்பிய புன்னகையோடு எல்லோரையும் ஒரு முறை பார்த்தார்.

"ஷண்முகத்தின் கதி!" என்றார் கதைக்குத் தூண்டுகோலாக இருந்தவர்.

"அதுதான் சொன்னேனே, சாமிநாதன் குன்னூரில் ஒரு கடை வைத்துக் கொடுத்தான். அதற்குப் பிறகு கல்யாணமும் ஆயிற்று, நல்ல இடத்தில்."

கோயமுத்தூர் ஸ்டேஷன் வந்தது.

பிளாட்பாரத்தில் ஒருவர் மீசைக்காரரைப் பார்த்ததும், "இன்னிக்குத்தான் திரும்புகிறாயா?......நேற்று ஊருக்குப் போயிருந்தேன், அம்மாவைப் பார்க்கலாம்னு ......" என்றார்.

"ஈரோடு வரை போகவேண்டியிருந்தது, சரக்கு எடுக்க..."

"வீட்டிலே சொன்னாங்க...தம்பியும் கூட வந்திருந்தானா?...எனக்குத் தெரியாதே?..."

"குன்னூர்க் கடைக்கும் சரக்கு வேண்டாமா...? அதுதான் நானும் அண்ணாகூடப் போயிருந்தேன்..." என்றான் மீசைக்காரர் அருகில் இது வரையில் உட்கார்ந்திருந்தவன்.

"உனக்குப் பிள்ளை பிறந்திருக்கிறதுன்னு நீ ஏன் எழுதவில்லை?"

"வீட்டுககுப் பெரியவர் எழுதியிருப்பார்னு நினைச்சேன்?" என்றான் அவன்.

இதற்குள் என் சாமான்களெல்லாம் இறக்கப் படவே, முகத்தில் மின்னிட்ட வியப்பையும் அடக்கிக் கொண்டு என் வழி நோக்கி நடந்தேன்.

# கண் திறந்தது

'**சே,** என்ன ஜன்மம்! மனசு குச்சியாக ஒடிந்தாலும் நாக்கின் நப்பாசை சாகவில்லை!'—நினைத்த போதே மாவாக இறங்கும் அல்வா விஷமாயிற்று. ஆனாலும் என்ன? விரல்கள் தாமாகவே தட்டின் நடுவே நெருடின.

"தேங்குழல் கொண்டு வரட்டுமாடா, குழந்தை?" என்று அம்மாவின் குரல் கேட்டபோது ஒலியின் திசைக்குத் திரும்பினான். அம்மா இப்பொழுது எப்படி இருக்கிறாள்? பார்த்து எத்தனை நாளாயிற்று! இளைத்திருப்பாளா? இல்லை, சதை போட்டிருக்குமோ? சொல்லித் தெரிந்தால்தான் உண்டு. உம், இனி எப்பொழுது திறக்குமோ, என்னவோ?

சிந்தனையைத் தாண்டிக்கொண்டு, "இன்னும் இதே வேணும், அம்மா!" என்றான்.

"ஆகட்டுமடா குழந்தை! இதோ..."

'நான் இன்னுமா இவளுக்குக் குழந்தை?' என்று நினைத்தபோதே 'அவளுள்' ஜனித்துவிட்ட அவன் குழந்தை மனக்கண் முன் நின்றது. மேலும் மேலும் பந்தல் பந்தலாக மனம் விரிவதற்குள், அம்மா வந்து அல்வாவை வைத்துவிட்டாள்.

'அம்மாவுக்கு ஐம்பது வயசில் இப்படி எரியவேண்டாம். எல்லாருக்கும், தண்ணீர் வடிகிற மாதிரி கண்ணீர்

வடிந்து வற்றிவிடும். ஆனால் இவளுக்கு? இவள் அம்மா அல்லவா?'

*　　　*　　　*

"ராதா......?"

நீட்டொலியிலேயே குரலைப் புரிந்துகொண்டவன், "என்னடா, சாம்புவா? என்ன சமாசாரம்? **இனிமேல்** நான் எதற்கடா உங்களுக்கு?" என்றான்.

"என்ன ராதா, அப்படி சொல்லிவிட்டாய்?"—கால் மேல் கால் போட்டு, ஒரு கையால் ஊஞ்சல் சங்கிலியைப் பிடித்து உட்கார்ந்திருந்த ராதாவைப் பார்த்துக்கொண்டே சாம்பு கேட்டான். அவன் முகத்தில் ஈயப் பற்றுப்போல அடைத்துக் கட்டியிருந்த கட்டைப் பார்க்கத்தான் சாம்புவுக்குச் சகிக்கவில்லை.

"ஆமாம், பின்னே என்ன? திருதராஷ்டிர மகாராஜா வாலே இனிமேல் சொக்கட்டான் ஆட முடியாது!"

"என்னடா, வெறுப்புக் கொதிக்கிறது, வார்த்தையிலே?"

"நான் சீட்டு ஆடினது போதாதாடா?"

"ராதா, இன்றைக்கு நீ சரியாக இல்லை. நான் வருகிறேன்."

"உம்...உம்...போ......போ.........ஒரு கை குறைந்தாச்சு."

*　　　*　　　*

சீட்டாட்டம்!

நினைத்தபோதே, ஊஞ்சல் சங்கிலி அறுந்து விழுந்தாற்போல இருந்தது. வீம்பின் எதிரொலியாகச் சிரித்த விதியின் ஒலி, ஒளியை என்ன பாடுபடுத்துகிறது!

"மூன்று நாளாக விடிய விடிய ஆடுகிறாய். உடம்பு என்னத்துக்கடா ஆகும், குழந்தை?" — அம்மா கேட்டாள்.

"உடம்பு ஒன்றும் ஆகாது. இன்றைக்குத்தான் கடைசி நாள்." சீட்டுக்கட்டுடன் கிளம்பிவிட்டான். மடியில் அரைப்படி சில்லறை.

நான்காம் இரவு சிவராத்திரி; ஆட்டம் ஆடியாகி விட்டது. பிறகு யாரெல்லாம் ஆடிவிட்டார்கள்? வீடே ஆடியது. ஊர் ஆடியது. மண்டையைப் பிளந்து, நடுவே ஏதோ வார்ப்பது மாதிரி தகிப்பு. கண்களைப் பாறை போல் மூடிய பிரமை!

நாலு நாள் ஆட்டம்; நாற்பது நாள் ஆஸ்பத்திரி வாசம்; மண்டையில் நரம்புக் கோளாறு.

* * *

**டா**க்டர் சொல்லிவிட்டார், ஆபரேஷனுக்குப் பிறகு: "ராதா, ஆறு மாதத்திற்குப் பிறகுதான் கட்டைத் திறக்கலாம். இது புது மாதிரி வியாதி. ஒன்றும் சொல்வதற்கு இல்லை. உங்கள் அதிருஷ்டந்தான் இனிமேல்" என்று.

"டாக்டர், இனிமேல்...?" ராதா இறைஞ்சினான்.

"நான் ஒன்றும் சொல்வதற்கு இல்லை. ஆற்றிலே ஒரு கால், சேற்றிலே ஒரு கால். தைரியமாக இருந்தால் தண்ணீரிலே விழுந்து நீந்திக்கூடச் சேர்ந்துவிடலாம். ஆறு மாதம் தவணை. அதற்கு முன்னாலே மட்டும், ஒளிக் கதிர்கூடப் படக்கூடாது."

அம்மா, இதுவரை பிரதிஷ்டை செய்யாத தெய்வங்களைக்கூட வேண்டினாள்.

சரஸ்வதி கேவினாள்.

ஓமகுண்டத்து நெய்போல ராதா எரிய ஆரம்பித்து விட்டான். அவனுக்கு என்றைக்குமே யாரிடமும் நம்பிக்கை இல்லை. அதுவும் டாக்டரிடம் கேட்கவே வேண்டாம்.

* * *

**ஊ**ஞ்சலை விட்டு எழுந்தான். சாம்புவின் பரிதாபத்தை நினைத்தபோதே சிரிப்பு வந்தது. மனிதர்கள்

வார்த்தைகளினால் ஆதரவும் பரிவும் காட்ட முயல்கிறார்கள். ஊராரின் பரிதாபம் வெள்ளமாகத்தான் வந்தது: "...ராஜா மாதிரி பிள்ளை. தங்கக்கம்பி குணத்திலே! இருபது வேலிச் சொத்து! கிளியாட்டமா இருக்கிற பெண் என்ன பாவம் பண்ணியதோ!' வார்த்தைகளுக்கு அர்த்தம் இருக்கலாம். ஆனால் என்ன பயன்? நுனி நாக்குகளில் சரளமாக ஓடிவரும் ஒலிச் சிதர்களை அவனால் தாள முடியவில்லை.

"என்ன, ஏதாவது வேணுமா?" கேட்டுக்கொண்டே சரஸ்வதி வந்தாள்.

"உன்னாலே என்ன தர முடியப்போகிறது?"

"கேட்டால்தானே சொல்லலாம்?"

"உன்னாலேயும் முடியாது! உன்னைப் படைத்தவனாலேயும் முடியாது!" என்று சொல்லிவிட்டு, ராதா 'ஹஹ்ஹா!' என்று சிரித்தான்.

"நானானால் அழுகிறேன். நீங்கள்..."

"சிரிக்கிறேன்!"

"தெய்வம் என்னை இப்படியா சோதிக்கவேணும்?"

"என்னை அல்லவா அது சோதிக்கிறது?"

"உங்களை மட்டுமா?" — சரஸ்வதி பெருமூச் செறிந்தாள்.

"எல்லாம் கொஞ்ச நாள்!"

"அப்புறம்?"

கேள்வியின் ஆர்வத்திலேயே அவன் அவளை உணர்ந்துகொண்டான். ஆனால் உள்ளத்து வெறுப்பு அலை ஓயவில்லையே!

"தீர்ந்துவிடும்."

"டாக்டர் சொல்லி யிருக்கிறார், இல்லையா?"

"டாக்டர் சொல்லவேணுமா?"

"பின்னே?"–சரஸ்வதியைப் பொறுமை சோதித்தது.

"உன் துக்கம் தீர இன்னும் இரண்டு மாதந்தானே?"

"உங்களுக்கு இன்னுமா பரிகாசம்?"

"முன்னே பிடித்திருந்தது. இப்போது தானாகவே கிளம்புகிறது. ஆனால் ஒன்று மட்டும் நிறைவேறியாகி விட்டது எனக்கு!"

"என்ன?"

"நான் செத்தால் நீ எப்படி அழுவாய் என்று எனக்குத் தோன்றும். கற்பனையையே அடித்துக் கொன்று விட்டாய். நான் சாகாமலே சாகிறதை நீ பார்த்து ரசிக்கிறதை...!"

"உங்கள் வெறுப்புக்கு எல்லையே இல்லை!" அவள் போய்விட்டாள்.

"ஏண்டா ராதா, தலைச்சன்காரியைப் பிறந்த வீட்டுக்கும் அனுப்பாமல், பிடிவாதம் பிடித்து இங்கேயே வைத்துக்கொண்டு இப்படிப் பொல்லாததை யெல்லாம் சொல்லி அழவிடுகிறாயே?"

அம்மாவின் பெருமூச்சுத்தான் பேச்சுக்குப் பிறகும் அறையினுள் வட்டமிட்டது.

"அம்மா எதற்கெல்லாமோ கொடுத்து வைத்தாள். ஆனால் இதைத்தான் அவளால் சகிக்க முடியாது. தெய்வம் படைத்த மனுஷ தேகமே பூக்குத்தி மாதிரி போகையில், டாக்டரின் பேச்சை எப்படி நம்பி, ஒருத்தி இருப்பாள்? இருக்க முடியும்? எனக்கே நம்பிக்கை இல்லையே! சரஸ்வதியே அழுகிறபோது அம்மாவைப்பற்றிக் கேட்பானேன்?'

*      *      *

'சரஸ்வதி', 'சரஸ்வதி!' சதா சரஸ்வதிதான் அவனுக்கு ஸ்மரணை. இன்னும் இரண்டு மாதங்களில் அவள் 'அம்மா'வாகிவிடுவாள். அதற்குப் பிறகும் இருக்கின்றனவே இரண்டு மாதங்கள்; அப்புறமும் கட்டை அவிழ்ப்பதும் அவிழ்க்காததும் ஒன்று என்று ஆகிவிட்டால்!' இப்போதைய இருட்டு நித்திய இருட்டுத்தான்; ஒருவேளை, பழகத்தான் ஆறு மாதம் அவகாசம் கொடுத்திருக்கிறாரோ, டாக்டர்? உம். ஒரு தடவையாவது நான் என் கண்ணாலே என் குழந்தையைப் பார்க்காமல் போவதா?'

நினைத்தபோதே கட்டை அவிழ்க்கக் கை துடிதுடித்தது.

மாலை நேரம் ஆகிவிட்டது. மலைச்சாரல் மழைபோல மனத்திற்கு ஓய்வில்லாத சிந்தனை. அந்தகாரமே- ஆதி அந்தமில்லாத, விடிவற்ற நிலைக்கும் அப்பாற்போய்- புது ஒளியைத் தாங்குவதாக அவனுக்குத் தோன்றிவிட்டது. சிந்தனைக்கே இடமில்லாத வாழ்க்கையில், 'இனிமேல் சிந்தனைதான் வாழ்க்கை' என்ற கதி ஏற்பட்டுவிட்டால் என்ன செய்வான்?

"தலையை வாரி விடட்டுமா?"

"உம். வாரு."

சரஸ்வதி சீப்பும் கையுமாக வந்துவிட்டாள்.

"கண்ணாடி கொண்டுவந் திருக்கிறாயா?"

"அட தெய்வமே...!"

அவன் சிரித்தான்.

பிறகு, "சரசு, இப்படி இருக்கிறதும் தேவலைதான், இல்லையா?"

"தெய்வமே, வேறே எப்படி இருந்தாலும் சகித்துக் கொள்ளலாமே? டாக்டரையும் நம்ப முடியாமல், தெய்

வத்தையும் நம்ப முடியாமல் தவிக்கிற தவிப்பு என்ன தவிப்பு!'' சரஸ்வதியின் சிறு உதடுகள் துடித்தன.

''இரண்டு பேருமே, வாழ ஆசைப்படுகிறவர்களே ஒழித்துக்கட்ட ஒரு காலால் நிற்பவர்கள், சரசு; அது இருக்கட்டும், சரசு, வேறே எப்படி இருந்தால் தேவலே?''

''..........''

''மண்டைக்கு வந்ததில், கோடியகத்துச் சுப்பு மாதிரி வருகிறவர் போகிறவர் மண்டையிலே மலைப்பிஞ்சையா வது விட்டெறிந்து கொண்டிருக்கும்படியாக ஆகி இருக்கக்கூடாதோ? ஓர் ஊரிலே 'ரெண்டு' ஆகிவிடும்.''

''உங்கள் ஹாஸ்யமே எனக்குப் பிடிக்கவில்லை.'' துக்கம் தூக்கிவிட்ட ஆத்திரத்தில் கைச்சிப்பின் பல்கூடத் தலையை அழுத்திவிட்டது.

''நீ வேறு மண்டையைப் பிளக்கிருயா? பிள!''

சரஸ்வதி கசிந்தாள்.

* * *

**ரா**தாவுக்குக் கூடமும் ரேழியும் கொல்லைப்புறமும் மனப்பாடம் ஆவிட்டன, இரண்டு மாதங்களுக்குள். கண்களின் முன்னல் ஒரே திரை. இருளுக்கு இருள் திரை. ஆனல் மனக்கண்ணுக்கு முன்னல் மட்டும் நீண்ட நீல வான ஒளி தோன்றியது. கண்கூடாக அதை அவன் முன் போல் காண்பானு? இல்லை, என்றைக்குமே இந்த நீல வானம் அவனுள் மட்டுந்தானு?

அவன் டாக்டரை நம்பவில்லைதான்; தெய்வத்தையும் நம்பவில்லைதான். ஆனல் தன்னம்பிக்கை என்றைக்குமே கைவிட்டதில்லை. வாழ்க்கையில் இரண்டொரு தோல்விகளில்கூட அதை அவன் இழந்ததில்லை. ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் அவன் இந்த உலகத்தை மீண்டும் பார்த்துச் சிரிப்பான் என்ற அலட்சிய நம்பிக்கை இருந்து

தான் வந்தது. ஆனாலுந்தான் என்ன? அவனுடைய நம்பிக்கைகூட, சந்தியா காலத்து வானம் வாடுவதுபோல வாடுகையில், உலகத்தின்மீதே வெறுப்புத் தோன்றிவிடும்.

* * *

நாட்கள் சென்றன.

சரஸ்வதியை அவளுடைய நிலையில் பார்க்கக் கண்கள் துடித்தன. மடி நிறையத் தாய்மை பொங்குவதைப் பார்க்க அவன் ஏன் கொடுத்து வைக்கவில்லை? பிறக்கப் போகும் குழந்தையையும் அவன் என்ன, உடனேயே பார்க்கப் போகிறானா? அவனுடைய தன்னம்பிக்கை வெற்றி கண்டால், குழந்தையையாவது பார்க்கலாம். இல்லாவிட்டால் அவனுடைய பிள்ளையை எப்படிப் புரிந்துகொள்ளுவான்? கூட்டத்தில் எந்தப் பிள்ளையைத் தன் பிள்ளை என்று சொல்லுவது? சிந்தனை படரப் படர, ஆறுமாத காலம் அன்றையோடு முடிந்திருக்கக் கூடாதா என்று ஏங்கினான். இன்னும் இருக்கிறதே! சீட்டர்ட்டத்தில் மூன்று மாதம் மூன்று நாளாகப் பறக்கிறது! இப்போது இந்த மூன்று மாதம் எப்படி? நினைக்கக்கூட முடியவில்லை.

குழந்தை பிறந்தால் கைகளால் உணரலாம்; மூக்கையும் நாக்கையும் தொட்டுப் பார்க்கலாம். வேறு என்ன செய்ய முடியும்? அதன் முகத்தைப் பார்த்து ஆறுதல் அடைய முடியுமா? மற்றவர்கள் விவரிப்பதில் அவனுக்கு என்ன அக்கறை இருக்கப்போகிறது?

* * *

ஒரு நாள் சரஸ்வதியைக் கூப்பிட்டபோது அவள் வரவில்லை.

"சரஸ்வதி! சரஸ்வதி!"

"அவள் இங்கே இல்லையடா, குழந்தை" என்று அம்மா பதிலளித்தாள்.

ஆத்திரத்தில், "எங்கே?" என்று இரைந்தான்.

"பிறந்தகத்துக்குப் போயிருக்கிருள்."

"ஏன் அனுப்பினுய்?"

"அடுத்த ஊர்தானேடா? அவள் அப்பா ரகசியமாகக் காரிலே கூட்டிக்கொண்டு போனுர், நீ எழுந்திருப்பதற்கு முன்னுலேயே."

"எனக்குத்தான் கண்ணை மூடியிருக்கிறது. உனக்குக் கூடவா...?"

"நான் ஒருத்தி வயசு காலத்திலே என்னடா செய் வேன்? உலக ரீதி வேறே இல்லையா?"

"உன் உலகத்தையும் ரீதியையும் குப்பையில் கொட்டு."

அவள் இருந்தாலும் அவனுக்கு அவளைப் பார்க்க முடியாது. இருந்தும் ஏன் இப்படி இரைகிருன்? அவ னுடைய தாய் புரிந்தும் புரியாத நிலையில் இருந்தாள். ஆனுல் அவனுக்கு இப்போது, அவனுடைய நிழலே போய் விட்டது மாதிரி இருந்தது. அந்த எரிச்சலில் அவன் வார்த்தைகளைக் கொட்டினுன்.

* * *

ஒரு வெள்ளிக்கிழமை.

ஐந்தரை மணிக்கு அவன் திண்ணையில் உட்கார்ந் திருந்தான். பத்து நாட்களாகச் செய்திக்காகக் காத்துக் காத்து ஏமாந்தும் அலுப்படையவில்லை. அன்று அவ னுடைய தன்னம்பிக்கைக்குப் பரிசுபோலச் செய்தி வந்து விட்டது.

"அத்திம்பேர், பிள்ளை; இன்றைக்குக் காலையில் மூன்று மணிக்கு......" மைத்துனனின் குரலில் ஒரே அவசரம்.

எப்படித்தான் ராதா உள்ளே ஓடினுனே, தெரிய வில்லை. கால் கட்டைவிரல் வாசற்படியில் தடுக்கினதைக் கூட மறந்தான்.

''அம்மா...'' ஒரே வார்த்தைதான் வெளியே வந்தது. அனுல் அதில்தான் எத்தனை அர்த்தம்!

மைத்துனன் மீண்டும் செய்தியைச் சொன்னுன். ராதாவுக்கு உலகத்தின் மீதுள்ள வெறுப்பு ஒரு நொடி யில் பறந்துவிட்டது.

''அம்மா, அவள் இனிமேல் எப்போது இங்கே வர லாம்?''

''அறுபது நாள் ஆகவேணும்.'' அம்மாவுக்கு எதை ரசிப்பது என்று தெரியவில்லை. பேரனின் ஜனனமும் பிள்ளையின் துடிப்பும் மனப் புண்ணைக்கூட மறக்கச் செய்தன.

அன்றே அவள் போய் வந்தாள்.

''உன்னை அப்படியே உரித்து வைத்திருக்கிறது.''

''அம்மா!''

''என்னடா குழந்தை?''

''கண் திறந்திருக்கிறதோ இல்லையோ?''

ஒரு கணம் தாய் கலங்கினுள். இந்தக் கேள்வியை அவள் எதிர்பார்க்கவே இல்லை.

''என்னடா, இப்படிக் கேட்கிருய்?''

''இல்லை அம்மா; கேட்டேன்.''

''திறந்திருக்கிறதடா, ராதா!''

''விழிகளை நன்ருகப் பார்த்தாயா...?''

"கருகருவென்று இருக்கிறதடா."

குழந்தையைப் பார்த்தவர்களெல்லாம், அப்பனேடு ஒப்பிட்டுப் பேசினர்கள். ஆனல் அவன்? பார்க்கவில்லை; பேசவில்லை.

'இன்னும் அறுபது.....ஐம்பத்தொன்பது......ஐம்பத்தெட்டு......' என்று நாட்களை ஒவ்வொன்ருக எண்ணினன். மனம் சலித்துவிட்டது எண்ணி எண்ணி. நாள் செல்லச் செல்ல, மற்றவர்கள் குழந்தையைப்பற்றிப் பேசுவதைக்கூட அவனல் சகிக்க முடியவில்லை. 'நான் பார்த்து உணருவதற்குக்கூட ஒன்றும் பாக்கி வைக்கமாட்டார்கள்போல் இருக்கிறது!' என்று இரைய ஆரம்பித்தான். குழந்தையைப்பற்றிய பேச்சும் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்தது. அம்மா பேசுவதே இல்லை.

அவனுடைய மனத் திரையில், அவனுடைய கற்பனையில் திரட்டி எடுத்த குழந்தை, கையையும் காலையும் உதறிக்கொண்டு சிரித்தது; அழுதது; தூங்கியது. எலுமிச்சம் பழ நிறத்திலே, அதன் வதனத்திலே ஒளிக் கதிர் வீசியபோது, முகத்தைச் சுளித்துப் புருவத்தை நெறித்தது. மல்லிகைப் பந்தாக இருந்த உடம்பை அவன் மானசிகமாக நெருடியபோது, அவன் அந்த உணர்ச்சியிலேயே வசம் இழந்தான்.

நாட்கள் குறைந்தன. டாக்டர் சொன்னதெல்லாம் கோவில் மணிபோல அவன் காதுகளில் ரீங்காரம் செய்து கொண்டிருந்தது. என்ன ஆகும்? எப்படி முடியும்? ஒளியா, இருளா? பகலா, இரவா? எது?—மனத்தின் கேள்விகளே அவனுடைய தலையை அழுத்தின. கடலுக்கும் கரைக்குமாக, நிலையில்லாது அலையோடு அலையாகத் தவிக்கும் கட்டையாக அவன் தவித்தான்.

திடீரென்று கட்டை அவிழ்த்துவிடத் தோன்றும். தவணைக்கு முன்னல் திறந்தால் ஏதாவது நேரிடுமோ? பயத்தில் கைகள் நடுங்கும். மனத்தின் ஆர்வமும் ஆசையுமே அவனுக்கு உலை வைத்துவிட்டால்? தன்னம்பிக்கைகூட,

பெட்டிப் பாம்பாகப் படுத்துவிட்டது. யாரிடமும் பேசத் தோன்றவில்லே. 'பத்து...ஒன்பது...எட்டு...' இப்படி நாட்களைத்தான் எண்ண முடிந்தது.

மனத்தின் அகத்திற்குள், 'என் நம்பிக்கை வீண் போகாது' என்ற உறுதி மட்டும் ஏனோ இருந்துகொண்டு தான் வந்தது. அந்த உறுதியின்மேல் பிறந்த ஆசையை யும் உதற முடியவில்லே. கண்ணைத் திறந்ததும், சரஸ் வதியையும் குழந்தையையுந்தான் பார்ப்பது; அதிலும் குழந்தையைத்தான் முதலில்.

ராதா, ஜன்னி கண்டவனைப்போல, நிலைகொள்ளா மல் போய்விட்டான்.

மறுநாள்! சரஸ்வதி வருகிருள்! கண்கட்டை அவிழ்க் கப் போகிருர் டாக்டர். ஐந்து மணிக்கே வந்துவிடுவதாகச் சொல்லியிருக்கிருர். அவன் அறையில் கட்டை அவிழ்த் ததும், வான வெளியைப் பார்க்கவேண்டும். பிறகு, பிறகு, அவனுடைய ரவியை...!

* * *

இரவு முழுவதும் உறக்கமில்லை. சேவல் அழைப்ப தற்கு முன் அவன் சேவலை அழைத்துவிட்டான்.

டாக்டரும் 'கம்பவுண்'டரும் சொன்னபடி வந்துவிட் டார்கள். 'பேஸினி'ல் குளிர்ந்த ஜலமும் மருந்தும் கலந்து வைத்தாகிவிட்டது. வாழ்க்கையிலேயே பெரிய பரீட்சை. ராதாவுக்கு உடல் வேர்த்தது.

பதினைந்து நிமிஷத்தில் ஆறு மாதப் பாரம் நழுவிவிட் டது.

"ராதா, மெள்ளக் கண்ணைத் திறந்து பார். அவசரப் படாதே."

வலது புறமாகத் திரும்பி, நிதானமாகக் கண்களைத் திறந்தான். ஒரே பனிப் படலம். நெஞ்சில் ஏதோ அடைத் தாற்போன்ற உணர்ச்சி, விநாடிகள் பறக்கப் பறக்க,

லேசாகக் கனவுபோல ஏதோ தெரிந்தது. ஜன்னல் கம்பி களுக்கிடையில் இன்னும் விடியாத வான வெளி தெரிந் தது. வான வெளியின் மையத்திலே அவன் மனக்கண் முன் எழுந்த ரவியின் உருவம் தெரிந்தது.

"டாக்டர் நன்ருகத் தெரிகிறது. பாருங்கள்; அந்த நட்சத்திரத்தை."

"என் பெயரைக் காப்பாற்றிஞய், ராதா!" அதற்கு மேல் என்ன சொல்வது என்று டாக்டருக்குத் தெரிய வில்லை.

பார்த்த திசையை விட்டுத் திரும்பாமலே, "டாக்டர், நீங்கள் என் உயிரையே காப்பாற்றினீர்கள்" என்ருன். மறு கணம் திடீரென்று வண்டி ஓசை கேட்கவே, வாச லையே பார்க்கலாஞன்.

வண்டி வந்து நின்றது.

ரவியின் ஜனனத்தைத் துடித்துக்கொண்டு சொன்ன மைத்துனப் பையன் மெள்ள இறங்கிஞன். பிறகு சரஸ் வதியின் தகப்பஞரை ராதா எதிர்பார்த்தான்; ஏமாற்றம். தாயை எதிர்பார்த்தான்; ஏமாற்றம்.

சரஸ்வதி இறங்கிஞள், இரண்டு கைகளாலும் பிடி களைப் பிடித்துக்கொண்டு. 'கீழே இறங்கின பிறகுதான் என் ரவியை எடுக்கப் போகிருள்! என்ன கவனம் அவ ளுக்கு! எப்போதுமே சரஸ்வதி நிதானமுடையவள்!' என்று நினைத்தான்.

வண்டிக்குள் கைகளை நீட்டிஞள். 'இப்போது ரவி!'

சரஸ்வதியின் கையில் சிறு பெட்டியும், ஒரு துணிப் பையும். அவற்றுடன் அவள் வீட்டை நோக்கி வர லாஞள். ராதா தலையில் கை வைத்தான். அதே கணத் தில் வான வெளியைப் பார்த்தான். ரவி இன்னும் அங் கேயேதான் தவழ்ந்துகொண் டிருந்தான்.

"டாக்டர், கண்ணை இன்னும் கட்டிவிடுங்கள்!" என்று அவன் அலறிஞன்.

# தரித்திர லோகம்

பூந்தமல்லி ஹைரோடிலே பஸ்ஸுக்காகக் காத்துக் கொண்டிருந்த என் கவனம், கவலையற்று மரத்தடியிலே விளையாடிக்கொண் டிருந்த இரு சிறுவர்மீது சென்றது.

“சிங்கு, நான் செயிக்சுப் போட்டேன்!”

“அட போ சின்னு, நீ ஏச்சுப் போட்டே!”

“சரி, இன்னொருவாட்டி ஆடு, பார்க்கலாம்.”

“ஏச்சுக் கெலிக்கிற ஒங்கூட நான் வரல்லே, போ” சிங்கு, மரத்தின் மற்றொரு பக்கத்துக்கு போனான்.

சிரித்துக்கொண்டே சின்னன், “தம்பீ, கோவிச்சுக் கிட்டியே, இந்தா ஒன் துட்டை நீயே வைச்சுக்க.”

அவன் வாயை மூடுமுன், எதிர்த் திசையிலிருந்த ஒரு தூங்குமூஞ்சி மரத்தடியிலிருந்து வாட்ட சாட்டமான ஒரு ஸ்திரீ, அதட்டல் போட்டுக்கொண்டே விரைந்து வந்தாள்.

“அதோ, அம்மா ஓடியாரு” என்று இருவரும் ஒரே சமயத்தில் கத்தினர்.

“அட போக்கத்த கழுதைகளா, இங்கே நின்னுக் கிட்டுப் பஸ் போறது பாக்காம பாண்டியா ஆடறீங்க...! எடுங்கடா துட்டை! நாழியாவுது” என்று மிரட்டிய வண்ணம் வந்து நின்றாள் அவள்.

ஒரு காலத்தில் வெண்மையாக இருந்து, காலதேவனின் கைங்கரியத்தாலும், செம்மண் ஆண்டவரின் அருளினுலும் காவியேறி, தூசி படர்ந்திருந்த அவர்களுடைய நிஜார்ப் பைகளிலிருந்து பத்துப் பன்னிரண்டு காலணுக்கள்- அலட்சியமாகக் கட்டப்பட்டிருந்த- தாயின் கந்தல் புடைவையைப் போய்ச் சரணடைந்தன.

ஏதோதோ முணு முணுத்துக்கொண்டே சென்ற தாயாரை வழியனுப்பிவிட்டு, இருவரும் நான் இருந்த இடத்தை நோக்கி வந்தனர்.

என்னை ஏதோ கேட்கத்தான் வருகிருர்கள் என்று நான் நினைத்தது பிசகாய்த்தான் முடிந்தது.

எதை நோக்கி வந்தார்களோ, அது அந்த ஸ்டாண்டில் ஒரு நீண்ட பெருமூச்சுடன் நின்றது.

ஒரே தாவாகத் தாவினேன்.

ஏற்கனவே இற்றுப் போயிருந்த செருப்பின் ஒரு 'வார்' அறுந்ததுதான் மிச்சம்.

"இடமில்லை ஸார்" என்று அதிகாரமும் கண்டிப்பும் நிறைந்த குரலில் கூறிவிட்டு, கண்டக்டர் "அடுத்த பஸ்ஸிலே வாங்க ஸார்" என்று கொஞ்சம் விநயமாக முடித்தான்.

அந்தப் பஸ் ஸ்டாண்டில் வருகிற பஸ்களெல்லாம், ஓய்வெடுத்துக்கொள்ளுவது வழக்கம். அதாவது கண்டக்டர் எல்லோருக்கும் டிக்கட் கிழித்துக் கொடுத்து முடியும் வரையில் வெயிலென்றும் மழையென்றும் பாராமல் மூச்சு நின்ற பிரேதம்போல் பஸ் நின்றுவிடும்.

வாகனத்தில் ஓய்வைப் பயன்படுத்திக்கொண்டனர், அந்தச் சிறுவர்கள். அவர்களிடமிருந்து அலட்சியமாக நீர் வீழ்ச்சிபோல் துள்ளி விழுந்த வார்த்தைகள் என்னை பிரமிக்க வைத்தன.

"சாமி, மக்களைப் பெத்த புண்ணியவான்களே, இந்தத் தாயில்லாப் புள்ளைங்களுக்கு ஒரு காலணுப் போடுங்க!" இருவரும் மனமொத்துப் பாடிய ஒரு பிரலாபம்.

''எசமான்களே, ஏழைங்க வயிறு கண்டு அன்னம் வாக்கிற தர்மவான்களே, இந்த அநாதைக்கு ஓர் காலணுக் கொடுங்களேன்'' இது சிங்குவின்– ஓர் ஏழு வயதுப் பைய னின் - கதறல்!

''அம்மா, தேவதே, சோறு கண்டு மூணு நாளாச்சு அம்மா. இந்தப் பையன் மூஞ்சியைப் பார்த்து இரக்கங் காட்டுங்க தாயே!'' இது சின்னனின் பரிதவிப்பு.

சற்று முன் சிரித்துக் களித்திருந்த சிங்குவின் முகத்தைத் தரித்திரம், பிணி, வறுமை எல்லாமாக ஒத்துழைத்துச் செய்த ஒரு போர்வை மூடிக்கொண் டிருந் தது. சின்னனின் கண்கள் இருண்டு, கன்னங்கள் ஒட்டி னுற்போல் ஆகி, வயிறு சுருண்டு, நிஜாரிடமிருந்து பின் வாங்கி முதுகை நோக்கி நின்றது.

பஸ் புறப்படும் வரையில் அவர்கள் கதறினுர்கள். உலகத்து மக்களுக் கெல்லாம் தர்மவான்களாகவும், புண்ணியவான்களாகவும் தேவதைகளாகவும் புகழ்மாலை சூட்டி, கல் மனங்களையெல்லாம் நெகிழ வைக்க முயற்சி செய்து, தங்களது தரித்திரக் கோலத்தைக் கண்கூடாகக் காட்டி, வயிற்றுப் பிழைப்பை நடத்தும் துறையில் ஈடுபட்டார்கள்.

மரத்தடியிலே விளையாடியவர்கள் நடிப்புக் கலையின் சிகரத்திலே நிற்கிருர்கள் என்று எண்ணியது என் மனம்.

பஸ் புறப்பட்டது, புழுதியைக் கிளப்பிக்கொண்டு.

சின்னனும் சிங்குவும் நின்ருர்கள், என்னைக் கவனி யாமலே. அவர்கள் கைகளில் காலணுக்கள், தாயின் மடி யைப் போய் அடையத் தயாராக இருந்தன.

''சின்னு...!'' என்று இழுத்தான் சிங்கு மெள்ள.

''என்னு தம்பி?''

''அம்மா கடைக்குப் போயிட்டா, அப்பனுக்குப் பீடி வாங்க. நான் பஸ் போறப்போ பாத்தேன்...''

“அதனுலே என்னுவாம்?”

“அதோ பாத்தியா! தெரு முக்கிலே ஐஸ்காரன் நிக்கருன்... ஆளுக்குக் காலணு ஐஸ்” என்று விஷயத்தைக் கூறினுன் தம்பி.

“ஐயோ அம்மா பாத்தாக் கொன்னுடுவா!”

“வாங்கிக்கிட்டு அந்தச் சந்துலே நுழைஞ்சிடலாம் உம்... ஜல்தியா வா” சிங்கு அவசரப்படுத்தினுன்.

“சரி, ஒங்கிட்டே துட்டு எம்பிட்டு இருக்கு?”

“அஞ்சு காலணு... ஒங்கிட்டே?”

“மூணு.”

“சரி அம்மாகிட்டே ஆறு காலணுத்தான் கிடைச்சுதுன்னு சொல்லலாம். ஓடியா.”

தாங்கள் பிச்சை எடுத்து, தொண்டைத் தண்ணியை வற்றச் செய்து, ஏழைமையின் சொரூபத்தை வெளி உலகத்திற்குக் கஷ்டத்துடன் காட்டி, சுயமாகச் சம்பாதித்த காசைச் சுதந்தரமாகச் செலவழிக்க முடியாத நிலைக்கு அவர்களுடைய தாய் கொண்டுவந்திருக்கிருள் என ஊகித்துக்கொண்டேன். இந்த வையகத்திலே அவர்களை ஈன்று சமூகத்தினிடையே வளர வைத்ததன் கைம்மாருக அவர்கள் பெறும் ஊதியத்தைக் கொடூரமாக எதிர்பார்க்கிருள் அவள்!

சிறுவர்கள் ஓடிவிட்டனர். அவர்கள் போகும் பொழுது அவர்கள் முகங்களிலே சந்தோஷம், களிப்பு, பயம் எல்லாம் பிரதிபலித்தன. அடிக்கொரு தடவை தாய் எங்காவது வருகிருளா என்று பார்த்துக்கொண்டே அவர்கள் சென்றனர்.

அவர்களைப்பற்றிய என் சிந்தனை அவர்களுடனேயே போய்விட்டது.

இன்னெரு பஸ் வருவதற்குக் குறைந்தது இருபது நிமிஷமாவது ஆகும் எனக் கண்ட நான், அறுந்துபோன

செருப்பு வாரைச் சரிபண்ணலாமென்று எதிர்த் திசையில் சற்றுத் தூரத்தில் ஒரு மரத்தின் கீழ் உட்கார்ந்திருந்த ஒரு செருப்பு ரிப்பேர்க்காரனை நோக்கி நடந்தேன்.

'யஜமான்......எல்லாம் சுத்தமாச் செய்துடறேனுங்க: ...முன்னாலே ஒரு ஆப் ஸோல்!......பின்னாலே ஒரு ஹீல் ... ஒரு வருஷம் ஒழைக்காட்டிக் கேளுங்க......எட்டணாக் கொடுத்துடுங்க......''என்று மூச்சு விடாமல் அவன் ஆரம் பித்தான்.

''அதெல்லாம் ஒண்ணும் வேண்டாமப்பா...இதோ பார். இங்கே மட்டும் ஒரு தையல் போடு; போதும்...ஒரு அணாத் தறேன்.''

என் கண்டிப்பான குரலை எதிர்த்து, தன்னுடைய நயமான குரலால் வெற்றி காண முடியாது என்று கண்ட அவன் ஏதோ முனகிக்கொண்டே தைக்கலானான்.

சுமார் பத்து நிமிஷம் சென்றிருக்கும்.

எதைப்பற்றியோ யோசனை செய்துகொண் டிருந்த என் காதுகளில் திடீரென்று, 'ஐயோ அம்மா...! இல்லே அம்மா!' என்ற அலறல் விழுந்தது.

திரும்பிப் பார்த்தேன்.

சமீபத்தில் கையில் ஐஸுடன் காட்சியளித்த சிங்கு வின் முதுகை ருசி பார்த்துக்கொண் டிருந்தன தாயின் கைகள். அண்ணன் சின்னன் தம்பியுடன் சேர்ந்து தாயைச் சரணமடையாமல் அவள் கைக்குத் தப்பி ஓடிக்கொண் டிருந்தான். பத்ரகாளியின் ரௌத்ராகாரமும் அரக்கியின் கொடூரமும் தாயின் வதனத்திலே குடிகொண் டிருந்தன.

''மூஞ்சியைப் பாரு மூஞ்சியை! ஐஸாம் ஐஸ்!...எடு காசை!'' என்று அதட்டினாள் அவள்.

''ஐயோ அடிக்காதே அம்மா......சின்னன் கையிலே துட்டைக் கொடுத்துட்டேன்'' என்று பதில் சொல்லிக் கொண்டே, சிங்கு ஐஸை விட மனமில்லாமல் அதை ருசி பார்த்தான்.

காசு கிடைக்கவில்லை. மூத்தவன் அத்துடன் தன் கைக்குத் தப்பி ஓடி விட்டான் என்று கண்ட தாய், மனத்தில் எழுந்த கோபத்தையெல்லாம் கைகளில் செலுத்தி, சிங்குவைக் கரகரவென்று நடைபாதையில் தரையோடு தரையாக இழுத்துக்கொண்டு நான் இருக்கும் திசையை நோக்கி வந்தாள். சாக்கடை ஓரமாகப் புரண்டுகொண்டே வந்த சிங்குவின் ஒரு கை ஐஸின் குளிர்ச்சியைத் தாங்கவும் மாட்டாமல் இன்னொரு கைக்கு மாற்றவும் முடியாமல் தத்தளித்துக் கடைசியில் அரைமனத்துடன் ஐஸுக்குவிடுதலை அளித்தது. தாயிடமிருந்து விடுதலை பெற முடியாத தனயனின் கையிலிருந்து சுதந்தரம் பெற்ற ஐஸ் மகிழ்ச்சியால் கரைந்து, சாக்கடையோடு ஐக்கிய மாகியது.

எனக்குப் பக்கத்தில் வந்து நின்றுள் அந்தப் பிடாரி.

''ஏண்டி எழவே, பையனைப் போட்டு இஸ்துகினு வறே?'' என்று இறைந்தான் அவள் புருஷன், என்னுடைய செருப்பைச் சீர்ப்படுத்தும் பணியிலே இறங்கியவன்.

''பின்னே என்னுவாம்? கிடைக்கிற காசை ஐஸ் வாங்கிக் கரைச்சா!'' என்று உரத்த குரலில் கூறினுள் மனைவி.

''அடக் களுதே, நம் யோக்யதைக்கு ஐஸாடா, எச்சக் கலே!'' என்று தன் முறைப் பங்கையும் நிறைவேற்றி விட்டு, ''ஏண்டி, பீடி வாங்கியாந்தயா?'' என்று வினவினுன்.

''இந்தாக் காலணு பீடி.''

''அரையணுக்கல்ல வாங்கியாரச் சொன்னேன்?''

''அட, காலணுக்கு பட்டாணி வாங்கினேன்.''

''சனியன்; பட்டாணி வாங்கினுளாம் பட்டாணி! ஒம் மூஞ்சிக்கு பட்டாணி ஒண்ணுதான் பாக்கி!''

புருஷன்—மனைவி சமவாதத்திற்கிடையில் நழுவினுன் சிங்கு. என் பார்வை அவன்மீது சென்றது. ஐஸ், சங்கம

மாகிய இடத்தை அடைந்தான். ஐஸ், கரையாமல் இன்னும் இவனுக்காகக் காத்திருக்குமோ என்ற நப்பாசை அவனுக்கு, பாவம்! சாக்கடையினுள் கூர்ந்து பரிதாபமாகப் பார்த்த அவனுடைய முகம் ஏக்கத்தாலும் ஏமாற்றத்தாலும் வாடி வதங்கி யிருந்தது.

அவனை விட்டுவிட்டு, செருப்புத் தைப்பவனைப் பார்த்தேன். இரவில், இரைச்சலுடன் அடித்த மழைக்குப் பிறகு ஏற்படும் நிசப்தத்தைப்போல், அவன் தர்மபத்னியின் பேச்சு மழை நின்று, அலாதியான நிசப்தத்தை உண்டுபண்ணியிருந்தது. அவள் எங்கோ போகக் கிளம்பினுள். அவனுடன் பேச்சுக் கொடுத்தேன் மெள்ள.

"அந்தச் சின்னப் பையன் ஓம் மகனு?"

"ஆமாங்க, சாமி!" என்று பதில் சொல்லிவிட்டு, "சுத்த சோம்பேறிப் பையனுங்க. இவனுக்கு மேலே ஒத்தன் இருக்கான் சாமி. சம்பாரிக்கிற காசை, பெத்த ஒரு அப்பன் இருக்கானேன்னு கூட நெனைச்சுத் தரமாட்டேங்கருன், சரியா" என்று முடித்தான்.

"அவன் என்னப்பா தொழில் செய்கிறுன்?"

"அந்தத் தொழில் அவனுக்குத்தான் சாமி தெரியும். நாளைக்கு ஏதோ எட்டணு பத்தணு சம்பாரிக்கிறுன்" அவனுக்குத் தன் பிள்ளை பிச்சை எடுக்கிறுன் என்று சொல்லிக்கொள்ள வெட்கமாக இருக்கிறது என்று கண்டு கொண்டேன்.

"ஏன், ஒன் தொழிலைக் கத்துக் கொடுக்கறதுதானே?"

"வேண்டாம் சாமி; அவனுக்கு இந்தத் தொழில் வராது. வந்தாத்தான் என்னு சாமி பிரயோசனம்? சம்பாரிக்க ரெண்டு வருஷமாவது ஆகுமுங்க" என்று முடித்தான் அவன்.

இரண்டு மூன்று மரங்களுக்கு அப்பால் வந்துகொண்டிருந்த அவன் மனைவி, "டேய், கழுதை, சிங்கு, ஓடடா! பஸ் தூரத்தே வருது!" என்று கத்தினுள்.

ஓர் அணுவைக் கொடுத்துவிட்டுப் பஸ்ஸுக்காக நடந்தேன்.

எங்கோ மறைந்து போயிருந்த சின்னன் மீண்டும் தம்பியுடன் சேர்ந்துகொண்டான்.

பஸ்ஸில் நல்ல வேளையாக இடம் கிடைத்துவிட்டது.

உக்கிரமான வெயிலில் சிறுவர்களின் பரிதாபகரமான குரல்கள், பிரயாணிகளின் உள்ளங்களை அலசஆரம்பித்தன.

மக்களைப் பெத்த,தருமத்தைக் காப்பாத்தற புண்ணியவான்களே!

சாமி, இந்தத் தாயில்லாப் புள்ளைகளுக்கு......

'உண்மைதான்! உங்களுக்குத் தாய் இருந்தும் இல்லாததும் ஒன்றுதான்' என்று எண்ணியது என் மனம்.

பஸ் புறப்பட நேரம் ஆக ஆக, அவர்களுடைய குரல்களில் ஈனஸ்வரம் அதிகமாகிக் கொண்டே வந்து, நெகிழாத வைர மனதுகளை அறுக்க முயன்றது.

சிங்குவின் நடிப்பு, பிரமாதமாக இருந்தது. பஸ்ஸுக்காகக் காத்துக்கொண்டிருக்கையில் என்னை அணுகாத அவன், இப்போது எட்டு நாளாகச் சாப்பிடாதவன்போல் வந்து, "சாமி, இந்த ஏழையின் மொகத்தைப் பாத்து இரக்கங் காட்டுங்க சாமி...ஒட்டிப்போன வயத்துக்கு எதனுச்சும் கொடுங்க புண்ணியவானே!" என்று இரங்கினன்.

ஒரு விநாடி என் மனம் வேலை செய்தது. இவனுக்கு எதற்காகக் காசு கொடுக்கிறது, அப்பன் தொழிலில் இருக்கையில்? இவனுக்குக் கொடுத்தாலும் என்ன பிரயோசனம்? தாயார்க்காரி இவனை விண்டு விழுங்கிக் காசைப் பிடிங்கிக்கொண்டு விடுவாள். கடைசியில் பட்டாணிக்கும் பீடிக்குந்தானே அது போகும்?

நான் பேசாமல் இருந்தேன்.

சிங்கு விடவில்லை; கெஞ்சினான். மிளகாய் பட்ட கண்களினின்றும் நீர் சொரிவது போல, கண்ணீர் பெருகி, அவன் கன்னங்கள் வழியாக விரைந்து வந்தது.

திடீரென்று என்னவோ தோன்றிற்று. டிக்கட் வாங்கிய பிறகு கையில் பாக்கி இருந்த ஓர் அணாவைத் தூக்கி அவனிடம் எறிந்துவிட்டு, அவன் காதுகளில்மட்டும் விழும்படியாக, "டேய் ஓடிப்போய் ஐஸ் வாங்கித் தின்னுடா; ஒங்கம்மா பாக்காம" என்றேன்.

"ரைட்" கொடுத்தான் கண்டக்டர்.

பஸ் நகர்ந்தது. "டேய் சின்னு, ஒரு மைனர் ஓர் அணா வீசினாண்டா ஐஸ் வாங்கிக்கோன்னு......"

"ஓடியா! அம்மா, அப்பன்கூடச் சண்டைப் பிடிச்சிட்டு இருக்கா......" என்று சிங்கு கத்தியது என் காதுகளில் விழுந்தது.

# கோமுகி

''அப்போ கொடுக்கறதுன்னு தீர்மானம் செஞ்சாச்சு?''

''ஆமாம்.''

''வேறே வழியே இல்லியா?''

''வழி இருந்தாலும் இன்னமே அதை வைச்சுக்கறத்துக்கு எங்கே இடம் இருக்கு!...அக்கம் பக்கத்து மனுஷாதான், 'கொசு வரது; கோட்டான் வரது'ன்னு கரிக்கிறுளே!......அதனுலே கொடுத்துத்தான் ஆகணும்.''

''என்னத்தை அப்பா கொடுக்கப் போறே?'' என்று கேட்டுக்கொண்டே ஓடி வந்தாள் கமலி.

''ஒண்ணேயும் இல்லேடி. நீ போ உள்ளே'' என்று பெண் கமலியை விரட்டி விட்டு மெள்ள, ''கோமுகி கோமுகின்னு இந்தப் பெண்ணுனல் உயிரை விடறது...... அது வீட்டுக்கு வந்தது முதல் ஒரு மாசமா அதோடுதான் இதுக்கு விளேயாட்டு.''

''அதற்கு நாம் என்ன பண்ணலாம், மீனுக்ஷி? கையிலே பணம் இல்லேன்னு உனக்குத் தெரியாதா? வாடகை, மூணு மாசத்துப் பாக்கி. செட்டியார் கடையிலிருந்து தினமும் ரெண்டு வேளே ஆள் வறது...'' என்று அங்கலாய்த்துக் கொண்டார் கனபாடிகள்.

''அதென்னவோ வாஸ்தந்தான்.''

"அதனுல்தான் வேணுகோபாலனிடம் இன்றைக்குச் சொல்றேன்னு சொல்லியிருக்கேன். 'எனக்குக் கொடுத் துடுங்க. நூற்றைம்பது தரேன்'னு ஒத்தைக் காலால் நிக்கருன். இருநூறுக்கு எப்படியும் முடிச்சுடலாம்னு இருக்கேன். ஆள் கொடுப்பான்போலே இருக்கு..."

"நமக்கு இப்போ பணந்தான் முக்கியம். இருந்தா லும் இந்த மாதிரி பசுவையும் கன்னேயும்......" என்று இழுத்தாள் மீனுக்ஷி.

"அந்த வருத்தம் எனக்கு மட்டும் இல்லியா? மன சுக்குச் சங்கடமாய்த்தான் இருக்கு......ஆனு நித்தியக்காரி யம் நடக்கணுமே......இதுவரையில் எத்தனேயோ தானம் வாங்கியாச்சு. இந்த மாதிரி ஒரு காமதேனுவைப் பார்த் ததே இல்லேதான்!" கனபாடிகளின் முகத்தில் துக்கத்தின் சாயை படர்ந்தது.

"சரி, வேணுகோபாலனுக்கே கொடுத்துடரேும். பசுவின் பாலாவது தினம் வாடிக்கையாக் கொடுக்கச் சொல்லுங்களேன்."

"அதை அவனேதான் வலிய வலியச் சொல்ருனே: 'சாமி, மாடு எங்கிட்டே இருந்தாலும் ஒங்க கண்ணெதிரே கட்டிக் கறக்கறேன்'னு?"

"ஆமாம், அதாவது செய்யட்டும். லட்சுமி கடாட்சம் ததும்பி வழியறது பசு முகத்திலே!"

இதற்குள் கொல்லேயிலிருந்து கோமுகியை அவிழ்த் துக்கொண்டு, திண்ணேக்கு ஓடி வந்தாள் கமலி. "அப்பா... அம்மா...பார். கோமுகியை! அதுக்குக் குங்குமம் இட் டேன் அம்மா...!" என்று தெளிவுச் சொற்களும் மழலேச் சொற்களும் கலந்த தன் பருவ பாஷையில் கூறினுள் அவள்.

தாய் அளிக்கும் பாலின் வெண்மையையும் மிஞ்சிய வெண்ணிற மேனியோடு சாந்தம் நிலவிய முகத்தில் உருண்டு உருண்டு வட்டமிட்ட, மிரண்ட கரு விழிக

ளோடு, நீண்டு வளர்ந்திருந்த தன் வாலைக் கொக்கிபோல் வளைத்து நிறுத்திக்கொண்டு, கமலியையே பார்த்து வண்ணம் நின்றது, கோமுகி.

“ஏண்டி, இப்படிக் கண்ணுக்குட்டியைக் கொண்டு வந்து நடுத் திண்ணையிலே நிறுத்தறே! கொல்லைக்குக் கொண்டுபோ” என்று கூறிவிட்டுக் கமலியையும் கன்றுக் குட்டியையும் அழைத்துக்கொண்டு உள்ளே சென்றாள் மீனாக்ஷி.

‘இன்னிக்கு மட்டுந்தானே இந்த விளையாட்டு!’ என்று வெறுப்பு கலந்த துக்கத்துடன் தனக்குள்ளேயே முணுமுணுத்துக்கொண்டு, வேணுகோபாலனைப் பார்த்து வரக் கிளம்பினார் கனபாடிகள்.

ஒரு மாதம் முன்புதான், விற்பனைப் பிரச்னையில் அடி பட்ட பசு, கனபாடிகளுக்குத் தானமாக வழங்கப்பட்டிருந் தது. செல்வம் நிறைந்த குடும்பத்திலிருந்து வந்த அந்தப் பசுவின் உயர்ந்த தன்மையைக் கண்டு மயங்கியேவிட்டார் கனபாடிகள். வழக்கமாக அவருக்குக் கிடைக்கும் தானப் பொருள்களெல்லாம் சீக்கிரம் பணமாக மாறிவிடும். ஆனால் அலாதிக் கவர்ச்சியும் பொலிவும் பெற்ற அந்தப் பசுவையும், வஞ்சனையில்லாமல் அது அளித்த அமிர்தம் போன்ற பாலையும் கண்ட கனபாடிகளுக்குப் பசுவை விற்க மனம் வரவில்லை.

கமலிக்குக் கோமுகி வந்ததிலிருந்து அப்பாவும் வேண் டாம், அம்மாவும் வேண்டாம்; பக்கத்து வீட்டுத் தன் பரு வச் சிறுவர் சிறுமிகள் வேண்டாம்; விளையாடக் கோமுகி இருந்தால் போதும். இரண்டு குடம் தண்ணீரை, அதன் தலையில் விடுவதும், மஞ்சள் பூசி, குங்குமம் இடுவதும் அவளுக்குத் தினசரி விளையாட்டாக இருந்தன. சாத்விகம் ததும்பி வழியும் அதனுடைய முகத்தை, சின்னஞ்சிறு மணி விரல்களால் தடவிக் கொடுப்பதிலே, கமலி, பேரா னந்தத்தின் எல்லையைக் கண்டாள்.

கன்றுக்குட்டிக்கு வயிறு நிறைந்தபோது, தன் வயிறே நிறைந்தது போன்ற உற்சாக உணர்ச்சி இருந்தது

அவளிடம். எப்போதாவது கோமுகி, தன் தாய் பக்கத்தி லேயே நின்றுகொண் டிருந்தால், “அடி அசடே, சுத்த அம்மாப் பைத்தியமா இருக்கயே! பால் குடிக்கறதுக்கு மட்டுந்தான் அம்மாகிட்டேப் போகணும். என்னோடு வா” என்று அதைக் கொஞ்சலாக மிரட்டி, கூடம் வரைக்கும் ஓட்டிக்கொண்டு வந்துவிடுவாள்.

கனபாடிகள் அதற்கு முன்னால் வீட்டில் பசு வைத் துக்கொண்டதில்லை. ஏதோ கொஞ்சம் கழுநீரையும் வைக்கோலையும் போட்டால் போதும் என்று நினைத்துத் தான் அந்தப் பசுவை வைத்துக்கொண்டார். ஆனால் பணக்கார வீட்டிலே வளர்ந்த பசு, பணக்கார போஜனத் தையே விரும்பியது. “அரிசிக் கூழையும் எள்ளுப் புண் ணாக்கையும் கொண்டு வா” என்றது அது! கொஞ்ச நாட் கள் அதன் விருப்பத்தையும் நிறைவேற்றினார். ஆனால் அதில் தன் கை ஓய்ந்துவிட்டதை உடனேயே உணரவும் உணர்ந்தார். ‘நமக்கே இந்த ‘ரேஷன்’ காலத்தில் அரிசிக் குத் திண்டாட்டமா இருக்கு; இதுக்கு எங்கேருந்து போடறது......! இது நமக்குக் கட்டி வராது’ என்று எண் ணினார் அவர்.

மேலும், அண்டை வீட்டுக்காரர்களுக்குக் கனபாடி கள் வீட்டுப் பசுவினால் ஏற்பட்ட உபத்திரவங்களை, வெளி யிடாமல் இருக்க முடியவில்லை. சரியான இடவசதி இல் லாத தோஷத்தினால், நெருங்கி நெருங்கி இருந்த மற்ற வீடுகளில் பசுவால் கொசு பரவியது. அவர்கள் நச்சரிக் கத் தொடங்கினார்கள், பசுவை வைத்துக்கொள்ளாமல் இருக்க.

பசுவை விற்றுவிடலாம் என்று முதல் முதலாகக் கனபாடிகள் மனத்தில் எண்ணம் உதித்த வேளையும், பால் காரன் வேணுகோபாலனுடைய, ‘பால்காரக் கண்கள்’ பசுவின்மீது விழுந்த சமயமும் ஒன்றாக இருந்தன. எந்த உயர்ந்த அபூர்வ மாட்டையும், தூக்கி எறிந்து பேசும் அவன், கனபாடிகள் வீட்டுப் பசுவைப் பார்த்ததும் ஒரு

கணம் அசந்தே போய்விட்டான். 'முன்னூறு கொடுத்தாக் கிடைக்குமா என்ன?' என்று தனக்குள்ளேயே கேட்டுக் கேட்டு வியந்துகொண்டான் அவன்.

அன்றைய தினத்திலிருந்து காலை ஒரு வேளை, மாலை ஒரு வேளை, வேணுகோபாலன் கனபாடிகளைக் காண வரத் தொடங்கினான், அவருடைய வீட்டுக்கு. குசலம் விசாரிப்பதில் தொடங்கி, லௌகிக விஷயங்களில் புகுந்து, கடைசியில் கனபாடிகள் வீட்டுப் பசுவிலே போய் நிற்பான் அவன்.

"இந்த மாதிரி மாட்டை வைச்சுட்டிருக்கீங்களே...... அத்தைக் கட்டி மேய்ச்சுச் சரிப்படுமா, ஒங்களாலே......? ஒரு ஆள் அத்தைப் பாத்துக்கறத்துக்கே வேணுமே...... இத்த துண்டு இடம் பத்தாது சாமி......பெரிய பங்களாவா இருக்கணும்......"

அது வாஸ்தவந்தாண்டா வேணு; இப்போ மாட்டுக்காக வேறே வீடு பார்க்க முடியுமா?"

"அது சரித்தானுங்க; ஒரு பேச்சுக்குச் சொல்கிறேன்......அதுமட்டும் இல்லீங்க...மொதல்லே இம்மாதிரி ஒசத்தி மாட்டுக்குத் தீனி போட்டே சமாளிக்க முடியாதே, ஒங்களாலே!......" என்று இழுத்தான் அவன்.

தன் எளிமையை அவன் சுட்டிக் காட்டியபோது 'சுருக்' என்றுதான் பட்டது. ஆனாலும் அவனுடைய வார்த்தைகளில் உண்மையும் இருக்கிறது என்பதை அவர் உணர்ந்தார். ஊரெல்லாம் தேடி, எள்ளுப் பிண்ணாக்கு வாங்கியதையும் அரிசித் தட்டு ஏற்பட்ட சமயத்திலும் கஷ்டத்துடன் கறுப்பு மார்க்கெட்டில் அரிசி வாங்கி, கூழாக்கி, அதற்குப் போட்டதையும் நினைத்துப் பார்த்த போது, அவற்றால் கண்ட பயன், பாலைத் தவிர வேறு என்ன என்ற கேள்வியே பிறந்தது.

தினமும் வந்தான் வேணுகோபாலன்; ஓர் அத்தியாயம் படித்தான் பசுவைப்பற்றி. கனபாடிகளின் பொருளாதார நிலைமை அவனுக்குத் தெரியும்.

கடைசியில் வேணுகோபாலன் வெற்றி பெற்றான்.

அன்று அவனைக் காணச் சென்ற கனபாடிகள் அவனைக் கையோடு அழைத்துக்கொண்டும் வந்துவிட்டார்.

கூடத்தில் உட்கார்ந்துகொண்டே அவர் இரண்டு கைகளாலும் வேணுகோபாலன் மன மகிழ்ச்சியோடு கொடுத்த நோட்டுக்களைப் பெற்றுக்கொண் டிருந்தார்.

மீனாக்ஷி சுவரில் சாய்ந்தபடி, "உம்...இந்தப் பணம் பத்து நாள் உப்புப் புளிக்கும் வீட்டு வாடகைக்கும் ஆச்சு..." என்று மனத்துக்குள்ளேயே அங்கலாய்த்துக் கொண்டாள்.

கனபாடிகள் நோட்டுக்களை எண்ணிக்கொண் டிருக்கையில்தான் விஷயம் ஒன்றும் அறியாத கமலி, "அப்பா! கோமுகியைக் குளிப்பாட்டி, மஞ்சள் பூசினேன் அப்பா!" என்று கூடத்துக்குள் ஓடிவந்தாள். ஓடிவந்தவள், தந்தையின் கையில் இருக்கும் பணத்தையும் வேணுகோபாலனையும் மாறி மாறிப் பார்த்துவிட்டு, "ஏது அப்பா, இத்தனை பணம்?..." என்று கேட்டாள்.

தந்தைக்கும் தாய்க்கும் பேச நாவெழவில்லை.

வேணுகோபாலன் சிரித்துக்கொண்டே, "அப்பாக்கு நான்தான் கொழுந்தே கொடுத்தேன் ரூபா!" என்றான்.

"ஏதுக்கு?"

"ஓங்காத்து மாட்டுக்கு."

"எங்காத்து மாட்டுக்கா?"

"ஆமாம் குழந்தே! இந்த ரூபாயிலே அப்பா உனக்குப் பட்டுப் பாவாடை, பட்டுச் சொக்கா......"

அவனை இடைமறித்த வண்ணம் கமலி, "மாடு மட்டுந்தானே......இல்லாட்டாக் கோமுகியையும் கூடவா?" என்று கேட்டாள்.

"ஆமாம் பொண்ணு, கோமுகியையும் கூடத்தான்."

அடுத்த கணம், "ஐயோ அம்மா!...அப்பா!" என்று அலறத் தொடங்கினாள் கமலி. நடுக்கூடத்தில் உட்கார்ந்து

கொண்டு, காலைப் பூமியில் எட்டி எட்டி உதைத்துக் கொண்டு, தலை மயிரிலே கைகளைப் புதைத்த வண்ணம் அவள் வீறிட்டு ஓலமிடத் தொடங்கினுள்.

அவளைச் சமாதானப்படுத்த ஒருவராலும் முடியவில்லை. சில நாட்களுக்குள் வெகு பலமான அஸ்திவாரத்துடன் அவளுக்கும் கன்றுக்குட்டிக்கும் இடையே தோன்றியிருந்த அன்புப் பிணைப்பை உணராத வேணு கோபாலன் என்ன என்னவோ சொல்லியும், ஆசை காட்டியும் பயன் இல்லை.

கனபாடிகள் தம்மிடமிருந்த பணத்தையெல்லாம் அவளிடம் கொடுத்துப் பணியவைக்க முயன்ருர். நோட்டுக்கள் கூடம் முழுதும் சிதறினதுதான் பாக்கி. தாயின் சமாதானத் திட்டத்தில் இருந்த பட்டுப் பாவாடை ஷரத்தும் சிதறுண்டது.

தம் பொருளாதார நிலைமையைச் சீர்ப்படுத்தும் நோக்கத்துடன் தாம் செய்திருக்கும் ஏற்பாட்டின் குறுக்கே வருகிருளே கமலி என்ற கோபத்துடன் கனபாடிகள் இரண்டு அறை வைத்தார் அவள் முதுகில். அழுகை அதிகமாகியது.

கடைசியில் வேறு வழி ஒன்றும் தோன்ருமல் அவர் பால்காரனைத் தனியே அழைத்து, "இன்றைக்குச் சாயங்காலம் அம்மாவும் குழந்தையும் கோவிலுக்குப் போன பிறகு வந்து மாட்டை அவிழ்த்துக்கொண்டு போ" என்ருர். அவனும் சரி என்று கூறிவிட்டுப் போனுன். போகு முன் அவனிடம் கமலியின் கண்ணெதிரே, வாங்கின பணத்தையெல்லாம் திருப்பிக் கொடுப்பதுபோல் பாவனை காட்டினுர்.

மறு நாள் கனபாடிகள் வீடு அல்லோல கல்லோலப் பட்டது. கமலியின் கதறலும் அழுகையும் தெரு முழுவதையும் ஆடி அதிரச் செய்தன. கள்ளம் கபடு அற்ற உள்ளத்திலே சாந்தத்தின் உருவமான கோமுகி நிலைபெற்றதன் விளைவு பயங்கரமாக இருந்தது. "கோமுகி இல்லாவிட்டால், குளிக்கமாட்டேன்; சாப்பிடமாட்டேன்; தூங்க

மாட்டேன்' என்று பிடிவாதம் பிடிக்கத் தொடங்கினாள். கொல்லையிலே, தான் கன்றுக்குட்டியோடு விளையாடும் இடத்திலே போய்ப் புரண்டு அழுதாள். மீனாக்ஷிக்குத் துக்கமும் எரிச்சலும் பரிவும் கோபமும் ஏற்பட்டன. "குழந்தையோ இல்லையோ...இரண்டு நாட்களுக்கு அப்படித்தான் இருக்கும்..." என்று கனபாடிகள் கூறிவிட்டு, செட்டியார் கடைக் கணக்கைத் தீர்த்து வரப் புறப்பட்டார்.

இரண்டு நாட்கள் சென்றன; கமலியின் பிடிவாதமும் உபத்திரவமும் பொறுக்க முடியவில்லை. ஏற்கனவே கேட்டிருந்தபடி வேணுகோபாலனை மாட்டைக் கொண்டு வந்து, பால் கறந்து கொடுக்க ஏற்பாடு செய்யச் சொன்னாள் மீனாட்சி.

நல்ல வேளையாக அவனும் வாக்கு மாறாமல் மறு நாளே வருவதாகக் கூறினான்.

கமலியைச் சமாதானப்படுத்தினார். மீனாக்ஷி, "இங்கே இடம் போறலையோன்னோ...அதனாலே வேணுகோபாலன் வீட்டிலே நம் மாட்டைக் கட்டியிருக்கு. தினமும் காலையிலேயும் சாயங்காலமும் இங்கே அதைக் கறப்பதற்குக் கொண்டுவருவான். அப்போது நீ கோமுகியோடு விளையாடிக்கோ..." என்று கபடமற்ற மனத்தைக் கபடத்தால் தேற்றினாள்.

அடுத்த நாள் பொழுது விடியணுமே என்று தூங்காமல் ஏங்கிக் காத்திருந்தாள் கமலி.

விடிந்ததும் வேணுகோபாலன் வந்தான். மாட்டைக் கறந்தான், கமலி கோமுகியுடன் விளையாடினாள். ஆனால் கோமுகி சோர்வடைந்து இருந்ததுபோலக் காணப்பட்டது.

காலை ஒருபடி கறக்கும் பசு, அன்று ஒண்ணேகால்படி கறந்தது. "பாவி! கன்னுக்குட்டிக்குப் பாலே விடாமல் கறந்திருக்கான்!" என்று பொருமிய மீனாக்ஷி தனக்கு வேண்டிய மூன்று ஆழாக்குப் பாலைப் பெற்றுக்கொண்டு உள்ளே சென்றாள். கமலி மட்டும் வாசலிலேயே நின்ற வண்ணம் கோமுகியை, அது தெருக் கோடி மறை

யும் வரையில், கலங்கிய கண்களுடன் பார்த்துக் கொண்டிருந்தாள்.

சாயங்காலம் கமலிக்கு விளையாட மனம் வரவில்லை. கோமுகி தன்னுடன் இனி இருக்காது, விளையாடாது என்று தெரிந்துவிட்டது அவளுக்கு. என்ன கதறினாலும் மீண்டும் கோமுகி கிடைக்காது என்றும் அறிந்து விட்டாள். ஆனால், உள்ளத்தின் ஆழத்திலே பதிந்திருந்த பாசம் மட்டும் அகலவில்லை. தினமும் இரண்டு வேளை கண் குளிர அதைக் காண வேண்டும் என்ற ஆசை மாறாமல் இருந்தது.

ஒரு வாரம் ஓடியது; கனபாடிகளின் வீட்டுக்கு அடுத்த வீடு, வேணுகோபாலனுடைய வாடிக்கைதான். தினமும் அவன் மாட்டைக் கொண்டுவந்தபோது பாத்திரத்தைப் பார்க்க அவள் வாசலுக்கு வந்தாள். நாளுக்கு நாள் பாலின் கறவை அதிகமாயிற்று. கோமுகியின் கொழுத்த தேகம், தேய்மதிபோலத் தேயத் தொடங்கியது. பொலிவு, மங்கத் தொடங்கியது.

நாட்கள் ஆக ஆக, கோமுகியின் முதுகு எலும்பு, விலா எலும்பு, எல்லாம் தோலை நிமிர்த்திக்கொண்டு நிற்கத் தொடங்கின. "பாவிப்பயல் சாக அடிக்கிறான் கோமுகியை!" என்று பொருமினாள் மீனாக்ஷி.

கனபாடிகள், தாம் விற்ற மாட்டையே மறந்து விட்டவர்போல் காணப்பட்டார். காபியில் பால் போதாத சமயத்தில்தான், பாலின் ஞாபகமே வந்தது அவருக்கு.

"ஏம்மா, கோமுகி இப்படி ஆயிட்டா?...அதுக்குக் காய்ச்சலா அம்மா......?" என்று கேட்டாள் கமலி.

"இல்லேடி; ஓடம்பு இளைச்சுருக்கு; அவ்வளவுதான். ............இப்போத்தான் முன்மாதிரி உன்னோடு விளையாட முடியறதில்லையோன்னோ; அந்த வருத்தந்தான்" என்று கூறினாள் மீனாக்ஷி.

மேலும் பத்து நாட்கள் சென்றன.

ஒரு நாள் பசு மட்டும் வந்தது. கன்று பக்கத்தில் இல்லாத காரணத்தால் அது அரைப்படிக்கு மேல் பாலை அளிக்க மறுத்தது.

"சிக்கா இருக்குது அம்மா குட்டி" என்று உணர்ச்சி அற்ற பால்காரன் உணர்ச்சி நிறைந்த குரலில் கூறினன்.

ஆத்திரம் பொங்க, "ஆமாம்; நீ சரியாக் கன்றுக்குப் பால் விடவில்லைன்ன அதுக்குச் சீக்கு வராமல் எப்படி இருக்கும்?" என்று இரைந்தாள் மீனுக்ஷி.

ஏழெட்டு நாட்களுக்குப் பசு மட்டும் வந்தது; உள்ளக் கண்ணீர் வடித்துக்கொண்டு பாலையும் உள்ளுக்குள் வடித்துக்கொண்டது. குட்டியில்லேன்ன கறக்கிறதில்லே யம்மா" என்று சொல்லிக்கொண்டான் வேணுகோபாலன்.

இரண்டொரு நாட்கள் கழிந்தன.

மீனுக்ஷி வாசலில் நின்றுகொண் டிருந்தாள். பால்காரன் வேணுகோபாலன், தெருக்கோடியில் பசுவை ஓட்டிய வண்ணம் வந்துகொண் டிருந்தான். அவனுடைய தோள் மீது கோமுகி இருந்தது. அது நெருங்க நெருங்க மீனுக்ஷி யின் மனமும் உடலும் பதறின. ரப்பர்ப் பையிலே நிறைந் திருக்கும் காற்றெல்லாம் திடீரென்று வெளியே போனல் எப்படித் திடீரென்று சுருங்குமோ அப்படிச் சுருங்கியது அவளுடைய வயிறு.

'மாசு, மறுவற்ற வெண்ணிற மேனியுடன் இருந்த கோமுகியா இந்த நிலைக்கு வந்துவிட்டது!' என்று எண் ணியபோது அவள் மனம் எரிந்தது.

கோமுகி இன்னமும் சமீபித்தது. வைத்த கண்களை எடுக்காமல் பார்த்தாள் மீனுக்ஷி. அவளுடைய கண்கள் கலங்கின; நீரைச் சொரிந்தன.

வெள்ளைத் தோல் பழுப்பேறி யிருந்தது. உருண்டு உருண்டு வட்டமிட்ட, மிரண்ட விழிகள் இப்போது, ஆடாமல் அசையாமல், நிலையாக, எதையும் பாராமல், எல்லாவற்றையும் பார்த்துக்கொண் டிருந்தன. வெளி அழகு அளித்த ரத்தமும் தசையும் நிறைந்திருந்த உடல்,

கூட்டிலே அடைத்து வைத்திருந்த பஞ்சும் துணியும் காகிதமும் வைக்கோலும் தோலையும் தாண்டிக்கொண்டு, வேணு கோபாலனின் கைத்திறமையைச் சுட்டிக் காட்டின.

மீனாக்ஷியின் கண்களை நீர்த்திவலைகள் மூடின.

சதா ஓடித் திரிந்துகொண் டிருக்கும் கோமுகியின் ஓட முடியாத மூங்கில் கால்களை, நிலத்தில் பாவ வைத்துவிட்டு, வேணுகோபாலன், பால் குவளையைத் தலைகீழாகக் கவிழ்த்துக் காட்டியதை அவள் கவனிக்கவில்லை. கவனிக்க அவளால் இயலவில்லை.

உள்ளே யிருந்து வந்த கமலி, "அம்மா. இன்னிக்கும் வரல்லையே அம்மா கோமுகி!" என்று கூறிவிட்டு, பசுவின் பக்கத்திலே நிலையாக நின்றுகொண் டிருக்கும் உருவத்தைப் பார்த்தாள்.

"அம்மா, எனக்குத்தான் கோமுகியைத் தரமாட்டேன்னு சொல்லிட்டே...வேணுகோபாலனைக் கொண்டு ஒரு கன்னுக்குட்டிப் பொம்மையாவது பண்ணித்தரச் சொல்லேன்..." என்று தாயாரின் புடைவைத் தலைப்பைப் பற்றினாள் கமலி.

பதில் கூறுமலே உள்ளே போனாள் மீனாக்ஷி, பாத்திரம் எடுத்துவர. கமலியும் பின் தொடர்ந்தாள்.

திரும்பித் தனியாக வாசலுக்கு வருகையில், வேணு கோபாலன் வேறொருவனோடு பேசிக்கொண் டிருந்தது, மீனாக்ஷியின் காதுகளில் நன்றாக விழுந்தது.

"......பின்னே என்னப்பா......கஞ்சி வைச்சாக் குடிக்கிறதில்லே.........வைக்கல் தின்கறதில்லே...........பணக்கார வீட்டுப் பழக்கத்திலே அரிசிக் கூழைக் கொண்டாங்குது...அதெல்லாம் போதாமல் ஒரு நாளைக்கு அரைப்படி பாலை உறிஞ்சி ஏப்பம் விடறது... இது கட்டிவராதுன்னு முந்தாநாள் முடிச்சுட்டேன். தொல்லை ஒழிஞ்சிட்டுது பார் இப்போ......!"

"அட பாவி!" என்று மீனாட்சியின் வாய் முணுமுணுத்தது.

# துணை

''அக்கா, இந்த அலமாரியைத் தொடைச்சாச்சு' ...'ஷெல்பை'க் காமரா அறைக்குக் கொண்டு போயிட லாமா?'' மீனு உள்ளேயிருந்தவாறே கேட்டாள்.

''இதோ நானே வருகிறேன்...'' என்று சொல்லியபடி வந்த பூமா, அறைக்குள் நுழைந்ததும் ஒரு கணம் மலைத்துப் போய் நின்றாள்.

''என்ன அக்கா, அப்படிப் பார்க்கிறே?'' மீனுவின் கலைந்த தலையிலிருந்து இரண்டொரு கேசங்கள் காற்றில் ஆடின. முகமெல்லாம் வியர்வை வெள்ளம். புடைவைக் கரையை இடுப்பில் செருகியிருந்தாள்.

''அறையைக் கண்ணாடி மாதிரி ஆக்கிவிட்டாயே! பேஷ்...''

''இந்த 'ஷெல்பு' ஒன்றுதான்...''

''அது அங்கேயே இருக்கட்டுமே...''

''வேண்டாம் அக்கா... ரொம்பப் பழசு. பார்வைக்கே அருசியா இருக்கு...''

''உன்னைப் பார்க்கறப்போ, அது எங்கேடீ கண்ணுக் குத் தெரியப் போகிறது?''

''கேலி இருக்கட்டுமேன்...நீ வந்து ஒரு கை கொடு...''

'உம்... உன் அக்கறைக்கும் அர்த்தம் இருக்கிறது' என்று தனக்குள் முணுமுணுத்துக்கொண்டே பூமா, மீனுவின் உதவிக்குச் சென்றாள்.

''நீ ஆஸ்பத்திரியிலிருந்து நேரே ஸ்டேஷனுக்குப் போகப் போகிறாயா?'' என்று மீனு கேட்டாள்.

"ஆமாம்... ஏழு மணிக்குத்தானே வறது?... அம்மா என்ன செய்கிருள்?"

"மைசூர்ப்பாகு கிளறி யாகிவிட்டது...... இன்னும் மிக்ஸ்சர் ஆகணும்...இன்னிக்கு இப்படிச் செய்துவிட்டு நாளைக்குப் படுத்துக்கொள்ளப் போகிருள்..."

"சரி... நான் மறுபடியும் போகிறேன்... நீ ஸ்டேஷனுக்கு வரவேண்டாம்..."

ஒரு கணத்தில் மீனுவின் முகம் சுருங்கிவிட்டது. அதைக் கவனித்த பூமா, "நீயும் நானுமாகப் போனுல் வீட்டில் யாரு? அம்மாவாலே தனியா இருக்க முடியாது. அதுவுமில்லாமே நீ இங்கே வீட்டிலேருந்து எதிர்கொண்டு அழைக்கிறதுதான் பார்க்கிறதுக்கு லட்சணமாக இருக்கும்..." என்ருள். உடனேயே, 'ரொம்ப அநுபவம் உனக்கு...... எனக்குச் சொல்லித் தருகிருய்!' என்று மீனு தன்னைப்பற்றி எண்ணுகிருளோ என்ற நினைவும் எழுந்தது.

* * *

ரயில் வரப் பத்து நிமிஷம் இருந்தது. பூமா, ஸ்டேஷனில் அங்கும் இங்குமாகச் சிறிது நேரம் வளைய வந்தாள். ஓரத்துச் சிமென்டு பெஞ்சு ஒன்று காலியாக இருப்பதைக் கண்டதும் அதில் அமர்ந்தாள்.

ஸ்டேஷனுக்கு வெளியே...

இருட்டிவிட்டது. நீல விளக்குகள் மின்ன ஆரம்பித்துவிட்டன. வீதிகளின் போக்குவரத்துச் சப்தம் நாராசமாக ஒலித்தது.

ஸ்டேஷனில் அவளைப்போல் எவ்வளவோ பேர்! என்ன என்ன காரியங்களோ அவர்களுக்கெல்லாம்...! ஆனுல் அவளுடைய நிலையில் யாருமே இருக்கமாட்டார்கள். தங்கை புருஷனை அக்காக்காரி ஸ்டேஷனில் சந்தித்து, அழைத்து வருவது புதுமையாக இருந்தாலும் அவளுக்கு அது பழமையாகிவிட்டது. வேறு யார், தகப்

பனுரா, அண்ணு, தம்பியா இருக்கிருர்கள் மீனுவுக்கு? அவளே தங்கைக்கு எல்லாம் ஆகிவிட்ட நிலையில், அவள் தான் எல்லாவற்றையும் நடத்தும்படி யாகிவிட்டது. ஏதோ தெரியாமல், காட்டுக்குள் நுழைந்து, வெளிவர முடியாமல் சந்நியாசி ஆனதுபோல, அவளுடைய வாழ்க்கை, காட்டு வாழ்க்கை ஆகிவிட்டது. இன்னும் வெளியே போக முயன்ருல் வெற்றி கிடைக்கத்தான் கிடைக்கும். ஆனுல், வேஷத்தைத் தாங்கவும் முடியாமல், அதை அடியோடு களேயவும் முடியாமல் தத்தளிக்கையில் எப்படி வெற்றியையும் அநுபவிப்பது?

'மற்றவர்களுடைய வாழ்க்கையைப் பார்க்கும் வாழ்வு தான் என் வாழ்வு! என்று ஒருகணம் அவள் நினேத்தாள். வெறுப்பும் விருப்பும் இல்லாத தன்மையில் மனம் சென்று விட்டது. யாருடைய அன்பையும் எதிர்பார்க்க முடியா மல், யாருடைய அன்புக்காகவும் ஏங்க இயலாமல், அவள் மலேயிலே பெய்யும் மழையாக இருக்கும்படி ஆகிவிட்டது.

திடீரென்று ஸ்டேஷனில் எல்லா விளக்குகளும் எரிந்தன. 'ஸ்டேஷனுக்குக்கூடப் பிரகாசம் உண்டு!' என்று நினேத்தவண்ணம் பூமா எழுந்தாள். அடுத்த கணம் அவள் முன்னுல் ராகவன் நின்றுகொண் டிருந்தான்.

"என்ன டாக்டர், இந்தப் பக்கம்?" என்று ராகவன் விசாரித்தான்.

"தங்கையின் புருஷன் பம்பாயிலிருந்து வருகிருர்."

"ஓகோ... தலே தீபாவளி... இல்லியா...?"

"ஆமாம், ஆமாம்... நீங்கள்...?"

"நானும் என் தங்கையை எதிர்பார்த்து நிற்கிறேன்... அவளும் புருஷனேடு வருகிருள் குந்தக்கல்லிலிருந்து..."

"தலே தீபாவளிதானே?" என்று சொல்லிப் பூமா சிரித் தாள். சிரிப்பின் எதிரொலியில், 'உன் வாழ்விலே பிறக் காத நாள்!' என்ற ஒலிதான் பிறந்தது. அடுத்த கணமே,

'எனக்கு நானே இட்ட சாப பலன்!' என்று முணுமுணுத்துக்கொண்டாள்.

"அதோ ரயில் வருகிறது...... நான் முன்னால் போகிறேன்...கடைசிப் பெட்டியில்தான் இருப்பார்கள்" என்று ராகவன் விரைந்தான். பூமா, ஒரு விநாடி அவன் செல்வதைப் பார்த்தாள். பரந்த முதுகில் ஸில்க் புஷ்கோட், காற்றில் அசையும் பட்டு இலைபோல ஆடியது. கறுகறு வென்றிருந்த கிராப்புத் தலை. கறுப்பு நிறமானாலும் ஆஜானுபாகுவான தேகம். அடுத்த விநாடியே அவள் அவனை மறந்தாள்.

ரயிலும் வந்தது.

மூர்த்தி இறங்கினான். இருவருமாக டாக்ஸியில் ஏறிக்கொண்டனர். வற்றலாக இருந்த அவன் உடம்பைப் பார்த்த பூமாவுக்கு ஒரு பக்கத்தில் இரக்கம் தோன்றினாலும் இன்னொரு பக்கத்தில் சிரிப்பு வந்தது. 'மீனாவைப்பற்றி ஏங்கி இளைத்துவிட்டானே...!'

"என்ன மூர்த்தி... ரொம்ப இளைத்திருக்கிறு..."

"ஒன்றுமில்லையே...... ரயிலில் வந்த களைப்பாக இருக்கும்..."

"இல்லை... வேறே ஏதோ காரணம்..." என்று பூமா இழுத்தாள்.

"டாக்டர் கண்களுக்கே அலாதி திருஷ்டிபோல இருக்கு...!" என்று பதில் சொன்ன அவன், "ஓட்டல் சாப்பாடு... ஆபீஸில் அதிக வேலை..." என்று அடுக்கிக் கொண்டே போனான்.

'மீனா பக்கத்தில் இருந்தால் எல்லாம் சரியாகிவிடும்!' என்று பூமா நினைத்தாள்.

* * *

சாப்பாடு முடிந்ததும் மாடியில் தன் அறைக்குச் சென்றுவிட்ட பூமா, ஒரு புத்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டாள். புத்தகத்தில் கண்கள் ஊமையாயின.

நேரே கீழேயிருந்த அறையில் சிரிப்பொலி கேட்டது. பசுமை நிறைந்த வாழ்வின் எதிரொலிகள் என்று அவள் நினைத்தாள்.

மணி ஒன்பது... ஒன்பதரை... பத்து... பதினொன்று. கீழே பேச்சுக் குரல் நிற்கவில்லை. பூமாவின் நெஞ்சும் உறங்கவில்லை. தன் வாழ்க்கையின் போக்கையே நினைத்துக்கொண் டிருந்தாள்.

'டாக்டருக்குப் படிக்காவிட்டால் என்னவாம்!' அம்மா என்றோ ஒரு நாள் இரைந்தது இன்னும் நினைவில் தோய்ந்திருந்தது.

'படித்தால் என்னவாம்?' அவளுடைய பதிலில், பெண்மையின் பிடிவாதம். குரலில் முறுக்கேறியிருந்த காலம்.

'குடியும், குடித்தனமுமாக எல்லோரையும்போல...'

'நான் விதிவிலக்காக இருக்கப் போகிறேன்...'

தகப்பனார் அவள் பக்கம். "நீ படி, பூமா...உனக்குத்தான் படிப்பு வருகிறதே?" என்று அவர் கூறினார்.

அவள் 'மெடிகல் காலேஜி'ல் சேர்ந்தாள். முதல் இரண்டு வருஷங்கள் நாடகமாகச் சென்றன. கடைசி இரண்டு வருஷங்கள் தூரதேசப் பிரயாணமாகக் கழிந்தன.

கல்லூரியைவிட்டு வெளியேறின பிறகு ஒரு வருஷ காலம் 'ஹவுஸ் ஸர்ஜன்' பயிற்சி. எல்லாம் முடிந்த பிறகு சர்க்கார் உத்தியோகம்—ஆபீஸர் பதவி! வயதும் அவளை அறியாமல் ஏறி, இருபத்தைந்து ஆகியிருந்தது.

இடையில் தகப்பனார் காலமாகிவிட்டார். மீனாவுக்கு வயதாகிக்கொண்டு வந்தது. பெண்களைப் பார்த்துக் கொள்ளப் பிறந்த தாயாரும், தன்னையே பார்த்துக் கொள்ள முடியாத நிலையை அடைந்துவிட்டாள்.

சொந்த வீடு, கை நிறையச் சம்பளம். இருந்தும் மனத்தில் ருசியில்லை. ஒரு யந்திர வாழ்க்கை ஆரம்பித்து விட்டது. கடிகாரந்தான் உலகத்தில் அவசியமான பொருள் என்ற நிலை ஏற்பட்டுவிட்டது.

கல்லூரி நாட்களில் ஆண்பிள்ளைகளைப்பற்றியும் அவர்கள் உள்ளங்களைப்பற்றியும் பூமா நினைத்தாளே தவிர, விவாகத்தைப்பற்றி நினைக்கவில்லை. சமூக சேவைக்கு, விவாகம், தீராத தடை என்று எண்ணினாள். அவள் நோக்கமே சமூக சேவையாகத்தான் இருந்தது. மனித ராசியில் பிறந்திருக்கும் நோய்களைக் குணப்படுத்தி, அந்த மனித வர்க்கத்துக்குத் தன்னால் ஆன உதவியைச் செய்வதில் மட்டுந்தான் வாழ்க்கையின் பலன் இருக்கும் என்று, இளம் ரத்தத்தில் மற்ற எண்ணங்களையும் மீறிக்கொண்டு புது எண்ணம் உதித்தது.

ஆனால், புதுமையும் புதுமையிலேயே மடிந்துவிட்டது. நோயாளிகள்கூட நாளடைவில் கருவிகள் ஆகிவிட்டார்கள். ஆஸ்பத்திரியே ஒரு தொழிற்சாலை ஆகி விட்டது, அவள் கண்களுக்கு! நோயாளிகளின் நோய்களைப்பற்றி இரக்கம் தோன்றினாலும், நடைமுறையில் பழகும்போது மனம் எரிச்சல்கூட அடைந்தது. 'சனியன்கள்! எங்கேயாவது போய் ஏதாவது செய்கிறது; சாப்பிடுகிறது; இங்கே வந்து பிராணனை வாங்குகிறது!' என்றுகூட எண்ணி யிருக்கிறாள்.

ஏன் இந்த எரிச்சலும், கோபமும் வெறுப்பும்?

'என் மனத்திலே பசுமை இல்லை...அன்பு என்ற ஊற்றுப் பிறந்ததும் வற்றிவிட்டது. யார் இருந்தாலும் இறந்தாலும் தவித்தாலும் மகிழ்ந்தாலும் அக்கறையில்லாத பாலை மனசாக அது முறுகிவிட்டது!'

வாய்விட்டே பூமா முணு முணுத்துவிட்டாள். கையிலிருந்த புஸ்தகம் எப்போதோ வயிற்றின்மேல் நழுவி விழுந்தாகிவிட்டது. மணியைப் பார்த்தாள். பன்னிரண்டு!

கீழ் அறையில் வெளிச்சம் இல்லை. மீனு எப்போது விளக்கை அணைத்தாள் என்றுகூட அவளுக்குத் தெரிய வில்லை.

ஒரு விநாடி வெண்கலம்போன்ற மீனுவும் ஒற்றை நாடியான மூர்த்தியும் கண்முன் தோன்றினார்கள். அவர்களுடைய பேச்சும் சிரிப்பும் நின்றுவிட்டன.

ஆனால்...அவர்களுக்கு உலகம் இப்போதுதானே பிறந்திருக்கிறது...!

* * *

விளக்கை அணைத்துவிட்டுப் படுத்துக்கொண்டாள். அவளையும் அறியாமல் கண்முன் ராகவன் தோன்றினான். பட்டு இலைபோல, பரந்த முதுகில் தவழ்ந்த ஸில்க் புஷ் கோட்டு. கறுகறுவென்ற கிராப்புத் தலை...

'என்ன, தலை தீபாவளியா?' அவனுடைய குரல் இன்னும் காதுகளில் ஒலித்தது. சிந்தனை வட்டத்தில் அவள் புகுந்துவிட்டாள்.

ஒரு வருஷத்திற்கு முன் ஒரு நாள்...

ஆஸ்பத்திரி 'டியூடி' முடிந்துவிட்டது. 'பஸ் ஸ்டாண்டில், அவள் நின்றுகொண்டிருந்தாள்; பின்னாலேயே ராகவனும். அன்று நடந்த ஆபரேஷனைப்பற்றிப் பேச ஆரம்பித்தவர்கள்; மெள்ள நடக்க ஆரம்பித்தார்கள், ஜனக் கூட்டத்தையும் பஸ்களின் போக்கையும் பார்த்து விட்டு.

திடீரென்று கல்யாண விஷயம் வந்தது. "என் தங்கைக்கு அடுத்த மாசம் கல்யாணம்..." என்று ராகவன் ஆரம்பித்தான்.

"அப்படியா? பிள்ளை என்ன செய்கிறான்?"

"ரயில்வேயில் உத்தியோகம்...சின்ன வயசிலே நல்ல சம்பளம்."

"என் தங்கைக்குக்கூட வரன் பார்த்துக்கொண் டிருக்கிறேன்...ஒன்றும் சரியாக அமையவில்லை."

"அவள் மேலே படிக்கவில்லையா...?"

"இல்லை..."

"ஏன்?"

"நான் படித்தது போதாதா?" பதிலிலேயே அவளுடைய வெறுப்புத் தெரிந்தது.

"அப்போ உங்களுக்கு ஆகாமல் அவளுக்கு நடப்பது..."

"இதையெல்லாம் பார்த்தால் வழியே இல்லை... என்னைப்போல நான் ஒருத்திதான் இருக்க முடியும்..."

"டாக்டருக்குப் படித்த பெண்களுக்கும் கல்யாணமாகிறது..."

"ஆகாமல் என்ன? அவர்களுக்கு வாழ்க்கையில் நிரந்தரமான லட்சியம் இல்லை என்பது என் கருத்து..."

"ரொம்பத் தப்பான கருத்து...கல்யாணம் எந்தப் பெண்ணுக்கும் அவசியம். ஆண்கள் வேண்டுமானால் பிரம்மச்சாரிகளாக இருக்கலாம்."

பூமா பேசவில்லை.

"டாக்டர் டாக்டரையேகூடக் கல்யாணம் செய்துகொள்ளுவதில்லையா?"

ஏதோ சாதாரணமாகத்தான் ராகவன் சொன்னான். ஆனால் பூமாவின் மனத்தில் வேறுவிதமாகப் பட்டது. அவன் அவளைச் சாதாரணமாகப் பார்த்த பார்வையில்கூட ஏதோ அர்த்தம் பிரதிபலிப்பதாக அவளுக்குத் தோன்றியது. அவளுக்குத் தன் அழகைப்பற்றிக் கொஞ்சம் பெருமை உண்டு. பல மாணவர்கள் தன்னைப் பார்த்துவிட்டு மற்றவர்களிடம் பேசினதெல்லாம் தெரியும். அது ஞாபகத்துக்கு வந்தது. நல்ல சிவப்பு நிறம், அழகான

கண்கள், சுருள் சுருளான கேசம். வயதுக்கும் பருவத்துக்கும் ஏற்ற வளர்ச்சி. இந்த, அவள் அறிந்த அவளுடைய அழகை, அவன் அறிந்து கூறுகிறான் என்று பூமா எண்ணினாள்.

"இருக்கலாம்; ஆனால் என் கருத்துக்கு எனக்குக் கல்யாணம் சரிப்பட்டு வராது" என்று அவள் கூறினாள்.

ராகவனும் மேலே அதைப்பற்றிப் பேசவில்லை.

* * *

பூமாவுக்கு நினைவுகள் சிதறின. 'தன் வாழ்க்கையைப் போல மீனாவின் வாழ்வும் திசைமாறிச் செல்லக்கூடாது' என்று தோன்றினபோதே, அவள் படிப்பை நிறுத்திவிட்டாள். அம்மாவுக்கே ஆச்சரியமாகவும் மகிழ்ச்சியாகவும் இருந்தது. ஏன், மீனாகூட அதைத்தான் விரும்பினாள். வாழ்க்கையின் இன்பத்தை அந்த அந்தக் காலங்களில் அநுபவிக்காமல் தவறவிடுவதில் ஓர் இன்பமும் இல்லை என்று அவள் சொல்வது மீனாவின் பேச்சிலிருந்தே தெரிந்தது.

தன் எண்ணங்களின் பிடிப்பிலிருந்து பூமாவே விழித்தாள். இருள் கண்களைத் துளைத்தது. யாரோ நாயனம் கற்றுக்கொள்வது, காதில் சுருதி பேதத்தோடு விழுந்தது. மறுநாளைக்கு அவனே வந்து எதையாவது ஊதி, ஏதாவது வாங்கிக்கொண்டு போய்விடுவான். இந்த எண்ணத்தோடு எழுந்து விளக்கை ஏற்றினாள். தொண்டை வறண்டிருந்தது.

ஜலத்தைக் குடித்துவிட்டு, மீண்டும் கட்டிலில் படுத்துக்கொண்டாள். ராகவனின் முகம் மீண்டும். அந்த வேளையில் அவன் நினைவுகூட அசம்பாவிதமாகப் பட்டது. நாகரிகத்தில் மூழ்கி எழுந்த அவள் மனத்தில்-டாக்டர் பட்டம் வாங்கி, பல உடல்களையும் உள்ளங்களையும் பரிசோதிக்கும் அவள் உள்ளத்தில் - ஓர் ஆடவனைப்பற்றிய எண்ணங்கூட அவமானச் சின்னமாகப்பட்டது.

தூக்கத்தைச் சங்கிலியிட்டு இழுக்க முயன்றாள்.

* * *

திடீரென்று, ''டாக்டர், டாக்டர்...'' என்ற குரலும், 'தடால், தடால்' என்று கதவை இடிக்கும் ஓசையும் கேட்டன.

பூமா எழுந்திருக்கும் முன்பேயே மூர்த்தி கதவைத் திறந்துவிட்டான்.

பூமா, கீழே அவசர அவசரமாக இறங்கினுள்.

ஒருவன் நின்றுகொண் டிருந்தான்.

''யாரு, டிப்டி கலெக்டர் வீட்டு வேலைக்காரப் பையனு? என்ன விசேஷம்?'' என்று கேட்டாள்.

''ஆமாம் அம்மா...சின்ன அம்மா புருசரைத் தேள் கொட்டிவிட்டது...உடனே இட்டாரச் சொன்னுங்க...''

''இதோ வரேன்...'' !

அடுத்த நிமிஷத்தில் அவள் சென்ருள். ''தேள் கடிக்கு எதற்கு டாக்டர்?'' என்று மூர்த்தி, தூக்கத்தில் முணுமுணுத்ததுகூடக் காதில் விழவில்லை.

போன இடத்தில் மாப்பிள்ளையைச்சுற்றி எல்லோரும் வட்டமாக உட்கார்ந்திருந்தனர். கால் கட்டை விரலைப் பிடித்துக்கொண்டு மாப்பிள்ளை உட்கார்ந்திருந்தான். தலை தீபாவளிக்கு வந்த இடத்தில், இந்த மாதிரியான சந்தர்ப்பத்தில் நடுநாயகமாக விளங்க நேர்ந்ததே என்ற ஏக்கம் அவன் முகத்தில் பரவியிருந்தது. வலியால் அழுகை தொண்டையில் குமுறி எழுந்தது. மாமனுர் வீட்டில், அதுவும் மனைவி, கண் முன்னே இருக்கையில், பல பேருக்கு இடையில் எப்படி அழுவது? அவனுக்கு அழக்கூடச் சுதந்தரம் அளிக்கவில்லையே அவன் நிலை?

பூமா அவனுடைய விரலைப் பிடித்துப் பார்த்தாள், அடுத்தபடியாக 'இஞ்சக்ஷன்' ஊசியை எடுத்தவுடன். அவன் தன் இளம் மனைவியைப் பார்த்தான். ஏக்கத்தின் உருவம். குணம் ஆகணுமே என்ற ஆர்வமும், ஆகாதா என்ற ஆதங்கமும் அவளுடைய முகத்தில் உருக்கொண்

டிருந்தன. கணவன்மேல் அவளுக்கு என்ன அக்கறை! ஏன்?

"என்ன டாக்டர் அம்மா, விடியக்கார்த்தாலே எண்ணெய் தேய்த்துக்கொள்ள முடியுமோ இல்லியோ?" என்று பெண்ணின் தாயார் கேட்டாள்.

"முடியலாம்..."

"ஒன்றும் பயமில்லையே, டாக்டர்!" பெண்ணின் குரல் தழுதழுத்தது. அவனுக்காக என்ன பாடு பட்டு விட்டாள்! அவளுடைய அன்பு, அவனை எப்படி அணைத்துக்கொண்டிருக்கிறது. அவள்மீதும் அவனுக்கு அப்படித் தானே அன்பும் ஆசையும் இருக்கும்!

பூமாவுக்காக யார் இருக்கிறார்கள் ஏங்க! அவள்தான் இம்மாதிரி யாரை நினைத்து, தன்னையும் மறந்து நினைக்க முடியும்?

"இந்தாருங்கள் டாக்டர்..." பெண்ணின் தகப்பனார் நீட்டிய நோட்டைப் பார்த்தபோது அவளுக்கு இந்த உலகம் மீண்டும் நினைவுக்கு வந்தது.

"நான் வருகிறேன்..." நோட்டை வாங்கினாள்.

"குங்குமத்தைக் கொடுடீ...உங்கள் தங்கை புருஷன் வந்திருக்கிறாரோ இல்லியோ? அவளுக்கும் தலை தீபாவளியாச்சே...?" பெண்ணின் தாயார் யோக க்ஷேமங்களை விசாரித்தாள். 'உனக்குத்தான் இல்லையே'! என்று அவள் மனத்தில் எண்ணுவதாகப் பூமா நினைத்தாள்.

பெண் குங்குமச் சிமிழைக் கொண்டுவந்தாள். 'என் நெற்றிக்கு இதனால் ஒரு அர்த்தமும் இல்லை! என்ற எண்ணம் கசிந்தாலும், விரல் தானாகக் குங்குமத்தைத் தொடத்தான் தொட்டது.

"பையனைத் துணைக்கு அனுப்புகிறேன்..." என்று கூறின பெரியவர், "டேய், கூடப் போயிட்டு வா" என்றார்.

மணியைப் பார்த்தாள், மூன்றரை. வானில் நட்சத்திரங்கள் பூக்களாக உதிர்ந்தன.

அவள் முன்னால் நடக்க, பையன் சற்றுப் பின்னால் நடந்து வந்தான். அவன் அவளுக்குத் துணை. பதினாறு வயதுப் பையன் துணை!

இருபத்தெட்டு வயது ஆனால்தான் என்ன, பெண் ஜன்மம் பெண் ஜன்மந்தான். ஆணைப்போலப் பேசினாலும் நடந்தாலும் பெண்மைக்கு ஏது மாற்று? அவள் தனியாகச் செல்லுவதில் இருக்கும் ஆபத்து, படிப்பினாலும் பதவியினாலும் நாகரிக முன்னேற்றத்தாலும் மாற வில்லை. அவளுக்கும் துணை வேண்டியதுதான். வாழ்க்கை என்னும் பாதையில் என்றென்றும் அவள் நடக்கப்போகிறாள். தனி நடையாகவே எத்தனை நாட்கள், மாதங்கள் போகலாம்? எதற்குமே ஓர் எல்லை உண்டு அல்லவா? அதை நினைக்காமல், சமூகம், சமூக சேவை என்று நடத்தும் வாழ்க்கை என்ன வாழ்க்கை? அவள் தன்னையே தியாகம் செய்துகொள்ளுகிறாள் என்றால் அதைவிடப் பெருமை வேறு இல்லை. இந்த உலகத்திலே தியாகமே அசம்பாவிதம். மனத்தின் ஆழத்திலிருந்து உணர்ச்சிப் பிரதிபலிப்பாக இல்லாத தியாகந்தான் அவள் தியாகம். அதில் யாருக்குமே அக்கறையில்லை. யாருக்காவது ஒருவருக்குத் தன்னையே நிரந்தரமாக அர்ப்பணித்துக்கொண்டால் அவளுக்கும் நிம்மதி இருக்கலாம். தனி நடையும் இருக்காது. துணையும் கிடைக்கும்.

'இனிமேல் அது ஏது!' வெறுப்புக் கலந்த எண்ணத்தோடு நினைக்கையில் அவளையும் மீறிக்கொண்டு ராகவன் கண்முன் நின்றான். அவனுக்கு, அவள் மீதுள்ள அக்கறை, அவன் உருவம் பெற்று முன் நின்றது. அடுத்த கணமே அவனை மறக்க முயன்றாள். மனம் கரையிலும் சேராமல் நீரிலும் மிதக்க முடியாமல் தவித்தது.

வீட்டை அடைந்தபோது மூன்றே முக்கால் ஆகி விட்டது.

மீனா, வெந்நீர் அடுப்பின் முன் உட்கார்ந்திருந்தாள்.

"என்ன அக்கா, ஒன்றும் பயமில்லையே!"

"பாவம், அழ முடியாமல் தவிக்கிறான்..."

"சரளா அழுகிறாளா?"

"நீயானால் அழுவாயா?"—கேட்ட பிறகுதான் ஏன் கேட்டோம் என்று பூமாவிற்கு உறுத்தியது.

மீனா ஏனோ பேசவில்லை. எரியும் அடுப்பிற்கு முன்னால் உட்கார்ந்தவள் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. அடுப்படியில் குளிர் காய்ந்தாள்.

"வெந்நீர் நன்னாச் சுட்டாகிவிட்டதா?"

"உம்...ஒரு மாதிரியா."

"மூர்த்தியை வேணுமானா எழுப்பேன்...நாலடிக்கப் போகிறது."

"அவர் இப்பவே எழுந்து என்ன செய்ய வேணும்?" மீனாவின் முகத்தில் ஜுவாலை வீசியது. அந்தச் சிவப்பில் முகமே மாறியிருந்தது.

"இப்போதே எழுந்திருந்தால்தானே ஐந்துக்குள்ளே எல்லாம் முடியும்...?"

"மெள்ளப் போதும்......பாவம், இரண்டு நாள் ரயில்லே......ராத்திரி வேறே தூக்கம் இல்லை சரியா..."

'என்ன அக்கறை!' என்று பூமா அறைக்குத் திரும்பினாள்.

அவளையும் அறியாமல் அசதி கண்ணைக் கட்டி விட்டது.

* * *

**எ**ழுந்திருக்கும்போது மணி ஐந்தரை. மூர்த்தி ஸ்நானத்தை முடித்துவிட்டு,அப்போதுதான் வந்தான். எலும்பு மார்புக்கூட்டையும், முழைத்து நின்ற தோள்பட்டையையும் பார்த்துப் பூமாவுக்கு ஏனோ சிரிப்பு வந்தது. 'இதில்

என்ன இன்பத்தைக் காணுகிருள் மீனு?' என்றுகூட எண்ணினுள். விரும்பாவிட்டாலும் எண்ணம் உதித்து விட்டது.

மீனு பறக்கப் பறக்கக் காரியங்களில் ஓடிக்கொண் டிருந்தாள். யாருக்காக இந்தப் பறப்பு?

"நீதான் எண்ணெய் தேய்ச்சுக்கமாட்டாயே, இன் னிக்கு முகத்தையாவது அலம்பிக்கொண்டு வா; காப்பி சாப்பிடலாம்..." என்று தாயார் கூறினுள்.

ஒரு கணம் மின்னலைப்போல ஏதோ தோன்றியது. "அம்மா நானும் இந்த வருஷம் ஒரு கை எண்ணெய் வச்சுக்கிறேன்...அப்புறம் போதும் காப்பி..." என்று பூமா ஸ்நான அறைக்குப் போனுள்.

அம்மாவுக்கு வாயடைத்துவிட்டது! மீனுகூட அதி சயப்பட்டாள்.

* * *

**எ**ன்றும் இல்லாமல் ஆறரை மணிக்குத் திடீர் என்று கார்ச் சப்தம் கேட்டது.

ராகவன்!

"என்ன டாக்டர் விசேஷம்?" என்று பூமா விசா ரித்தாள்.

"லில்லி தாமஸ் அவசர லீவாம்...போன் வந்தது... உங்களிடம் தகவல் சொல்லி வரச் சொன்னுர் ஆபீஸர்..."

"ஏழு மணிக்குள்ளே போகணுமே...!" ஒரு கணம் பூமா தவித்தாள்.

"ஆமாம்......எனக்கும் 'டியூடி' இருக்கு. நானும் அங்கேதான் போகிறேன்."

"இதோ நானும் புறப்படுகிறேன்...உள்ளே வாருங் களேன்......"

ராகவன் உள்ளே வந்தான். மூர்த்தியை அறிமுகப் படுத்தி வைத்துவிட்டு, பூமா டிபன், காபி கொண்டுவரச் சென்றாள். ஒரு கணத்தில் தீபாவளிப் பெண்ணாகி விட்டாள்!

"தீபாவளி...அதுவும் தலை தீபாவளி!" என்று ராகவன் சிரித்துக்கொண்டே மைசூர்ப்பாகை எடுத்தான்.

"உங்களுக்குந்தானே?" என்று மூர்த்தி கேட்டான்.

"எனக்கா?" என்று கேட்டு, வாய்விட்டுச் சிரித்த ராகவன், "என்ன டாக்டர் பூமா, உங்கள் மாப்பிள்ளை கேட்டதைக் கவனித்தீர்களா?" என்று அவளைப் பார்த்தான்.

அவன் பார்வையில் ஏதோ அர்த்தம் இருக்கிறதாகப் பூமாவுக்குப் பட்டது.

"எல்லாருக்குந்தான் தலை தீபாவளி வருகிறது...... எதிர்காலத் திட்டங்களின் வெற்றியைப்பற்றி ஒன்றுமே சொல்வதற்கில்லை..." பூமாவும் அர்த்தபுஷ்டியோடு ராகவனைப் பார்த்தாள். அவன் புரிந்துகொண்டான்.

"எனக்கு இன்னிக்கு ஆஸ்பத்திரியில்தான் தீபாவளி!" என்று ராகவன் எழுந்தான். குறும்புச் சிரிப்பு உதடுகளில் தவழ்ந்தது.

பூமாவும் அவனும் காரில் ஏறிக்கொண்டார்கள். அவளுக்குத் தனி நடை மறந்துவிட்டது. புதுமையான துணை கிடைத்துவிட்டதான உணர்ச்சி அவளையும் மீறிக் கொண்டு எழுந்தது!

# புது உலகம்

**நா**ன்கு தடவை கை ஓயத் தட்டின பிறகுதான், சுமதி மெல்ல அன்ன நடை போட்டுக்கொண்டு வந்து கதவைத் திறந்தாள். அவளுடைய முகத்தில் எரிச்சலும் ஆத்திரமும் வெடித்தன.

வரதன், திண்ணைக்குள் வந்ததும், "உங்களுக்கு எத்தனை ஆயிரம் தடவை சொன்னாலும் குத்த மாட்டேன் என்கிறது. ஒரு மனுஷன் ஆபீஸிலிருந்து வீட்டிற்கு வர மூன்று மணி நேரமா?" என்று அவள் இரைந்தாள்.

"என்ன சுமதி செய்கிறது? இன்றைக்குக் கல்கத்தாவி லிருந்து டைரெக்டர் வந்தான். 'டீ பார்ட்டி' கொடுக்கத் திடீரென்று ஏற்பாடாயிற்று."- வரதனின் குரலில் நிதானமும் பொறுமையும் பிரதிபலித்தன.

"ஒவ்வொரு நாளுக்கு ஒவ்வொரு சாக்கை, பெட்டியி லிருந்து எடுப்பது மாதிரி எடுத்து வீசுகிறீர்கள். எந்தப் பெண்டாட்டி, தினம் தினம் சாயங்காலம் வீட்டிலே மிருகம் மாதிரி அடைத்துக் கிடப்பாள்! அதுகூட யதேச் சையாகத் திரியக் கொடுத்து வைத்திருக்கிறது. ஏன் தான் போயும் போயும் உங்களுக்கு வாழ்க்கைப் பட்டேனோ!" சுமதிக்கு இருந்த ஆத்திரத்தில் கண்களில் நீர்கூடத் தோன்றிவிட்டது.

வரதன், வாய் பேசாமல் உடுப்புகளைக் கழற்றச் சென்றான். அவளுடன் பேசிப் பயன் இல்லை என்று அவ னுக்கு நன்றாகத் தெரியும். வீட்டில் அவள் செய்யும் அட்டகாசத்தைப்பற்றி எண்ணியும் பயன் இல்லை. ஒரு

மூர்க்கன் இருக்கவேண்டிய ஸ்தானத்தில், தான் இருப்பதைக் குறித்துத்தான் அவன் வருந்தினன்.

கை கால் அலம்பிவிட்டு அவன் வந்தபோது, "மணி எட்டு ஆகிறது. சோற்றைத் தின்னப் போகிறீர்களா? இல்லை, இந்த வேளையில் காபி வேணுமா?'' என்ருள் மனைவி.

அவளுடைய அலட்சியத்தை அவனுக்குள் இருந்த ஆணவம் புறக்கணித்தபோதிலும், வெளியில் அவன், "உனக்கு எது சௌகரியமோ, அதைச் செய். நான் காபி தான் குடிக்கவேண்டும் என்றால் குடிக்கிறேன். இல்லாவிட்டால் சாப்பிடுகிறேன். எதற்கு ஆத்திரப்படுகிருய்?" என்ருன். சுபாவத்தில் அவன் நல்லவன். அதுவே அவன் விஷயத்தில் பாதகமாயிற்று.

"கை நிறையச் சம்பாதித்து, ஊரறிய உங்கள் கையில் கொடுத்தானே என்னை, என் அப்பன், அவனை நினைத்துக்கொண்டு ஆத்திரப்படுகிறேன்! போதுமா!"

"எனக்கு என்ன தரப்போகிருய்?'' அவளுடைய வார்த்தைகள் உள்ளத்தில் பாய்ந்ததை அவன் காட்டிக் கொள்ளவில்லை. உடம்பில் தழும்பு ஏறிவிட்டால் பிறகு ஏது வலி?

"சாப்பிடப் போகிறது நீங்களா, நானு?'' வார்த்தைகளைத் தூக்கி எறிந்து, சுமதி இடக்கையை இடுப்பில் வைத்துக்கொண்டு இரைந்தாள்.

"சரி, சாதம் போடு."

அவன் உட்கார்ந்தான்.

கலத்தில் காலையில் வடித்த சாதம் விழுந்தது. அவனுக்கு ஆபீஸில் மானேஜர் பதவி; முந்நூறு ரூபாய் சம்பளம். அந்த நிலையில் அதை நினைத்தபோது உள்ளூற ரத்தம் கசிந்தது. அவன்கீழ் வேலை பார்க்கிறவர்கள், அவனைப்போலவா இருக்கிருர்கள்!

சாதத்தின்மேல், காலையில் வைத்த சாம்பாரை, சுமதி கரண்டியால் அள்ளி அள்ளிக் கொட்டினுள். வரதனுடைய கண்முன் அவனிடம் வேலை பார்க்கும் சேவகன் தோன்றினுன். அவனுக்கு எவ்வளவு ஆசையுடன், மனைவி சாதத்தைப் பிசைந்து போடுவாள்!

"தொட்டுக்கொள்ள ஒன்றும் இல்லையா?"

"இருந்தால் கலத்தில் விழுமே!"

வரதனுக்கு அப்பளம் பிடிக்கும். அதுவும் சாம்பாருக்குத்தான் அதிகம் வேண்டும். நாக்கின் நப்பாசையில், பொறுமையைக்கூட இழந்தான். நான்தான் இரண்டு கட்டு அப்பளம் வாங்கியிருந்தேனே!" என்றுன்.

"ஆமாம், வாங்கியிருந்தீர்கள். என் பிறந்தகத்துக்கு அனுப்பினேன்!"

வரதன் குழந்தையானுல் அழுதிருப்பான். இன்னெருத்தி அப்படிப் பேசியிருந்தால் அடித்திருப்பான். ஒரு நாள் இல்லாவிட்டால் மற்ருெரு நாள் சுமதி, நல்ல சுமதி ஆவாள் என்ற நம்பிக்கையில் அவன் வாளா இருந்தான். சாப்பிடும்வரை வாயே திறக்கவில்லை.

கை அலம்பிவிட்டு, தன்னுடைய அறைக்குச் செல்லுகையில் வரதன் சுமதியைப் பார்த்தான். என்ன அழகு அவள்! அழகில் மயங்கி அவன் கண்ணிழந்தான். அதன் பலன், வாழ்க்கையில் நித்தியப் பிரளயம்.

* * *

**நா**ற்காலியில் உட்கார்ந்துகொண்டு, ஏதோ ஒரு பத்திரிகையை எடுத்துப் பிரித்தான் வரதன். பார்த்த பக்கத்தில், 'அமெரிக்காவில் விவாக ரத்து!' என்ற தலைப்புத் தெரிந்தது.

அவனுக்கு அந்த விஷயத்திலேயே ஆர்வம் கிடையாது. பொழுதைப் போக்க, அதுவும் இன்பமாக மனைவியுடன் நான்கு வார்த்தைகள் பேசிக் கழிக்க இயலாத நிலையில், என்ன செய்கிறது? படித்து வைத்தான். கடைசி

யில், 'தினம் தினம் நேரம் கழித்துத் தூங்கி எழுந்திருக்கிறான் கணவன் என்ற அற்பக் காரணத்தினால் மனைவி ரத்துச் செய்துகொள்ளுகிறாளே. என்னுடைய நிலையில் எத்தனை அமெரிக்கர்கள் காலந்தள்ளுவார்கள், ரத்து, இல்லாமல்?' என்ற கேள்விதான் எழுந்தது.

சுமதியை, அவன் வழிக்கு எப்படிக் கொண்டுவருவான்?—இந்தக் கேள்விதான் சதா சர்வகாலமும் அவனுள் தோன்றிக்கொண்டே இருந்தது. காரியாலயத்தில் ஒவ்வொருவனையும் அவன் தன் வழிக்கா கொண்டு வருகிறான்? எல்லாரும் தத்தம் கடமைகளைச் செய்வதோடு மட்டும் அல்லாமல், 'மானேஜர்', 'மானேஜர்' என்று மரியாதையோடும் அன்போடும் இருக்கிறார்கள்.

ஆனால் வீட்டில்?

'இந்த மாதிரி ஒரு புருஷனை ஏன் கணவனாக அடைந்தோம்?' என்று தினம் தினம் சுமதி பொருமி, அவன் நெஞ்சைக் குலைக்கிறாள். இவ்வளவுக்கும் அவன் செய்த தப்பு என்ன? அவள் மனம் எரியும்படியாக அவன் என்ன செய்துவிட்டான்? அபரிமிதமான அன்பை அவள்மீது அள்ளிச் சொரிந்ததுதான் காரணமோ? சுமதி மீதுள்ள அன்பு, செயற்கையாக, திடீரென்று தோன்றியதல்லவே! இயற்கையாக, கொடி சாய்காலை நாடுவதுபோல, அவன் மனம் அவளை நாடியது.

அவள்மீதுள்ள அன்பை என்றென்றைக்கும் சாசுவதமாக வைத்துக்கொள்ளலாம் என்று கட்டின மனக்கோட்டையில், எவ்வளவு தியாகங்கள் செய்திருக்கிறான்! ஒன்றுவிட்ட மாமாவுக்கும் அவன் தகப்பனாருக்கும் என்றைக்குமே ஆகாது.

அவனுடைய மாமா, தம் பெண்ணுக்கு வரன் பார்த்துக்கொண்டிருந்தார். சுமதியை இளம் வயசு முதல் அவன் அறிவான். குழந்தை நாளில் சில வருஷங்கள் அவர்கள் கல்யாண விளையாட்டுக்கூட விளையாடியிருக்கிறார்கள். அவளுக்கு ஏழு வயசு நடக்கையில், அவள் தகப்பனார், இருந்த வேலையை இழந்து, வேறு வேலை

தேடிச் சென்றுவிட்டார் பம்பாய்க்கு. அதற்குப் பிறகு பத்துப் பன்னிரண்டு வருஷங்களுக்கு அவர் இந்தப் பக்கமே வரவில்லை.

ஆனால் அவர் வந்தபோது, எழில் மிகுந்த தாயற்ற பெண்ணோடும் பம்பாயில் ஏராளமாகச் சம்பாதித்த பணத்தோடும் இருந்தார். சுமதியை இரண்டு தடவை பார்த்த போதே, வரதனுக்குப் பழைய நாட்களின் ஞாபகங்கள் வளர்ந்துவிட்டன. நீறு பூத்த நெருப்பாக இருந்த அன்புக் கனல் மீண்டும் கொழுந்துவிட்டது.

வரதன் நன்றாகப் படித்தவன். நிறையச் சொத்து வேறு. நல்ல யௌவனம். அவனே மாமாவிடம் சென்று சுமதியைக் கேட்டபோது, அவருக்கு ஆச்சரியம் தாள வில்லை.

"உன் அப்பாவின் சம்மதம்?" என்று அவர் கேட்டார்.

"கேட்டால் பிரயோசனம் இருக்காது. உங்கள் மீதுள்ள ஆத்திரம் இன்னும் அடங்கினதாகத் தெரிய வில்லை."

"தம்மை நான் ஏமாற்றியதாக அவர் நினைக்கிறார். அப்படியே வைத்துக்கொண்டு அந்த இரண்டாயிரத்தை யும் தந்துவிடுகிறேன் என்று சொல்; அப்புறம் பார்க்க லாம்" என்றார்.

ஆனால் அதுவும் பலனை அளிக்கவில்லை. "எனக்குப் பணத்தைவிட மனிதனின் குணந்தான் முக்கியம். அன்று ஏமாற்றியவன் இன்றைக்கு என் பிள்ளைக்காகப் பணத் தைக் கொடுத்து நல்லவனாகப் பார்க்கிறானே?" என்று அலட்சியமாகக் கூறிவிட்டார், அவன் தகப்பனார்.

வரதன் விடவில்லை. சுமதியின்மீதுள்ள அன்பினால் அவன் தகப்பனாரை எதிர்த்தான். அவனுடைய அன்பைக் கண்டு சுமதிக்கே ஆச்சரியமாக இருந்தது, ஏனெனில் அவனோடு அவள் வயசு வந்த பிறகு, அதாவது சென்னைக்

குத் திரும்பி வந்த பின்பு, அதிகமாகப் பேசினதில்லை. அவனுடைய அபரிதமான காதல் உணர்ச்சி, முதலில் நன்றி உணர்ச்சியை உண்டாக்கியது. அவள் தன் வாழ்க்கையின் ஆதாரம் என்று அவன் தீர்மானமாக எண்ணியிருக்கையில், அது சுமதிக்குப் பெருமிதமாக இருந்தது.

"நான் உன் கல்யாணத்துக்கு வரமாட்டேன்" என்றார் தகப்பனார், வரதனிடம்.

வரதன் ஒன்றும் பேசவில்லை.

"என் சொத்தில் உனக்குக் காலணாக் கிடையாது" என்றார்.

'சொத்து மட்டுந்தான் அவசியமா? உள்ளத்தில் எழும் அன்பு உணர்ச்சிக்கு ஏது விலை மதிப்பு?' என்று நினைத்த வரதன், "நானாகக் காலணாக் கேட்கவில்லை" என்றான்.

எல்லாவற்றையும் நினைத்தபோது பழைய நாட்கள் யுத்த நாட்களாகத் தோன்றின. அந்த நாட்களுக்குப் பிறகாவது, விவாகத்திற்கு அப்புறமாவது, நிரந்தரச் சமாதானம் கிடைத்ததா? கல்யாணமான புதிதில், எந்தத் தம்பதிகள் இன்பமில்லாமல் இருக்கிறார்கள்? ஒருவரை ஒருவர் புரிந்துகொள்ளாத நிலையில், மனம் ஒட்டாத நிலையில், வெளி வார்த்தைகளும் செய்கைகளும் அவர்களைப் பிணைத்துவிடுகின்றன. நாள் செல்லச் செல்ல, திக்குத் தெரியாமல் அலைந்துகொண் டிருந்த மனங்கள், கொஞ்சம் கொஞ்சமாகக் காந்த சக்தியால் வசீகரமாவதுபோல, அருகில் அருகில் வந்து கடைசியில் ஒன்று சேரும்போது விவாக வாழ்க்கையின் லட்சியமே நிறைவேறுகிறது. அந்த லட்சியம் வரதனின் விஷயத்தில் ஏன் நிறைவேறவில்லை, இன்னும்? நான்கு வருஷ வாழ்க்கையில் என்றைக்காவது அவனும் சுமதியும் மனமொத்து ஒரே ஒரு காரியத்தைச் செய்திருந்தால்கூட அவன் வருத்தப்படவே மாட்டான், தன் நிலையை எண்ணி.

சுமதியின் மனம், அலைகடலில் பாய்மரமற்ற கப்பலாக அலைந்து தவிக்கிறது என்று அவன் நினைத்தான். காரணம்? அவனுடைய எல்லையில்லாத அன்புச் சமுத்திரம், அவள் உள்ளத்தில் கர்வ அலைகளையும் அலட்சிய மோதல்களையும் உண்டாக்கினதுதானே? செல்வம் படைத்த தாயும் தகப்பனும், தம் ஒரே அருமைக் குழந்தை எதிலும் குறை காணக்கூடாது என்று அது போனபடியே போனால் கடைசியில் யாருக்கு நன்மை விளைகிறது? அன்புக் கயிற்றால் 'பிள்ளையைக் கட்டத் தொடங்கினவர்கள், கடைசியில் பிள்ளையின் அதிகாரக் கயிற்றால் மாளுகிறார்கள்! அந்த உண்மை, சுமதியிடத்தும் வந்துவிட்டதோ?

அவனை அவள் ஒரு மனிதனாகக் கருதுவதில்லை. ஏன்? அவன் உள்ளத்தில் வற்றாத அன்புச் சுனை இருக்கிறது என்று அவளுக்குத் தெரியும். அவள் என்ன கட்டளையிட்டாலும் அவன் செய்யத் தயாராக இருந்தான். எதற்கும் அவன் விட்டுக் கொடுத்தான். தன் அவசியத்தை உதறி, அவளுடைய அநாவசியத்தைக்கூட ஆதரித்தான். 'இவன் இவ்வளவுதான்!' என்று சுமதி அவனை அளந்துவிட்ட நிலையில். கை ஓங்கும் பதவிக்கு வந்துவிட்டாள். காரணம்? அவனுடைய எல்லையில்லாத அன்பு! எதற்குமே எல்லை வேண்டும். சுமதி ஒரு போதை. அது கிளப்பிவிட்ட மயக்கத்தில் வரதன் கண் இழந்து, திண்டாடினான். அன்பிற்கு எல்லையின்மையைச் சுமதி கண்டுவிட்டதன் பலன்!

கடைசியாக, நின்று நின்று நிதானித்து, எண்ணங்களைப் பந்தலாகப் படர விட்டபோது, ஒரே ஓர் எண்ணம் மட்டும் அவன் உள்ளத்தில் நிலையாக ஊன்றி நின்றது.

'இனி நான் கடைசியாக அன்பையும் தியாகம் செய்ய வேண்டியதுதான்!'

* * *

அடுத்த நாள் காலையில் வரதன் அதிகமாகப் பேசவில்லை. ஆனால் அன்று இரவு பத்து மணிக்கு அவன் திரும்பினபோது பேசாமல் இருக்க முடியவில்லை.

"ஏன் இத்தனை நேரம்?" என்று சுமதி ஆத்திரத்தோடு கதவைத் திறந்துகொண்டே கேட்டாள்.

"என் இஷ்டம்!"

சுமதி தன் வாழ்வில் முதல் முதலாக எதிர்ப்பை, அதுவும் கணவனிடமிருந்து வரும் எதிர்ப்பைக் கண்டாள். ஆனால் அவள் லேசுப்பட்டவள் அல்லவே!

"இஷ்டமாவது? ஓட்டலிலேகூடக் காத்துக்கொண்டு இருக்க மாட்டார்கள். வீட்டிலே என்ன? இஷ்டம்போல் வந்தால் மாடுபோல் உழைக்க யார் இருக்கிறார்கள்?"

"நீ இருக்கிறாய்! அதற்குத்தான் நீ இந்த வீட்டில் புகுந்திருக்கிறாய்."

"பேஷ், பேஷ், போதை!'.

"சீ, மூடு வாயை! பல்லை உடைத்துவிடுவேன். பெண்ணும் இவள்! பேயாட்டம் ஆடுகிறாள்."

வரதனின் முகத்தில் பிரதிபலித்த கோபத்தையும், கண்களில் சுடர்விட்ட ஆக்கிரோஷத்தையும் கண்டு, சுமதி அருண்டு போனாள். எந்தப் பெண்ணும் ஒரு நிலை வரையில்தானே கை ஓங்க முடியும்? எல்லை மீறிவிட்டால், தலை தாழ்த்தாமல் வேறு என்ன வழி?

அன்றையிலிருந்து அந்தச் சிறு வீட்டில் புது உலகம் சுற்றியது. எலியாக இருந்த உயிர், பூனையாக மாறிய போது பூனை எலியாயிற்று. பூனை புலியாகவும் உருவெடுத்தபோது வீடே அதிர்ந்தது.

"ஏன் இந்தக் குழம்பை வைத்திருக்கிறாய்? உனக்குத் தெரியாது, எனக்கு வெண்டைக்காய் பிடிக்காது என்று?" கடுகடுப்பாக வந்த வார்த்தையின் உஷ்ணம் தாக்கு முன்பே,வெள்ளித் தட்டு அவள் முகத்தை நோக்கி விரைந்தது. சுமதி செய்த புண்ணியம்! முகம் தப்பியது.

**ஒ**ரு நாள் சாயங்காலம், வரதன் வீட்டிற்கு வந்த போது, சுமதி நன்றாக அலங்கரித்துக்கொண்டு இரண்டு பெண்களுடன் அளவளாவிக்கொண் டிருந்தாள்.

"என்ன வம்பு வேண்டியிருக்கிறது உனக்கு?" என்று வீடு அதிரக் கத்தினுன். அவனுக்கே ஆச்சரியமாக இருந்தது, தன்னுல் எப்படி அவ்வாறு கத்த முடிந்தது என்று.

"ஏன் இப்படி இரைகிறீர்கள், இரண்டு பேர் வந்திருக்கிறபோது?" சுமதியின் வார்த்தைகளில் அடக்கம் இருந்தும், கர்வத்தின் சாயையும் படர்ந்தது.

"நான் மெல்ல அல்லவா பேசினேன்? வீடு இரண்டாகும்படியாகக் கத்தாமல் இருந்தேனே, அதே பெரிசு! அது சரி, எனக்கு என்ன வைத்திருக்கிருய், கொட்டிக் கொள்ள?"

"உப்புமாப் பண்ணியிருக்கிறேன்."

"உப்புமா, உப்புமா! இழவு எடுத்தவள்! அலங்காரம் பண்ணிக்கொண்டு, டம்பமாக நாலு பேருடன் வம்பளக்கப் புத்தி போகிறது. ஆயாசத்துடன் வரும் புருஷனுக்கு நாக்குக்கு ருசியாக ஏதாவது செய்யலாமென்று தோன்றுகிறதில்லை."

"நேற்றைக்கு அடை பண்ணினேன்; வேண்டாம் என்றீர்கள்."

"நிறுத்து! வார்த்தைக்கு வார்த்தை பதில் பேசினுல் நாக்கை அறுத்துவிடுவேன்! ஜாக்கிரதை! முதலிலே போய், பழைய புடைவையை உடுத்துக்கொண்டு வா. உன் லட்சணத்தைப் புதுப் புடைவையில் பார்க்கச் சகிக்கவில்லை."

"நான் இன்றைக்கு ஒருத்தி வீட்டுக்குப் போகவேண்டும். அவளுக்குக் குழந்தைப் பிறந்திருக்கிறது." இப்போது துக்கத்திலும் கொஞ்சம் கடுமையாகச் சொன்னுள், சுமதி.

"வெளியிலே போகப் போகிருயா? நான் வேலைக்காரனு, காவல் காக்க? வீட்டை விட்டு வெளியேறினுல் இந்த வாசற்படியை அப்புறம் மிதிக்கமாட்டாய்! தெரிந்து கொள்!"

சுமதிக்குத் துக்கம் பீரிட்டுக்கொண்டு அழுகை வந்தது. அம்மா செத்தபோது ஊரார் அழுததைப் பார்த்து அவளும் அழுதாள், இளம் வயசில். அதற்குப் பிறகு அழுகையே அவள் பக்கம் தலை காட்டியதில்லை. அவள் அழுகையை எதிர்ப்பவள்.

ஆனால் வர வர, நாள் செல்லச் செல்ல, கணவனின் உதயாஸ்தமன அவஸ்தையில் அவளுக்கு அழுகை உடன் பிறந்ததுபோல் ஆகிவிட்டது. ஒரு மாதத்தில் என்ன மாறுதல்? ஏன் கணவன் திடீரென்று மாறவேண்டும்? தன் உள்ளத்தில் வலி கண்டபோதுதான், 'மற்ற உள்ளங்களும் இருக்கின்றன; அவற்றுக்கும் வலி உண்டு' என்று சுமதிக்குத் தெரிந்தது.

அவள் வெகு நாட்களாகத் தொடுத்த சுடுசரங்களின் வலியினால் பிறந்த கணவனின் கொடுமைகளை எப்படித் தவிர்ப்பது?

அவள் மௌனம் சாதித்தால், வரதன் நான்கு வீடுகள் கேட்க இரைந்தான். எதைச் செய்தாலும் குற்றம்; எதைத் தொட்டாலும் குற்றம். பேசினால் குற்றம்; மௌனம் சாதித்தால் குற்றம். அவள் பிறந்ததே குற்றமாகிவிட்டது.

ஒரு நாள் எழுந்திருக்கும்போது ஆறு அடித்துவிட்டது.

"என்ன இழவு தூக்கம் வேண்டியிருக்கிறது, ஒரு பெண்பிள்ளைக்கு, ஆறு மணிக்கு மேலே!" என்று அவன் கத்தின கத்தலில் அன்று விடிந்தது.

"தலையை வலிக்கிறது!"

"அதிகம் தூங்கினாலே வலிக்கும்."

கஷ்டப்பட்டுக்கொண்டுதான் அவள் எழுந்தாள். சிரமத்துடன் காபி வைத்தாள். "உன் மூஞ்சி மாதிரி

இருக்கிறது, காபி!'' என்று நடுக் கூடத்தில் தம்ளரை வீசி எறிந்துவிட்டு, ஓட்டலை நோக்கி வரதன் நடந்தான்.

சுமதிக்குத் தாளவில்லை. அவள் மனம் ஒரு மாதமாகத் துவண்டு போயிருந்தது, வெயிலில் காய்ந்த கொடிபோல. உள்ளத்தின் ஒவ்வொரு பாகத்திலும் வரதனுடைய ஊசி முனை வார்த்தைகள் துளைத்துக்கொண் டிருந்தன. தலைவலி, நேரம் செல்லச் செல்ல அதிகமாகி அவளைத் தரையோடு தரையாக ஒடுக்கியது.

ஒன்பது மணிக்கு வரதன் சாப்பிட வந்தான். நடுக் கூடத்தில் படுத்துக்கொண் டிருந்த சுமதியைக் கண்டதும் அவனுடைய ஆத்திரம் பன்மடங்கு ஆயிற்று.

''என்ன தரித்திரம்! படுத்துக்கொண் டிருக்கிறாய்?''

சுமதி பேசவில்லை.

''சோறு ஆக்கியிருக்கிறாயா, இல்லையா?''

''எனக்குத் தள்ளவில்லை'' என்று அவள் நடுங்கிக் கொண்டே சொன்னாள்.

''கழுத்தைப் பிடித்துத் தள்ளினால் தள்ளும்!''

''என் அப்பா அகத்திலே கொண்டுபோய் விட்டு விடுங்கள்'' என்று அவள் முனகினாள். வரதனுடைய முகத்தைப் பார்க்கவே அவளுக்குப் பயமாக இருந்தது.

''உனக்கு ஏதுடீ அப்பன்? என்கிட்டே வந்த அன்றைக்கே அவன் செத்தாச்சே!'' என்று சொல்லி அவன் போய்விட்டான்.

அன்றைப் பொழுது எப்படித்தான் போயிற்றோ! சுமதிக்குத் தெரியாது. கூடத்தில் பட்டப் பட்டினியாகக் கிடந்து, நாள் முழுவதும் தள்ளினாள்.

ஏழு மணிக்கு வரதன் வந்தபோதும் அவள் காலையில் இருந்த நிலைதான். தன் உணர்ச்சிகளை உள்ளடக்கிக் கொண்டு, ''என்ன, அடுப்பு மூட்டவில்லையா?'' என்று இரைந்தான்.

சுமதி பேசவில்லை; பேசும் நிலையில் இல்லை. அவள் மயங்கிக் கிடக்கிறாள் என்று தெரிந்தவுடன் அவளைத் தூக்கி அறையில் இருந்த கட்டிலில் கிடத்தினான்.

அன்று இரவு முழுவதும் சுமதி ஏதேதோ பிதற்றிக் கொண்டே இருந்தாள். 'ஐயோ, ஐயோ!' என்ற அலங் கோல வார்த்தைகள் கணத்திற்குக் கணம் எழுந்தன.

மறுநாள் டாக்டர் வந்தபோது, அவளுடைய நாடி மிகவும் தளர்ந்திருந்தது. "ஏதாவது அதிர்ச்சி ஏற்பட் டதா?" என்று அவர் கேட்டார்.

"ஒன்றும் இல்லை" என்று வரதன் கூறினான்.

"நரம்புகள் ஒரேயடியாகத் தளர்ந்து போயிருக்கின் றன. மனத்தில் ஏதோ பயமும் கிலேசமும் இருக்கவேண் டும். நிம்மதி இல்லாதபோதுதான் இம்மாதிரி திடீரென்று மயக்கம் வரும்."

வரதன் வாய் திறக்கவில்லை.

போகும்போது டாக்டர் சொன்னார்: "மிஸ்டர் வர தன், உங்கள் மனைவி இப்போது இருக்கும் நிலை பயங்கர மானது. மேலும், கர்ப்பமாக இருக்கிறாள்; ஜாக் கிரதை!"

'கர்ப்பம்' என்ற வார்த்தை ஒலித்ததும் ஒரு கணம் சிலையாக நின்றான் அவன். தான் ஒரு குழந்தைக்குத் தகப்பன் ஆகப்போவதை அறிந்ததுமே அவனுக்கு எல் லாம் மறந்துவிட்டன.

"டாக்டர், உயிருக்கு ஒன்றும் ஆபத்து இல்லையே?"

"இல்லை, ஜாக்கிரதையாக இருந்தால்!"

அன்று இரவு ஜன்னி கண்டது. ஜன்னியில் பிதற் றினாள்: "ஐயோ! என்னை வதைக்காதீர்கள். நான் செய்தது தவறுதான்! தெய்வமே! என்னைக் கொண்டு போய்விடு. நான் செய்த தவறுகளுக்கு அநுபவித்தது போதும்! ஐயோ! நான் சரியாக நடக்கிறேன்!"

எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டே கட்டிலின் அருகே வரதன் உட்கார்ந்திருந்தான். அவன் மனத்தில் கற்பித்துக்கொண்டு போன போக்கு எவ்வளவு விபரீதத்தில் கொண்டுபோய் விட்டது! அவன் அவளை மட்டுமா சாக அடித்துக்கொண்டு வருகிறான்? அவள் வயிற்றில் உதித்து வளரும் ரத்தினத்தை மட்டுமா? அவள்மீது சாசுவதமாக எழுந்த அன்பையும் அல்லவா கொன்று கொண்டே இருக்கிறான்? அவனுடைய போக்கு, அவளுடைய மூளையையே அல்லவா சிதற அடித்துவிட்டது!

அவளுடைய தகப்பனார் வந்தபோது, "வரதா, எப்படி ஆரம்பித்தது இது?" என்று கேட்டார்.

"எனக்கே தெரியவில்லை" என்றான் அவன். தன் கதையை யெல்லாம் எப்படிச் சொல்லுவான்?

இரண்டொருவர், "கர்ப்பமானால் இப்படி வருவதுண்டு" என்றார்கள். அவர்களுடைய வார்த்தைகளில் வரதன் ஒளிந்துகொண்டான்.

* * *

மூன்றும் நாள் அவள் கண் விழித்தபோது, வரதன் எதிரே இருப்பதை அரைகுறையாக உணர்ந்ததும் "ஐயோ! போங்கள், போங்கள்! இனி உங்கள் வழிக்கே வரமாட்டேன்! அப்பா, அப்பா! என்னைக் கூட்டிக் கொண்டு போய்விடுங்கள்" என்று அரற்றினாள்.

வரதன் எழுந்து போய்விட்டான். மறுநாள் அவன் அருகில் இருந்தபோது, அவள் நிதானமாகக் கண்களைத் திறந்தாள். அவனைப் பார்த்ததும் ஒன்றும் பேசவில்லை; தலையைத் திருப்பிக்கொண்டாள். முகத்தில் படர்ந்த கூந்தல் கண்களை மறைத்தது.

அதை ஒதுக்கிக்கொண்டே, "சுமதி, சுமதி!" என்று அழைத்தான்.

அவனுடைய கனிவை உணர்ந்துகொண்டாள் சுமதி. ஆனால் அதை எப்படி ஏற்பது என்று தெரியவில்லை. தலையை மட்டும் அவன் பக்கம் திருப்பினாள்.

மீண்டும் வரதனே பேசினான் : "சுமதி, இப்போது எப்படி இருக்கிறது?"

அவள் ஏதோ பேச வாயெடுத்தாள். ஆனால் வார்த்தை புரளவில்லை. வரதனையே பார்த்தாள். அவன் கண்களில் பழைய அன்பு, ஒளி வீசியது.

"என்னை மன்னித்துவிடு, சுமதி! நான் முட்டாள் தனமாக, மிருகமாக, அசுரனாக..." என்று முடிக்காமல். முடித்தான்.

"நானா மன்னிக்கவேண்டும்?" என்று சுமதி கேட்டாள். என்றும் இல்லாத சாந்தம் அவள் ஈனக்குரலில் பிரதிபலித்தது.

"ஆமாம், சுமதி! நீதான் மன்னிக்கவேண்டும்! நீயே தான்! நான் அறிவீனமாக நடந்துகொண்டதன் பலன் தான் நீ இப்படி ஆனாய்!" வரதனின் கண்கள் கலங்கி விட்டன.

"இல்லை, இல்லை. நான் செய்த தப்புக்கு ஏற்ற தண்டனை. என் அறிவீனத்தின் பலன், உங்கள் போக்கு."

வரதன், "இல்லை, இல்லை" என்று சொல்லிக் கொண்டே அவளுடைய தலையை வருடினான். எத்தனை நேரம் அப்படி வருடிக்கொண் டிருந்தானோ அவனுக்கே தெரியாது!

# உள்ளும் புறமும்

தூரத்தே தெரிந்த ஸ்டேஷனை நோக்கி அவன் நடந்துகொண் டிருந்தான். ஒரு கையில் பை; இன்னொன் றில் டிபன் பாத்திரம். ஆஜானுபாகுவாக, நல்ல உயரமாக இருந்த அவனுடைய உடலுக்கு வேஷ்டியின் அகலம் போதவில்லை. கணுக்காலில் நீலக் கரை முடிந்தது. அவன் அணிந்திருந்த கோட்டின் பச்சை வர்ணம் பசுங்கதிரின் ஒளியில் மின்னியது. எதை யெல்லாமோ எண்ணிக் கொண்டு அவன் நடந்தான். அடர்த்தியாக வளர்ந்த புருவங்கள் நெற்றி நடுவில் கூடின. அடிக்கடி அந்தப் புருவங்கள் சுளித்து, விரிந்தபோது, அவனுடைய மனத் தின் எண்ணச் சுழல்களைத்தான் அவை எடுத்துக் காட்டின.

"இன்னும் எத்தனை நாட்களுக்கு - மாதங்களுக்கு - இந்த நிலைமை? இது மாறுமா?...அப்படியானால் எப்படி?' தோல்வியை நினைத்து நினைத்து வருந்தி, கடைசியில் சமா தானம் கிடைக்காமல் தோல்வியையே வெறுப்புக் கலந்த அலட்சியத்துடன் உதறுபவனைப்போல அவன் தன் மனத்தை மாற்றிக்கொள்ள முயன்றான்.

ஸ்டேஷனைச் சமீபித்துக்கொண் டிருக்கையில் அவ னுடைய கண்கள், முன்னால் நடந்துகொண் டிருந்த அவ ளைக் கண்டுபிடித்தன. ஐந்தாறு மாதங்களாகக் காலை யிலும் மாலையிலும் பார்க்கிறான். ஒரே மாதிரியான உடை, நடை, ஒரு கையில் குடை, இன்னொன்றில் ஒரு புத்தகம், டிபன் பாத்திரம், பெண்களின் நாகரிகப் பர்ஸ்.

'இப்படியே அவள் தினம் தினம் போகிருளே; யாருக்காக, எதற்காக? தனக்காகத்தாஞ அல்லது தன்னை அண்டி நிற்கும் ஜீவன்களுக்காகவா? அவளுடைய வாழ்வின் லட்சியமே இந்த நியமத்திலே அடங்கியதுதாஞ? அல்லது வேறு லட்சிய வெற்றிக்கு இது ஆதாரமா?'

அவளுடைய வயசில் எத்தனையோ பெண்கள் குறைந்தது இரண்டு குழந்தைகளுக்காவது தாய்மார்கள். அவர்களுக்கெல்லாம் சமூகமே பாதை வகுத்துவிட்டது. ஆனல் முன்னல் நடப்பவள் தனக்கென்று ஒரு பாதை வகுத்து, அதில் முன்னேறிக்கொண் டிருக்கிருள்.

''அந்தப் பாதை எதில் முடியப்போகிறது?'' இந்தக் கேள்விதான் அவனுக்குள் கடைசியாக எழுந்து, தவித்துக் கொண்டிருக்கும்.

அவன் ஸ்டேஷன் பாலத்தின் இறுதிப் படியில் இருக்கையில் ரெயில் வந்துகொண் டிருந்தது. அப்போது தான் முதற்படியில் காலை வைத்த அவன், தன்னையும் மறந்து விரைந்தான். விரைவின் அதிர்ச்சியில் செருப்பின் வார் ஒன்று அவனைக் கைவிட்டது. அந்த நிலையிலும், 'ஒன்றரை வருஷமாக உழைக்கும் செருப்பு' என்ற எண்ணம் வந்தது. வந்த சுவட்டில் எழுந்த ஆத்திரத்தில் பாலத்துக்கு வெளியே தெரிந்த கற்குவியலில் அதைக் கால்களாலேயே உதறினன். செருப்பு விழுந்துகொண் டிருக்கையிலேயே, 'இன்னமும் உன் உடம்பைக் குத்தித் துளைக்க முடியாதே!' என்ற ஆத்திரந்தான் உதித்தது.

பிளாட்பாரத்திற்குப் பத்துப் படிகள் இருக்கையில், இரட்டை ஊதலின் ஓங்காரம் அவனுடைய விரைவை இரட்டித்தது. கைகளில் பாத்திரமும் பையும் ஆட, ரெயில் அவிழ்த்துவிட்ட ஜன மூட்டை எதிர்த் திசையிலிருந்து தாக்க, அவனுக்குக் கோபமும் எரிச்சலுந்தான் கிளம்பின. தோல்வியை ஒப்புக்கொள்ள முடியாத நிலையில் அவன் வேகத்தை அவனே உணரவில்லை. ஆமை போலத் தொடங்கி, முயல் வேகத்திற்கு ரெயில் மாறிக் கொண்டிருக்கையில், பை இருந்த வலது கையால் பெட்டிக்

கதவின் பிடியை அழுத்திக்கொண்டான். பாலத்தில் செருப்புக் கைவிட்டதுபோல, இப்போது அவனுடைய கால்களே கைவிடலாயின. உடம்போடு பிறந்த அவற்றை மீட்கும் முயற்சியில் அவன் தவிப்பதைக் கண்டு, ஒரு பிரயாணி அவனை உள்ளே வாரி இழுத்தான். கைப்பாத்திரம் தவறிவிட்டது. பாதி சமாளித்துக்கொண் டிருக்கும் போதே, பாத்திரத்தின் அலங்கோல நிலையைக் கண்டான். சிதறி விழுந்த பாத்திரத்தின் மூடி, ஒரு போர்ட்டரின் காலில் பட, அவன் அதையும் லட்சியம் செய்யாமல், பாத்திரத்தை எடுக்கத் துள்ளி, முன்னேறிக்கொண் டிருந்தது கூட அவனுக்குத் தெரிந்தது.

சண்முகம் தன்னை மறந்து ஒரு கணம் நின்றான். முகத்தில், சக்தியின் முத்துக்களைப்போல வியர்வை அரும்பியது. அதன் பாரத்தைத் தாங்க முடியாமல் அவன் கோட்டுப் பையில் இருக்கும் கைக்குட்டையின் நினைவு உதிப்பதற்கு முன்னே, வலது கைப் பையால் துடைத்துக் கொண்டான்.

"பாவம்! மத்தியான்னச் சாப்பாடு, இப்படியா ஆக வேண்டும்?" என்று ஒரு கிழவர் பக்கத்தில் இருப்பவரிடம் சொன்னார்.

"ஏன் ஸார், வண்டி புறப்பட்ட அப்புறம் ஏறத் தெரியாதுன்னு ஏன் ஏர்றீங்க...? அப்புறம் இப்படி அவஸ்தைப்படறீங்க?"

உயிரை மீட்டுக் கொடுத்தவனுடைய வார்த்தைகள் அவனைத் தாக்கின. 'செய்த உதவியைச் சொல்லிக் காட்டுகிறான், மடையன்!'

"நல்ல பாத்திரமா? இப்போது கிடைக்கிறதே கஷ்டம்! யானை விலை, குதிரை விலை!" என்றாள் ஒரு வயது முதிர்ந்த மாது.

"பாத்திரத்தின் விலையை விட்டுத் தள்ளுங்கள்; மனுஷர்களுடைய விலை?" என்று இன்னொரு பெண்மணி துடுக்காகப் பேசினாள்.

சண்முகத்துக்கு இப்போது சிரிப்புத்தான் வந்தது.

'மனுஷனுக்கும் விலை உண்டா? அப்படியானால் என்ன விலை?'

பாத்திரம் கிளப்பிவிட்ட ஆரவாரம் ஓய்ந்தது. அவன் ஓர் இடத்தில் உட்கார்ந்துகொண்டான். எதிரே அந்தப் பெண்! சண்முகம் தன்னைச் சமாளித்துக்கொண்டான்.

"அடுத்த ஸ்டேஷனில் இறங்கித் திரும்பிப் போய் எடுத்துக்கொள்ளலாம், இல்லையா?" என்று அவள் கேட்டாள்.

"பாத்திரம் நசுங்கிவிட்டது. சாதம் கொட்டி விட்டது."

"அப்போது, இன்றைக்கு அவளுக்குச் சாப்பாடு?"

ஒரு கணம் சண்முகத்துக்குத் தூக்கி வாரிப் போட்டது.

'இவளுக்கு எப்படித் தெரிந்தது?' என்ற திகைப்பிலேயே, "ஏதாவது பழத்தைத்தான் வாங்கிக் கொடுக்க வேணும்!" என்றான்.

"நோயாளிகள் சாப்பிடுவதே ஒரு கவளம். அதுவும் இல்லாவிட்டால்?"

சண்முகம் ஒன்றும் பதிலளிக்கவில்லை.

"உங்களுக்கு ஆட்சேபம் இல்லாவிட்டால் இதை நீங்கள் இன்றைக்குக் கொடுக்கலாம். தயிருஞ் சாதமும் ஊறுகாயும்."

"பரவாயில்லை; ஏதாவது பழம்..."

"ஒருவேளைச் சாப்பாட்டைப் பழம் ஈடு செய்யுமா?"

அதற்கப்புறம் அவனும் பேசவில்லை; அவளும் வாய் திறக்கவில்லை.

பூங்கா ஸ்டேஷன் வந்ததும் அவள் குடையையும் மடி மீதிருந்த புத்தகத்தையும் கையில் எடுத்துக்கொண்டாள்.

"இந்தாருங்கள். இதை இன்றைக்குக் கொடுங்கள்." - அவளுடைய பேச்சின் அழுத்தம் சண்முகத்தின் வாயை மூடியது.

அவன் தலையை அசைத்தான். ஏதாவது சொல்லி, தன் நன்றியைத் தெரிவித்துக்கொள்ள வேண்டும் என்று நினைத்தான். ஆனால் வார்த்தைகள் லேசில் வரவில்லை.

வண்டி நின்று, அவள் இறங்கத் தயாராக இருக்கும் போதுதான் ஏதோ ஒரு வேகம் அவனுள் கிளம்பி அவனை உந்திற்று. "அப்போது, பாத்திரம்?" என்று கேட்டான்.

"சாயங்காலம் பார்த்தால் வாங்கிக்கொள்ளு கிறேனே!"

"ஒருவேளை, பார்க்காவிட்டால்?"

"நாளைக்கு வாங்கிக்கொண்டால் போச்சு!"

"வேண்டாம்...விலாசம் கொடுத்தால் கொடுத்தனுப்புகிறேன்!"

"திருவதி அம்மன் கோவில் வீதி.....மூன்றும் நெம்பர்..."

"ரொம்ப வந்தனம்!"

"நான் வருகிறேன்."

சண்முகத்துக்கு அப்போதே டிபன் பாத்திரத்தைத் திறந்து பார்க்கவேண்டும், கண்ணுக்குப் பிடித்தால் ருசித்துப் பார்க்கவேண்டும் என்ற ஆசை உண்டாயிற்று. விவரிக்க முடியாமல் கிளம்பின ஆசையை அவன் ஏனோ பூர்த்தி செய்துகொள்ளவில்லை.

கோட்டையில் இறங்கி, நேராக ஜெனரல் ஆஸ்பத்திரியை நோக்கி நடந்தான். மூன்று மாதங்களாக அவனுடைய கால்களுக்கு வழி தெரியும்.

அவள் அவனுக்காகக் காத்துக்கொண் டிருந்தாள். அவனைக் கண்டதும் அவள் தினசரி கேட்கும் கேள்வி இதுதான். "நீங்கள் நன்ருகச் சாப்பிட்டீர்களா!"

அவன், 'உம்' என்பதோடு நிறுத்திக்கொள்வான்.

அன்றைக்குக் கேள்வியைத் தொடர்ந்து, "இது ஏது பாத்திரம்? நம்ம வீட்டில் இல்லையே! புதிது மாதிரியும் இல்லை" என்ருள் சண்முகத்திடம்.

"ஆமாம்; வேறுதான். ஒரு சிநேகிதரிடமிருந்து வாங்கினேன், இன்றைக்கு மட்டும்."

"அது என்ன ஆச்சு?"

"நேற்றுச் சாயந்தரம் ரெயிலிலேயே வைத்துவிட்டுப் போய்விட்டேன்."

"ஏழுரை ரூபாய்!" என்ருள் அவள், டிபன் பாத்திரத்தைத் திறந்துகொண்டே.

சண்முகத்திற்கு ரெயிலில் தனக்கும் அந்தப் பெண்ணுக்கும் நடந்த சம்பாஷணைதான் நினைவுக்கு வந்தது. உண்மையைச் சொன்னல், கற்பகம் அவனுடைய விலையையும் எடை போடுவாளோ?

"போனல் போகிறது; எத்தனையோ கஷ்டங்களில் இது ஒன்று." சண்முகத்தின் மனத்தில் 'லாபத்தில் நஷ்டம்!' என்ற குரல்தான் கிளம்பியது.

"என்ன, விரக்தியோடு பேசுகிறீர்கள், இன்றைக்கு?'

"ஒன்றும் இல்லை, கற்பகம்?"

"நானே உங்களுக்குத் தீராத் தொல்லையாகப் போய்விட்டேன்; இல்லையா?"

"இல்லை!" என்ருன் சண்முகம். அவனுடைய பொய்யில் கற்பகம் மெய் கண்டால் அதில் அவனுக்குத் திருப்திதான்.

"நாளுக்கு நாள் நீங்கள் துரும்பாகப் போகிறீர்கள்...!" என்று கூறிக்கொண்டே கற்பகம் ஒரு கைச் சாதத்தை எடுத்து, வாயில் போட்டுக்கொண்டாள்.

"அதெல்லாம் ஒன்றும் இல்லே. உன் கண்ணிலே தான் ஏதோ கோளாறு. உன்னைப்பற்றி டாக்டர் என்ன சொல்கிறார்?"

"இன்றைக்கு என்ன எப்படியோ இருக்கிறது, சாதமும் தயிரும்? பச்சரிசிச் சாதமாக இருக்கிறதே?"—கற்பகத்தின் கேள்வி அவனைத் துளைத்தது.

"சிநேகிதர் வீட்டிலேதான் இன்றைக்கு எனக்குச் சாப்பாடு. அவர் சம்சாரம் அப்படியே உனக்கும் எடுத்து வைத்தாள்."

"ஊறுகாய் நன்றாக இருக்கிறது. அதனாலேதான் சாதம் இறங்குகிறது."

"டாக்டர் என்ன சொல்கிறார்?"

"டாக்டர் சொல்கிறதற்கு இனிமேல் என்ன இருக்கிறது?"

சண்முகத்திற்குப் பரிவிற்கிடையிலும் ஆத்திரம் வந்தது. அவள் தன்னிடம் எதிர்பார்த்த பரிவுச் சுமையையும் கடமைச் சுமையையும் அவனால் தாள முடியவில்லை.

கற்பகம் சாப்பிட்டானதும், அவன் குழாயடியில் பாத்திரத்தைக் கழுவினான். அன்று அவன் மனைவிக்கு அன்னமிட்ட பெண்மணியின் உருவந்தான் பாத்திரத்தில், மோர் கலங்கின நீரில் நிழலாடியது.

"கற்பகம், சாயங்காலம் வருகிறேன். பழம் இன்னும் என்ன பாக்கியிருக்கிறது?"

"எல்லாம் தீர்ந்துவிட்டது."

"சரி, எல்லாம் வாங்கிக்கொண்டு வருகிறேன்."

அவன் போகும்போது கற்பகம் அவனையே பார்ப்பது சண்முகத்துக்குத் தெரியும். குழி விழுந்த கண்களிலும் ஜுரத்தில் கன்றினாற்போல் ஆன முகத்திலும் அவள் எதைக் காணுகிறாள்? அவனுடைய விலையை அவள் பார்க்கிற இடத்தில் யாராவது எழுதியிருக்கிறார்களா? ஒருவேளை, கற்பகம் என்னும் ஜீவனுக்கு அவன் இன்றியமையாத, விலைமதிப்பில்லாத பொருளோ?

அன்று சீக்கிரமாகவே காரியாலயத்திலிருந்து கிளம்பின ஷண்முகம் வழக்கம்போலப் பழங்களுடன் கற்பகத்தைப் பார்க்கச் சென்றான். காலையிலாவது அவளால் இரண்டு இரண்டு வார்த்தைகள் தெம்புடன் பேச முடிந்தது. இப்போது அசதி, படுக்கையோடு படுக்கையாகத் தள்ளிவிட்டிருந்தது.

"கற்பகம்!"—அவன் அழைத்தபோது அவளால் கண்களைத்தான் திறக்க முடிந்தது. அவளுடைய உடல் சாதாரணமாகவே மனச் சஞ்சலத்தைத்தான் அளிக்கும். ஆனால் அன்று திடீரென்று நோய், வேறு திருப்பத்தில் பாய்ந்து கலவரத்தைக் கொடுத்துவிட்டது.

"கற்பகம், என்ன இப்படிச் சோர்வடைந்து படுத்துவிட்டாய்?"

பதில் கிட்டவில்லை. தனக்குள் தைரியத்தை இழந்து, வெளியே மற்றவர்க்குத் தைரியமளிக்கும் புன்னகைதான் உதடுகளில் உதித்தது.

சண்முகத்திற்கு அந்தப் புன்னகை, "உங்களுக்கு நிம்மதி அளிக்கப் போகிறேன்" என்று கூறுவதுபோல் தோன்றியது.

பழங்களைத் தட்டில் கொட்டிவிட்டு, "டாக்டரைப் பார்த்துவிட்டு வருகிறேன்" என்று கிளம்பினான்.

டாக்டர் ஏதோ சில வார்த்தைகள் சொல்லிக் கடைசியில் உதட்டைப் பிதுக்கினார்.

"நிம்மதியாகத் தூங்கு, கற்பகம். ராத்திரி டாக்டர் வந்து 'இஞ்செக்ஷன்' தரப்போவதாகச் சொன்னர். நாளைக்கு வருகிறேன்."

ஆஸ்பத்திரியிலிருந்து வெளிவந்த சண்முகத்தின் மனத்தில் கற்பகந்தான் ஒட்டிக்கொண்டாள்.

அவள் ஒன்றரை வருஷமாகவே நோயில் விழுந்தவள். ஆனல் அந்நோய் இதுவரையில் எவ்விதமான கருணையையும் அவனிடம் உண்டாக்கியதில்லை. 'நான்கு பேர் அறிய மனைவியாக்கிக்கொண்டோமே, அதற்காகவாவது எல்லாம் செய்யவேண்டும்' என்ற கடமை உணர்ச்சிதான் அவனிடம் நிலைத்தது. எவ்வளவோ தடவைகள் அவனும் அவளைக் கைவிட முயன்றிருக்கிறன். பெற்றேர் வீட்டில் சேர்த்து, 'இந்தாருங்கள், உங்கள் பண்டம். என்னல் சமாளிக்க முடியாது' என்று சொல்ல நினைத்திருக்கிறன். ஆனலும் அவனையும் மீறிய கடமை என்னும் கட்டை, அவனல் மீற முடியவில்லை. கல்யாணமாகி ஆறு மாதங்களையாவது கற்பகத்துடன் இன்பமாகக் கழித்திருந்தாலாவது, அவனுக்கு எதிலும் வெறுப்புத் தோன்றி இருக்காது. அந்த ஆறு மாதங்களின் இன்ப நாட்களை எண்ணியாவது மனம் தேறி, மனைவியினிடம் கடமை உணர்ச்சியுடன் அன்பையும் காட்டியிருப்பான். வீதியிலே போகிற விதி, தவறிப்போய் அவள் உருவத்தில் தன் வாழ்க்கை என்னும் கிருகத்தில் நுழைந்துவிட்டது என்ற எண்ணமும் அத்துடன் எழுந்த வெறுப்புந்தான் சதா தோன்றிக்கொண் டிருந்தன.

வழக்கமாகக் கோட்டையில் ஏறுபவன் அன்று எழும்பூருக்கு வந்தான். இப்போது கற்பகத்தின் நினைவு எழுந்த சூட்டிலே அந்தப் பெண்ணும் மனத்தில் உதயமானுள். 'என்ன திடகாத்திரம் வாய்ந்த பெண்! ஒரு காரியாலயத்திலே உழைக்கவும் வீட்டிலே சமைக்கவும் பல புத்தகங்களைப் படிக்கவும் சக்தி கொண்டவள்!' அந்தப் பெண்ணிடம் அவன் கண்ட விசேஷங்களை நினைத்துப் பார்த்த போது, அவனுக்கே பெருமையாக இருந்தது. ஏன் பெருமைப்பட வேண்டும் என்றுகூட அவனுக்குத் தெரியவில்லை.

ஒவ்வொரு படிக்கட்டாக ஏறும்போதும் அவனும் அந்தப் பெண்ணுந்தான் மனத் தராசில் நின்றுகொண்டிருந்தார்கள். கற்பகம் இருந்த தட்டு எங்கோ மேலே மேலே போய்க்கொண்டே இருந்தது.

அவன் மனம் குமுறிக் கொந்தளித்தது.

'எனக்கு—வாழ்க்கை வேண்டும் என்று ஏங்குபவனுக்கு-ஏன் இது மாதிரியான வாழ்வு வாய்க்கவேண்டும்!'

அவனுடைய ஆத்திரம் அடங்கினபோது, ஏக்கந்தான் அவனுள் எங்கும் மழை நீர்போலத் தேங்கிக்கொண்டிருந்தது. அந்த ஏக்க உணர்ச்சியில், 'எனக்கு விடுதலையும் நிம்மதியும் இல்லையா?' என்ற கேள்விதான் எழுந்தது.

அந்தப் பெண் வழக்கமாக வரும் ரெயில் வர ஐந்து நிமிஷங்களே இருந்தன. சண்முகத்திற்கு அவள்மீது அலாதியான நாட்டம் உண்டாகிவிட்டது. ஆனால் அது எவ்விதமான திருப்தியையோ நிம்மதியையோ அளிக்கவில்லை. முன்னேறவும் முடியாமல் பின்வாங்கவும் முடியாமல் கலங்குபவனின் திகைப்புத்தான் தோன்றியது அவனிடம். 'வாழ்க்கை வாழ்வதற்கு' என்ற தீர்மானம் தந்த அவன் ஆசையைத் தைரியம் அணைத்துக்கொண்டது.

சில நிமிஷங்களுக்கெல்லாம் வந்த வண்டியில், அவள் இருந்ததைப் பார்த்தும், பார்க்காதவன்போல அவன் அந்தப் பெட்டியிலேயே ஏறினான். கதவின் பக்கந்தான் கூட்டம் இருந்ததே தவிரப் பெஞ்சுகளில் இடம் இருந்தது. அவள் முன்னாலேயே அவன் போய் உட்கார்ந்துகொண்டான்.

அவனைக் கண்டதும் அவள் புன்முறுவல் பூத்தாள். கற்பகத்தின் புன்னகைக்கும் இவளுடைய புன்னகைக்குந்தான் என்ன வித்தியாசம்!

சண்முகம், "உங்கள் சாதம் ரொம்ப நன்றாக இருந்தது" என்றான், பாத்திரத்தைக் கொடுத்துக்கொண்டே.

''தயிர்ச் சாதத்தில் என்ன பிரமாத ருசி இருக்கப் போகிறது?''

''ஊறுகாய்?'' என்ருன் சண்முகம்.

''அதுவுந்தான்.''

''என்னவோ 'அவள்' சொன்னுள்.''

அவளுக்குச் சிரிப்புத்தான் வந்தது. அதற்கப்புறம் அவள் பேசவில்லை. ஓர் ஆங்கிலப் புத்தகத்தை—நிமிஷங்களை விழுங்க உபயோகமான துப்பறியும் புத்தகத்தை—எடுத்துப் பிரித்துவிட்டாள். அவள் அதில் ஊன்றியிருக்கையில் அவன் அவள் உருவத்தில் ஊறினுன். பல கோணங்களில் அவள் அறியாமல் அவளைப் பார்த்தான். ஒவ்வொரு பார்வைக்குப் பின்னும் ஒரு பெருமூச்சுத்தான் உள்ளே கிளம்பி உள்ளேயே அஸ்தமித்தது. கசந்து கொண்டு வருகிற வாழ்க்கையில் தேன் ஊறுமா என்ற ஏக்கம் அவனைக் கவ்விக்கொண்டது.

பல்லாவரம் வந்தபோது அவள் புத்தகத்தை மூடினுள். மூடுகையில் அவள் கண்கள் அவனுடைய கண்களைச் சந்தித்தன. அவனையும் அறியாமல் அவன் தலை தாழ்ந்தது. ஆனுல் அதற்குமுன் அவனுடைய கண்கள் அவள் வீசின புன்னகையைப் பிடித்துக்கொண்டு விட்டன.

இருவரும் சேர்ந்தே இறங்கினுர்கள். பல்லாவரத்திலிருந்து ஒன்றரை மைல் தூரத்தில் பல வீடுகள் நிறைந்த சிற்றூரில் அவள் வாசம் செய்வதாகச் சொன்னுள்.

''அப்படியானுல் ஒரு மைல் வரையில் நம் இருவருக்கும் ஒரே பாதைதான்'' என்ருன் சண்முகம். 'ஒன்றரை மைலுமே ஒரே பாதையானுல்?' என்ற ஆதங்கம் அவனையும் மீறி எழுந்தது.

''ஆமாம்.''

திடீரென்று, "நான் என் மனைவிக்குத்தான் சாதம் எடுத்துப் போகிறேன் என்று உங்களுக்கு எப்படித் தெரிந்தது?" என்று கேட்டான்.

"ஒரு நாள் ரெயிலில் யாரிடமோ சொல்லிக்கொண்டிருந்தது காதில் விழுந்தது. அவளுக்கு இப்போது எப்படி இருக்கிறது? ரொம்ப நாளாக ஆஸ்பத்திரியில் இருக்கிருள் போல் இருக்கிறதே!"

"நித்திய கண்டம் பூர்ணாயுசு..." என்று சொன்ன பிறகு, தான் சொன்ன விதம் சரியல்ல என்று தோன்றிற்று. வார்த்தைகளைத்தான் மீண்டும் வாயில் போட்டு விழுங்க முடியாதே?

"என்ன உடம்பு?"

"குடலிலே கோளாறு. இதுவரையில் ஒரு மருந்துக்கும் அது பதில் சொல்லவில்லை. சொல்லவே சொல்லாது என்று நினைக்கக் கூடிய அளவிற்கு வந்துவிட்டது. அதுவும் இன்றைக்குச் சாயங்காலம் பயங்கரமாகவே மாறிவிட்டது."

"பாவம்! உலகத்திலே யாருக்கு என்ன வந்தாலும் வியாதி மட்டும் வரக்கூடாது. ஒருவருடைய வியாதி மற்றவருக்கு எவ்வளவு மனோவியாதிகளை உண்டாக்கி விடுகிறது!"

"வாஸ்தவம்."

இருவரும் ஏதேதோ பேசிக்கொண்டே போனார்கள். தன் பெயர் நீலமணி என்றும், ஒரு காரியாலயத்தில் 'டைப்' அடித்துப் பிழைப்பதாகவும் சொல்லி நிறுத்திக் கொண்டாள். ஒரு காரியாலயத்தில்,தான் உதவி மானேஜர் என்று சண்முகம் சொன்னபோது, அவளிடம் உண்டான ஆச்சரியத்தையும் திகைப்பையும் அவன் காணத் தவறவில்லை.

முந்நூறு ரூபாய் சம்பளம் வருகிறது. ஆஸ்பத்திரிக்குப் பாதி போகிறது. இவ்வளவுக்கும் காரியாலயத்தின்

சலுகை விதிகளில்தான் அவளுக்கு வைத்தியம் நடக்கிறது.''

அவனுடைய திருப்பம் வந்ததும் அவன் விடை பெற்றுக்கொண்டான். முகத்தில் அடித்த அஸ்தமனச் சூரியனின் பொற்கதிர்களில் அவள் முறுவலித்த புன்னகை சண்முகத்தின் நெஞ்சை அள்ளிக்கொண்டு விட்டது.

தனிமையில் அவளை நினைக்க நினைக்க, 'கற்பகம் என் காலில் குத்தின முள். அந்த முள்ளினிடமிருந்து எனக்கு எப்போது விடுதலை?' என்ற எண்ணங்கள் உதயமாயின.

**நா**ட்கள் சென்றன. சண்முகமும் நீலமணியும் ஒரு நாளைக்கு ஒரு தடவையாவது ரெயிலில் சந்திக்கலானார்கள். கற்பகத்தைப்பற்றி இரண்டு வார்த்தைகள் கேட்டுவிட்டு, உலக வர்த்தமானங்களைப்பற்றி அவனுடன் பேசுவாள். எந்த விஷயத்தையும் நன்ருக அலசிப் பேசும் ஷண்முகத்தின் திறமை அவளைக் கவர்ந்தது: தனக்கு அரசியலிலோ நாட்டின் பொருளாதார விஷயத்திலோ ஏதாவது விளங்காமல் இருந்தால் சண்முகத்திடம் கேட்பாள். அவனுக்கு அப்போதெல்லாம் உண்டாகும் இன்பமும் பெருமையும் எல்லையில்லாதவை.

நாளுக்கு நாள் சண்முகத்தின் மனம் மாறிக்கொண்டிருந்தது. 'எனக்கும் வாழ்வு உண்டு. அடிவானத்தில் உதயமாக இருக்கும் சந்திரனைப்போல் அது இப்போதுதான் ஆரம்பித்திருக்கிறது. அது மேலே மேலே வரவர, தானே நிலவு காய ஆரம்பிக்கும்?' என்று அவன் சிந்தனைகளில் ஈடுபடலானுன்.

'ஆனுல் நிலவை மறைக்க ஒரு மேகம் இருக்கிறதே!' என்ற நினைவும் எழுந்துகொண்டிருந்தது. ஆனுல் சில நாட்களாக இருந்துவந்த கற்பகத்தின் நிலைமை, துக்கத்திலும் ஓர் ஆறுதலை அளித்தது. அந்த விதமாக ஆறுதல் பெறுவது மகா நீசத்தனம் என்று தோன்றியுங்கூட, அவனுல் அந்த ஆறுதலை உணராமல் இருக்க முடியவில்லை.

'நீலமணிக்குப் படிப்பு இருக்கிறது. நல்ல உடற்கட்டும் வேண்டிய அழகும் என்னைக் கொள்ளைகொள்ளும் வசீகரிப்பும் இருக்கின்றன. பேச்சில் நயமும் சாதுரியமும் இருக்கின்றன......அவள் பேசுவதிலிருந்து என்மீது அன்பு இருக்கிறதோ இல்லையோ, கட்டாயமாக வெறுப்பு இல்லை. ......வேளை வந்து, நான் பிரஸ்தாபித்தால் அவள் மறுப்பாளா?'

மறுக்கமாட்டாள் என்ற தைரியமே வந்தது.

ஒரு மாதம் சென்றது.

அன்று 'ஆஸ்பத்திரிக்குச் சென்றவன், அதிகாலையில் திடீரென்று கற்பகம் இறந்துவிட்டாள்' என்றதைக் கேட்டபோது, ஒரு நிமிஷ நேரம் கல்லாக நின்றுவிட்டான். என்றாவது வரக்கூடிய சம்பவந்தான் என்று உள்ளுணர்வு சொன்னாலும், இரண்டு வருஷ காலமாக இருந்த நிழல், மறைந்துவிட்டது என்பதை நினைக்கும்போது அவனால் தாள முடியவில்லை.

மரணத்திற்குப் பிறகு செய்யவேண்டிய காரியங்களையும் கடன்களையும் முடித்துவிட்டு, அவன் பழையபடி தினசரிக் காரியங்களில் ஈடுபடலானான். கற்பகம் என்னும் முள், விலகின பிறகு, அந்த முள், அவனுக்குச் சென்ற காலத்தின் நினைவாகத்தான் இருந்தது. கற்பகத்தின்மீது அவனுக்கு முன்பெல்லாம் அன்பு என்பது பூரணமாக இல்லாவிட்டாலும், மனைவி என்னும் ஸ்தானம் உண்டாக்கின கனிவு உண்டு.

காலம் இப்போது கனிவை வளரச்செய்தது. இறந்து போன மனைவிக்கு வேறு எதையும் தன்னால் அளிக்க முடியாது என்று சண்முகம் நினைத்தான். ஆனால் மனைவியின் ஸ்தானத்தைப் பூர்த்தி செய்து, தன்னுடைய அன்பையெல்லாம் கொட்டவேண்டும் என்ற துடிதுடிப்புத் தோன்றத் தொடங்கியது. நீலமணியைப் பார்த்துப் பத்து நாட்கள் ஆகிவிட்டன. இன்னும் இரண்டு நாட்களில் விஷயத்தை நேருக்கு நேராகச் சொல்லிவிடத் தீர்மானித்தான்.

தீர்மானித்த மூன்ரும் நாள் மாலே.

"நீலமணி, கற்பகம் போய்விட்டாள்...குடும்பத்தில் லக்ஷ்மீகரத்தை வளர்க்கவேணும் என்று நினைக்கும் நான்......"

"வேண்டியதுதான்; பாவம்! அவள் இருக்கக் கொடுத்துவைக்கவில்லே......நீங்கள் தனியாக எத்தனே நாள்தான் இருப்பீர்கள்? இன்னும் சில மாதங்கள் போகட்டுமே யென்று..."

"என் மனம் உனக்குத் தெரியுமென்று நினேக்கிறேன். ......இரண்டு மாதங்களாகவே,கற்பகம் இருக்கும்போதே, எனக்கு உன்னேப்பற்றித்தான்......"

ஏதோ பாம்பை மிதித்தவள்போல நீலமணி ஒரு கணம் துள்ளினுள். பிறகு தன்னேயே சமாளித்துக் கொண்டு, "மிஸ்டர் சண்முகம், நீங்கள் இத்தகைய கடின நெஞ்சுக்காரர் என்று நான் நினேக்கவே இல்லே. பல மாசங்களாகப் பெண்டாட்டியின்மீது உயிரை வைத்துத் தினமும் காலேயிலும் மாலேயிலுமாக ஆஸ்பத்திரிக்குச் சென்று, ஊக்கமளிக்கிருர் என்று உங்களேப் பெரிதாக நினேத்துக்கொண் டிருந்தேன். ஒருவேளே ஆகாரத்தையும் அவள் இழக்கக்கூடாது என்று என் சாப்பாட்டைத் தந்தேன். ஆஸ்பத்திரியில் மனேவி நோயுடன் கிடக்கிருளே, அதனுல் நீங்கள் ஏங்குகிறீர்கள் என்று நினேத்து, உங்கள்மேல் ஏற்பட்ட பரிதாபத்தினுல் பேசினேன்; ஆறுதல் அளிக்க வேண்டும் என்றுதான். இதை யெல்லாம் அஸ்திவாரமாக வைத்துக்கொண்டு, இம்மாதிரி பேச்சை ஆரம்பிக்கிறீர்கள். பெண்டாட்டி இறந்து, பதினேந்து நாள் பூர்த்தியாகவில்லே. அதற்குள்ளாகவா!...சேசே! என்ன பாறை நெஞ்சு!" என்று சொல்லிவிட்டு நீலமணி வேகமாக நடந்தாள். போவதற்குமுன் கடைசியாக, "எனக்குக் கல்யாணம் ஆகிவிட்டது என்று தெரியாதோ?" என்று அழுத்தமாகக் கேட்டாள்.

சண்முகத்தின் தலே தொங்கிவிட்டது. 'நான் வாழப் பிறக்கவில்லே......வாழ நினேத்தாலும் அருகதை இல்லே

என்று சொல்வதுபோல நீலமணி பேசிவிட்டாள்...என்னுடைய விலையைத்தான் சுட்டிக்காட்டி விட்டாளோ?' அவன் நடக்க நடக்க, ஆஸ்பத்திரிக் கட்டிலில் கிடந்த கற்பகத்தின் கடைசித் தூக்கக் கோலந்தான் அவன் முன் தோன்றிக்கொண் டிருந்தது.

–"என்ன சணமுகம்!" என்ற குரல் திடீரென்று அவனைத் தூக்கி வாரிப்போட்டது. தினசரி பார்க்கும் நண்பர்தாம் கூப்பிட்டார்.

கூப்பிட்டவர் தம்முடன் வந்திருந்தவருக்குச் சண்முகத்தை அறிமுகப்படுத்தினர்.

"மிஸ்டர் ஷண்முகம். அஸிஸ்டன்ட் மானேஜர், லேலா கம்பெனியில்...பாவம் உயிருக்கு உயிரான இளம் மனேவியைப் பறிகொடுத்துவிட்டார்........... பாவம்! சதா அதே ஏக்கந்தான்...யாருக்கு என்ன கஷ்டம் வந்தாலும் இவருக்கு இந்தத் துக்கம் வரக்கூடாது."

அந்த நண்பரும் வாய் திறக்கவில்லே. சண்முகத்தாலும் ஒரு வார்த்தை பேச முடியவில்லே. யாரோ இருட்டில் தன் தலேயில் சம்மட்டியால் அடிப்பதுபோன்ற உணர்ச்சிதான் அவன் உடல் முழுதும் வியாபித்துக் கொண் டிருந்தது. அவன் எதைப் பறிகொடுத்தான்? கற்பகத்தையா? நீலமணியையா? அல்லது தன்னேயே தானு? அது அவனுக்கே தெரியவில்லே.

முற்றும்





| | | |
|---|---|---|
| | (ii) Voltage reg... shunt winding open | Spot and rectify if possible. Otherwise replace the regulator. |
| ...rge–battery starves | (i) Low open circuit voltage | Reset. Check cut-out setting also. Refer regulator manual for settings. |
| ...amp goes off, but ... to battery | (i) Cut-out contacts worn burnt | Replace cut-out contacts. |
| | (ii) Cut-out armatures lifted due to shock | Reset cut-out top gap and all electrical settings. |
| | (iii) Open swamp resistor | Replace swamp resistor. |
| ...lamp reappears at ...ds | (i) Separator proud of segments in commutator | Under cut commutator. |
| ... reappearance of ...lamp after engine | (i) Cut-out is developing sticky tendency | Clean cut-out contacts. Check follow through and reset gaps. Reset cut-out |

